بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

"திருக்குர்ஆனுக்கு விஞ்ஞான விளக்க விரிவுரை (தப்சீர்) எழுத வேண்டும் என்ற எண்ணம் ஏன் உங்களுக்குத் தோன்றியது ?" பலர் என்னிடம் கேட்கப்படும் கேள்வி.

**The 100 - A Kanking of the most influential persons in History** என்ற
உலகை மாற்றியமைத்த 100 பேர்கள்" என்ற புத்தகம் எழுதிய மைக்கேல் ஹே ஹார்ட் சொன்னார் :

"நான் சமீபத்தில் கெய்ரோவில் நடைபெற்ற ஒரு இஸ்லாமிய நிகழ்ச்சியில் கலந்து கொண்டேன். அக்கூட்டத்தில் பேசிய இஸ்லாமிய மார்க்க அறிஞர்கள் பலரும் இஸ்லாத்தை ஒரு ஆன்மீக மார்க்கம் என்ற அடிப்படை உணர்வில் பேசினார்களே தவிர, அது கூறும் அறிவியல் குறித்து யாருமே பேசாதது எனக்குப் பெரும் ஏமாற்றமாக இருந்தது.

இஸ்லாத்தில் ஆன்மீகம் ஒரு பகுதி மட்டுமே. மற்றபடி அறிவியல் போக்கிலான மார்க்கமே இஸ்லாம் என்பது எனக்குள்ள அசைக்க முடியாத நம்பிக்கை மட்டுமல்ல; உண்மையும் கூட.! ஆனால் ஏனோ, இஸ்லாமிய அறிஞர்கள் அறிவியல் பக்கமே போக மாட்டேன் என்கிறார்கள்.

அறிவியல் அடிப்படையில் இஸ்லாத்தை விளக்கினால் அல்லவா, இஸ்லாத்தினுடைய சிறப்பும், பெருமானாரின் வாழ்வும் வாக்கும் எந்த அளவுக்கு உலகுக்கு வழிகாட்டும் தன்மையுடையதாக விளங்குகிறது என்பது புலப்படும்.?" என்றார்.

மேலும் தொடர்ந்து பேசிய மைக்கேல் ஹெச்.ஹார்ட் அவர்கள் அங்கே உச்சரித்த ஒரு வார்த்தை மிக முக்கியத்துவம் வாய்ந்தது. அவர் சொன்னார்.
**"Islam is a Scientific way of the life"**

என்ற வாசகம் மிக முக்கியமான ஒரு வார்த்தை. "ஒரு யூதராக இருந்தும், இஸ்லாத்தின் மீது இந்த அளவுக்கு மதிப்பும் மரியாதையும் உடையவராக இருப்பதோடு, தன் உள்ளத்து உணர்வுகளைப் பிசிறில்லாமல் பதிவு செய்ய முற்படும் அவரது நடுநிலைப் போக்கு, அவரின் மீது எனக்கு மிகுந்த திருப்தியையும், மரியாதையும் ஏற்படுத்தியது" என மணவை முஸ்தபா அவர்கள் குறிப்பிடுகிறார்.

பெருமானார் (ஸல்) அவர்களும், அவர்கள் வாயிலாக உலகுக்குக் கிட்டிய திருமறையும், அறிவுத் தேடலின் அவசியத்தை மீண்டும் மீண்டும் வலியுறுத்துவதாகும். இதைக் குறித்து திமிஷ்கு (டமாஸ்கஸ்) பல்கலைக் கழகப் பேராசிரியர் டாக்டர் முஹம்மது இஃப் ஜாஸூன் கதீப் கூறுகிறார் :

"திருக்குர் ஆனில் மொத்தம் 6666 வசனங்கள் உள்ளன. இதில் மார்க்க சட்ட வழிகாட்டும் வசனங்கள் மற்றும் வாழ்வியல் கூறும் வசனங்கள் என புனித திருமறையாம் திருக்குர்ஆனில், இருநூற்று ஐம்பது வசனங்கள்தாம் உள்ளன.

ஆனால், இயற்கையைப் பற்றி ஆராயவும், சிந்திக்கவும், அறிவைச் சிறந்த முறையில் பயன்படுத்தவும், அறிவியல் ஆய்வுகளை சமுதாய வாழ்வின் ஒரு முக்கிய அம்சமாக ஆக்கிக் கொள்ள வேண்டும் என்பதையும், வலியுறுத்தும் திருவசனங்கள் 750 உள்ளன. மேலும் மறைமுக விஞ்ஞானத்தைக் கூறும் வசனங்கள் சுமார் 500 வசனங்களுக்கு மேல் உள்ளன.

அதென்ன மறைமுகமான விஞ்ஞானம்...?

"ஏழு வானங்களையும், அடுக்கடுக்காக எவ்வாறு அல்லாஹ் படைத்திருக்கின்றான் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா?
குர்ஆன் (71:15)

மேற்கண்ட வசனத்தில், அவன் ஏழு வானங்களை அடுக்கடுக்காக அடுக்கி வைத்திருப்பதாக கூறுகிறான். அந்த ஏழு அடுக்குகளையும் நாம் எப்போது கவனித்தோம் ? அல்லாஹ் அதைப் பார்க்கவில்லையா என்கிறானே, நாம் அதை எப்போது பார்த்தோம்?

என்றால் இதுவரையும் இல்லை. இதை விஞ்ஞான வளர்ச்சியால் மட்டுமே காண முடியும். அறிவியல் வளர வளர, அது நமக்கு தெரிய வரும். வளர்ந்து வரும் விஞ்ஞானத்தின் அபார வளர்ச்சியால் இனி, இன்ஷா அல்லாஹ் காண்போம்.

அன்றைய தினம் தான்.இக்குர்ஆன் வசனம் கூறும் நிகழ்வு மெய்பிக்கப்படும். எனவே நமக்கு இதுவரை தெரியவில்லை. விரைவில் தெரிய வரும் வாய்ப்பிருக்கிறது. இதுதான் இப்போது மறைமுக விஞ்ஞானம்.

வாழ்வியல் முறையை விளக்கும் 250 வசனங்களைத் தழுவி பல்லாயிரக்கணக்கான ஃபிக்ஹு கிதாபுகள் எழுதப்பட்டும், அதனையே எல்லா மதரஸாக்களில் போதிக்கப்பட்டும் வருகிறது. நல்லது, வரவேற்கிறோம்.

அதேவேளை, நவீன விஞ்ஞானத்தின் கோட்பாடுகளை மிக எளிமையாக சொல்லிக் காட்டும் குர்ஆன், 750 + 500 = 1250 வசனங்களில் அறிவியலைப் பேசுகிறதே, இதை போதிக்கும் கிதாபுகள் மதரஸாக்களில் பாடம் நடத்தப்படுகிறதா?

வானத்தை உற்று நோக்கும் படி குர்ஆன் பல இடங்களில் சொல்கிறது. அப்படி அதை உற்று நோக்க மத்ரஸாக்களில் ஏதேனும் ஏற்பாடு உண்டா? ஒரு டெலஸ்கோப் இல்லாவிட்டாலும்,ஒரு பைனாகுலர் கூடவா கிடையாது. இனி வரும் காலங்களிலாவது மத்ரஸா நிர்வாகங்கள் இதை முயற்சிக்க வேண்டும்.

ஒரு யூதருக்கு நன்கு புலப்படுகிற அறிவியல் விஷயம், தினம் தினம் குர்ஆனை ஓதும் இஸ்லாமியராகிய நமக்கு மிகத் தாமதமாகப் புரிகிறது. அதுவும் அறிவியல் உலகம் கண்டு பிடித்து வெளியிட்ட பிறகு இது குர்ஆனில் இருக்கிறது என்று சொல்லும் நிலையில்தான் நாம் இருக்கிறோம்.

அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறிய தெல்லாம் ஆன்மீகத்தை மட்டுமல்ல. அறிவியலையும் தான் .

முதலில் வலது புறமாக தலை சீவுங்கள், வலது காலில் செருப்பை முதலில் அணியுங்கள் என்று, வலது வலதாக செயல்களை முற்படுத்தியதும், சிறுநீர் கழித்து விட்டு டேலாக்கட்டி பிடிப்பதிலும், உணவு உண்ட பின் கை விரல்களை சூப்பச் சொல்வதிலும், ஆன்மீகத்தைக் காட்டிலும் அறிவியலே மிகைத்திருக்கிறது.

அறிவியலுக்கென்று ஒரு நபி வந்திருக்கிறார்கள் என்றால் அது அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் மட்டுமே.

அறிவியலை ஏகமாக கூறும் குர்ஆனை யூதர்களும், கிருஸ்தவர்களும், ஜெர்மானியர்களும் ஆய்வு செய்து விஞ்ஞான கண்டுபிடிப்புகளை உலகுக்கு அளிக்கிறார்கள். ஆனால் அதைச் செய்ய வேண்டிய நாம், நமக்கு அருளப்பட்ட குர்ஆனை, பட்டு குஞ்சத்தில் கட்டி உயரமான இடத்தில் வைக்கிறோமே தவிர, அதை படிப்பது கூட இல்லை. பிறகு எப்போது ஆராய?

"மேலும், அவர்கள் இந்த குர்ஆனை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அல்லது அவர்கள் இருதயங்கள் (இருக்கின்றனவே) அவற்றின் மீது பூட்டு போடப்பட்டு விட்டனவா?" (47:24)

நபி (ஸல்) அவர்கள் அறிவுக்கு கொடுக்கும் முக்கியத்துவத்தைப் பாருங்கள்.

முஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களை ஏமன் நாட்டிற்கு கவர்னராகவும், தலைமை நீதிபதியாகவும் நபி (ஸல்) அவர்கள் அனுப்பி வைக்க முடிவு செய்து அவர்களின் திறமையைப் பரிசோதிக்கும் வகையில்,

"ஒரு பிரச்சனைக்கு தீர்வு எப்படி எடுப்பீர்கள்?"

"குர்ஆனிலிருந்து எடுப்பேன்"

"குர்ஆனிலிருப்பதை நீர் பெற்றுக் கொள்ள முடியாவிட்டால் என்ன செய்வீர்?"

"தங்களின் வாழ்வும் வாக்கும் ஒரு சேர அமையப் பெற்ற ஹதீஸ்களில் இருந்து அப்பிரச்சனைக்குரிய தீர்வை எடுப்பேன்"

"ஹதீஸ்களில் இருப்பதை நீர் பெற்றுக் கொள்ள முடியாவிட்டால் என்ன செய்வீர்?"

"அப்பிரச்சனைக்குரிய தீர்வை முழு மூச்சாக, தீவிரமாக ஆராய்ந்து, கற்ற அறிவைக் கொண்டு தீர்வு செய்வேன்"

நபி (ஸல்) அவர்கள் முஆதிப்னு ஜபல் (ரலி) அவர்களின் நெஞ்சைத் தட்டிக் கொடுத்து, வாழ்த்தி துஆ செய்தார்கள்.
( மிஷ்காத் பக்கம் 324, திர்மிதி, அபூதாவூத் )

இதில் குர்ஆன், ஹதீஸ் குறிப்பிடும் விஞ்ஞானத்தை தான் நபி (ஸல்) எதிர்பார்க்கிறார்கள். அதாவது ஆய்வு செய்வதை ஊக்கப் படுத்துகிறார்கள்.

இஸ்லாமிய விஞ்ஞானிகள் என்று கணக்கிட்டால், இந்தியாவில் ஒரு அப்துல் கலாம், பாகிஸ்தானில் ஒரு அப்துல் ஸலாம், இப்படித்தான் அங்கொன்றும் இங்கொன்றுமாக இருக்கிறது. இதில் அப்துல் ஸலாம் தனது "குவாண்டம்" கோட்பாட்டின் கண்டுபிடிப்புக்கு குர்ஆன்தான் வழிகாட்டி என்கிறார். குர்ஆன் கூறும்

''மேலும், நாம் ஒவ்வொன்றையும் ஜோடிகளாய்ப் படைத்திருக்கின்றோம். நீங்கள் இதிலிருந்து படிப்பினை பெறக்கூடும்!" (51:49)

இந்த "ஜோடி ஜோடியாக இறைவன் படைத்திருக்கிறான்" என்ற வசனமே காரணம் என்று குர்ஆனையே சுட்டிக் காட்டினார். இந்த கண்டுபிடிப்புக்காக அப்துல் ஸலாம் அவர்கள் நோபல் பரிசும் பெற்றார்.
இது ஒன்று போதுமா?

உலக மக்கள் தொகை 800 கோடி இதில் குர்ஆனை அணுகி விஞ்ஞான விளக்கம் சொன்ன இஸ்லாமிய விஞ்ஞானிகள் எத்தனை எத்தனை பேர்?

நியாமமாக பார்த்தால், இஸ்லாமியர்களான நாமே விஞ்ஞான கண்டுபிடிப்புகளை உலகுக்கு அளித்திருக்க வேண்டும். அறிவியல் கண்டுபிடிப்புகள், மருத்துவ நுட்பங்கள் போன்றவற்றில் முஸ்லிம்கள்தான் முதலில் இருந்திருக்க வேண்டும். ஏனெனில் குர்ஆனும் ஹதீஸும் நம்மிடம்தான் இருக்கிறது.

மருத்துவத்தை மிகச் சிறப்பாக சொல்லிக் கொடுத்த நபிகளாரின் மருத்துவத்தை கையில் வைத்துக் கொண்டு, யூதர்களிடமும், கிருஸ்தவர்களிடமும் போய் நின்று நாம் மருத்துவ விஞ்ஞானத்தை எதிர்நோக்க வேண்டிய அவலம் இன்னும் இருக்கிறது.

இது உலகக் கல்வி, இது மார்க்க கல்வி என்று தனித் தனியாக பிரித்தததில்தான் இஸ்லாமியர் ஆரம்பத்திலேயே சறுகி விட்டனர். இதுவே முதல் கோணல், உலகக் கல்வியென கூறப்படும் விஞ்ஞான தத்துவத்தை குர்ஆன் உங்களுக்கு உரைத்துக் காட்டவில்லையா? பின் ஏன் நீங்கள் விஞ்ஞானத்தை உலகக் கல்வி என்றும், குர்ஆனை மார்க்கக் கல்வி என்றும் திரை போட்டு பிரித்தீர்கள்?

இந்த குர்ஆனில்தான் எய்ட்ஸ்சுக்கும், கேன்சருக்கும் மருந்து இருக்கிறது!

இந்த குர்ஆனில்தான் மூன்றாம் உலகப் போரை தடுத்து நிறுத்தி வைக்கும் அமைதியான ஆற்றல் இருக்கிறது!

இந்த குர்ஆனில்தான் உலகத்தை நடுநிலையான நீதியின் பக்கம் கொண்டு வரும் நியாயம் இருக்கிறது!

وَلَقَدْ صَرَّفْنَا لِلنَّاسِ فِىْ هٰذَا الْقُرْاٰنِ مِنْ كُلِّ مَثَلٍ فَاَبٰۤى اَكْثَرُ النَّاسِ اِلَّا كُفُوْرًا
நிச்சயமாக, இந்த குர்ஆனில் மனிதர்களுக்காக சகலவிதமான உதாரணங்களையும் (மிகவும் தெளிவாக) விவரித்துள்ளோம்; எனினும், மனிதர்களில் மிகுதியானவர்கள் (இதை) நிராகரிக்காதிருக்கவில்லை.
(குர்ஆன் : 17:89)

எனவே திருக்குர்ஆனுக்கு விஞ்ஞான விளக்க விரிவுரை (தப்சீர்) எழுத வேண்டும் என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது.

ரஹ்மத் ராஜகுமாரன்

+919360181033 /// +919443446903

**"நபி (ஸல்) அவர்களின் குணம் குர்ஆனாகவே இருந்தது"-**
அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்
உலகத்தில் வாழ்ந்து மறைந்த எந்த மனிதரைப் பற்றி முழுமையாக அறிந்து கொள்ள வேண்டுமானாலும் அவருடைய தனிப்பட்ட வாழ்க்கையை ஆராய வேண்டும் என்பது அனைவரும் அறிந்த ஒன்றே!
அவரது வாழ்வில் நடந்த நிகழ்வுகளைக் கொண்டு தான் அவரது குணநலன்கள் என்ன? பழக்கவழக்கங்கள் என்ன? அவருக்கு எது பிடிக்கும்? எது பிடிக்காது? என்பன போன்றவற்றை அறிந்து கொள்வது சாத்தியமாகும்.
ஆனால் இந்தப் பொதுவிதியிலிருந்து அகிலத்திற்கு ஓர் அருட்கொடையாக அனுப்பப்பட்ட முஹம்மது (ஸல்) அவர்கள் விலக்கு பெறுகிறார்கள்.
ஆம்! நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது வாழ்வுதனை முழுமையாக அறிந்து கொள்ள நம் முன் இரண்டு வழிமுறைகள் உள்ளன.
ஒன்று, அவர்கள் வாழ்வில் நடந்த சம்பவங்களைக் கொண்டு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கை முறையை அறிந்து கொள்வது. இது எல்லாருக்குமான பொது வழிமுறையாகும்.
மற்றொன்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மட்டுமே உள்ள தனிச்சிறப்பானது. அது தான் இப்புனித ரமலானில் அருளப்பட்ட திருக்குர்ஆன்.
திருக்குர்ஆன் வாயிலாகவும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எப்படி வாழ்ந்துள்ளார்கள் என்பதைத் தெளிவாகவும், உறுதியாகவும் அறிந்து கொள்ளலாம்.

குர்ஆன் என்பது மக்களைப் பண்படுத்த, நேர்வழிப்படுத்த, நல்வழிப்படுத்த அருளப்பட்ட பொது வேதமாயிற்றே! இதில் மனிதர்களுக்கான அறிவுரைகளும் ஆர்வமூட்டல்களும் தானே இருக்கும்? இத்தகு குர்ஆன் மூலமாக எப்படி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கையை அறிந்து கொள்ள முடியும்? என்று சற்றே நெருடலாகத் தோன்றலாம்.
முழு மனித சமுதாயத்திற்கும் வழிகாட்ட அருளப்பட்ட வான்மறை வேதமாகத் திருக்குர்ஆன் திகழ்ந்தாலும் குர்ஆனையும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும் பிரித்து பார்ப்பது பகலையும், சூரியனையும் பிரித்துப் பார்ப்பதற்குச் சமமானதாகும்.
திருக்குர்ஆன் வேறு, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கை வேறு என்று பிரித்துப் பார்க்க முடியாத வகையில் குர்ஆனோடு ஒன்றிப் பிணைந்ததாக , நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கை இருந்தது.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நபித்துவத்தை அடைந்து திருக்குர்ஆன் அருளப்பெற்றதிலிருந்து அன்னாரது வாழ்க்கை திருக்குர்ஆனின் ஒவ்வொரு சொல்லையும் பிரதிபலிப்பதாக இருந்தது.

குர்ஆன் பாய்ச்சிய ஒளியினாலேயே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கைப் பாதையை வெளிச்சமுள்ளதாக ஆக்கியிருந்தார்கள்.
இதை அன்னை ஆயிஷா ரலி அவர்கள் தெளிவாக விளக்குகிறார்கள்
"நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்களின் குணத்தைப் பற்றி எனக்குச் சொல்லுங்கள் என்று கேட்டேன். அதற்கு அவர்கள் நபி (ஸல்) அவர்களின் குணம் குர்ஆனாகவே இருந்தது " என்று கூறினார்கள்.
அறிவிப்பவர்: சஃத் பின் ஹிஷாம்; நூல்: அஹ்மத் 24139

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குணநலண்கள் என்னென்ன என்பதை அறிய எங்கும் அலைய வேண்டியதில்லை. திருக்குர்ஆனை வாசித்தாலே போதுமானது.
திருக்குர்ஆன் எதைப் போதிக்கின்றதோ அது தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கை என்று இரத்தினச் சுருக்கமாக நபியின் வாழ்க்கையை அன்னையவர்கள் விளக்கி விட்டார்கள்.
குர்ஆனின் கட்டளைகளையும், அதற்கேற்ற வகையில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நடந்து கொண்டதையும் அறிந்து கொண்டால் அன்னை ஆயிஷா (ரலி) சொன்னது நூற்றுக்கு நூறு சதவிகிதம் உண்மையென்ற நம்பிக்கை நம் உள்ளத்தில் அதிக வலுப்பெறும்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குணம் குர்ஆனாகவே இருந்தது என்றால், திருக்குர்ஆனுக்கு விளக்கவுரை ( தஃப்ஸீர் ) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வரலாற்றுப் பின்னணியோடு யாரேனும் தஃப்ஸீர் எழுதி இருக்கிறார்களா ? உங்களுக்கு தெரிந்தால், எனக்குத் தெரியப்படுத்தவும்.

**Rahmath Rajakumaran**
நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு எழுத்து வடிவில் திருக்குர்ஆன் அருளப்பட்டது என்று சிலர் தவறாகக் கூறி வருகின்றனர். திருக்குர்ஆன் 6:7 வசனம் அவர்களுக்கு நேரடியான மறுப்பாக உள்ளது.
எழுத்து வடிவில் தந்திருந்தாலும் இவர்கள் ஏற்க மாட்டார்கள்' என்று கூறப்படுவதில் எழுத்து வடிவில் அருளப்படவில்லை' என்ற கருத்து அடங்கியுள்ளதை அறியலாம்.
வானத்திலிருந்து அவர்களுக்கு வேதத்தை நீர் இறக்க வேண்டும் என்று வேதமுடையோர் உம்மிடம் கேட்கின்றனர். (திருக்குர்ஆன் 4:153)
எழுத்து வடிவமாக ஒரு நூல் வானிலிருந்து இறங்க வேண்டும் என அன்றைய மக்கள் கேட்டதிலிருந்து அவ்வாறு அருளப்படவில்லை என்பதை ஐயத்திற்கிடமின்றி அறியலாம்.

இவ்வேதம் எழுத்து வடிவில் அருளப்படவில்லை. மாறாக ஜிப்ரீல் என்ற வானவர் மூலம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் உள்ளத்தில் பதிவு செய்யப்பட்டது என்று திருக்குர்ஆன் கூறுகிறது. (குர்ஆன் 2:97, 26:194) எழுத்து வடிவில் அருளப்பட்டிருந்தால் இவ்வாறு கூறப்பட்டிருக்காது.
ஜிப்ரீல் ஓதிக் காட்டி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மனதில் பதியவைத்துக் கொண்டார்களே தவிர எழுத்து வடிவில் பெற்று சேகரித்துக் கொள்ளவில்லை.
உமது நாவை இதற்காக அவசரப் பட்டு அசைக்காதீர். அதைத் திரட்டுவதும், ஓதச் செய்வதும் நம்மைச் சேர்ந்தது. எனவே நாம் அதை ஓதும்போது அந்த ஓதுதலைப் பின்பற்றுவீராக! பின்னர் அதைத் தெளிவுபடுத்துவது நம்மைச் சேர்ந்தது. (திருக்குர்ஆன் 75:16-19)
ஜிப்ரீல் (அலை) அவர்கள், குர்ஆனை எழுத்து வடிவில் கொடுத்திருந்தால் அவசரம் அவசரமாக நபிகள் நாயகம் (ஸல்) மனனம் செய்ய முயற்சிக்க வேண்டியதில்லை. ஜிப்ரீல் போன பிறகு எழுதியதை வாசிக்கச் செய்து மனதில் பதிய வைத்துக் கொள்ள முடியும்.
எழுத்து வடிவில் இல்லாததால் தான் மறந்து விடுமோ என்று பயந்து தமது நாவை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வேக வேகமாக அசைக்கிறார்கள். அவ்வாறு அசைக்கத் தேவையில்லை. உள்ளத்தில் பதிவு செய்ய வைப்பது என்னுடைய வேலை' என்று இறைவன் பொறுப்பேற்கிறான். எழுத்து வடிவில் திருக்குர்ஆன் அருளப்படவே இல்லை என்பதற்கு இதுவும் மிகத் தெளிவான சான்று.
உமக்கு நாம் ஓதிக்காட்டுவோம். நீர் மறக்க மாட்டீர். அல்லாஹ் நாடியதைத் தவிர. அவன் பகிரங்கமானதையும், மறைவானதையும் அறிகிறான். (திருக் குர்ஆன் 87 : 6, 7)
நாம் உமக்கு ஓதிக் காட்டுவோம் என்ற வாசகம் எழுத்து வடிவில் அருளப் படவில்லை என்பதைக் கூறுகிறது. அதை நீர் மறக்க மாட்டீர் என்பது மேலும் இதை வலுப்படுத்துகிறது. மறக்க முடியாத நினைவாற்றல் வழங்கப்பட்டிருப்பதால் எழுத்து வடிவம் அவர்களுக்குத் தேவையில்லை என்பதும் உணரப்படுகிறது.
எனவே திருக்குர்ஆன் எழுத்து வடிவில் அருளப்படவே இல்லை என்பது சந்தேகமற நிரூபணமாகிறது.
நபிகள் நாயகத்திற்கு எழுதவும், படிக்கவும் தெரியாது என்று திருக்குர்ஆன் பல வசனங்களில் தெளிவுபடுத்துகின்றது. எழுதப் படிக்கத் தெரியாத நபிகள் நாயகத்திற்கு எழுத்து வடிவில் திருக்குர்ஆன் அருளப்பட்டிருக்க முடியாது என்பதும் தெளிவாகின்றது.
(இக்குறிப்பிற்கான வசனங்கள்: 2:97, 6:7, 20:114, 75:16, 75:18)

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 37**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 1)**




மின்னல் உருவாகும் போது ஏற்படும் அதிகப்படியான வெப்பம் சுற்றியுள்ள காற்றினை சூடாக்குகிறது, இது சூரியனின் மேற்பரப்பு வெப்பத்தை போன்று ஆறுமடங்கு அதிகமாக இருக்கும் ! இந்த சூடான காற்று உடனடியாக குளிர்வதால் அதாவது ஆற்றல் மாற்றம் அடைவதாக ஏற்படும் அதிர்வினால் ஒலியாக வெளிப்படும், இதையே இடி என்கிறோம்.
திருக்குர்ஆனின் 13ஆவது அத்தியாயம் அர்ரஅத் என்பதாகும். அர்ரஅத் என்பதற்கு அதிர்வு. இடிமுழக்கம், இடி ஆகிய பொருள்கள் அகராதியில் காணப்படுகின்றன.
இந்த அத்தியாயத்தின் 13ஆவது வசனத்தில், " இடி அவனைப் புகழ்ந்து துதிக்கிறது" என அல்லாஹ் குறிப்பிடுகின்றான் இதற்கு முக்கியத்துவம் அளித்து அத்தியாயத்திற்கே அர்ரஅத் (இடி) எனப் பெயர் சூட்டப்பட்டுள்ளது. மழை மேகத்தில் ஏற்படும் ஒரு பேரொலியே இடி (Thunder) எனப்படுகிறது.
இறைவனுடைய புகழான இடியின் இறைத் துதியால் நிலத்திலும் நீரிலும் பாதிப்பு ஏற்படுமா ?
ஆய்வோம்.

முதலில் இடியும் மின்னலும் எவ்வாறு தோன்றுகின்றன ?
கடல், ஏரி ஆறு போன்ற நீர்ப்பரப்புகளிலிருந்து வெப்பத்தில் நீர் ஆவியாக மாறி மேலே செல்லும் இதற்கு நீராவி (Steam) என்று பெயர் வெப்பம் குறைவான உயரத்தை எட்டியதும் நீராவி நீர் திவலைகளாக மாறும் பூமியிலிருந்து பார்க்கும்போது புகை போன்று காட்சியளிக்கும் இதுதான் மேகம் ஆகும்.
மேகத்துக்குள் அல்லது இரு மேகங்களுக்கு இடையில் அல்லது மேகம் மற்றும் காற்றுக்கு இடையில் அழுத்தம் ஏற்பட்டு மின் ஆற்றலைப் பெறும்போது உருவாகும் ஒளிப்பிழம்பே (மின்னல் (Lighthing) ஆகும்.

மின்னலின் அலை பாயும் பகுதியில் உள்ள காற்று துரிதமாக வெப்பமடைவதால் இடி உருவாகிறது.
வெப்பமடைந்த காற்று அதிவேகத்தில் விரிவடைந்து அதிர்வு அலை ஓரிரு மீட்டருக்குள் ஒலி அலையாக மாறும்போது, குறுக்கிடும் காற்று மற்றும் இடவியல்பு காரணமாகத் தொடர்ச்சியான இடி குமுறலையும் ஆர்ப்பரிக்கும் ஒலிகளையும் எழுப்பகிறது (பிரிட்டானிகா தகவல் களஞ்சியம்)
இதையெல்லாம் நிகழ்த்துபவன் சர்வ வல்லமை மிக்க அல்லாஹ்தான் இடி எழுப்பும் பேரொலி அந்த வல்லவனைப் போற்றிப் புகழும் முழக்கம்தான் என அந்த வசனம் தெரிவிக்கின்றது.
நமது அறிவியல் இதுவரை கண்டுபிடித்ததிலேயே அதீத மின்னோட்டம் இருப்பது மின்னற் கீற்றுகளில் மட்டுமே!

இதுவரை பதிவான மின்னற் கீற்றுகளிலேயே மிகப் பெரியதாக பதிவாகியிருப்பது, கடந்த பிப்ரவரி மாதம் (2022) 7ம் தேதி, தென் அமெரிக்காவின் டெக்ஸாஸ், லூசியானா, மிஸ்ஸிஸிப்பி ஆகிய மூன்று மாகாணங்களிலும் பரவிய ஒரேயொரு மின்னல் கீற்று சுமார் 800 கிலோமீட்டர்கள் நீளமாக இருந்தது.
இதுவரை உலகம் கண்டதிலேயே இதுதான் மிகப் பெரியது ஆகும்.
அது போக, கடந்த 2020ம் ஆண்டு, ஜூன் 18ம் தேதி, உருகுவே மற்றும் வடக்கு அர்ஜெண்டினா இடையில் 17.1 வினாடிகள் நீடித்த மின்னற் கீற்று உலகில் பதிவான அதிக நேரம் நீண்ட மின்னற் கீற்றாகும்.
இவை இரண்டிலுமே சில பில்லியன் வோல்ட்கள் பதிவானதாக உலக வானிலையியல் அமைப்பு தெரிவித்துள்ளது.
ஆனால், நிலத்திற்கு மேலே இருக்கும் மேகங்களில் மின்னற் கீற்று உண்டாவதைவிட, கடல்களின் மேலே தான் அதிகம் உண்டாகும்.ஏனெனில் அங்கே தான் மேகக் கூட்டமும் அதிகம். அங்கே தான் இடியும் மின்னலும் அதிகம்.

ஒவ்வொரு மின்னற் கீற்றும் குறைந்தபட்சம் ஒரு பில்லியன் வோல்ட் மின்சாரத்தைக் கொண்டிருக்கலாம் என்று கணக்கிடுகிறார்கள். உலகில் நிலத்தைத் தாக்கும் மின்னல்களைவிட, கடல்களில் விழும் மின்னல்கள் தான் அதிக எண்ணிக்கையாகும். இது படைத்த இறைவனின் மாபெரும் கருணை ஆகும்
எப்போதாவது கடலில் காற்றழுத்தத் தாழ்வு மண்டலமோ அல்லது புயல் உருவான காலத்திலோ கடற்கரைக்குச் சென்றிருக்கிறீர்களா? அப்போதெல்லாம் அதீத மேகக் கூட்டங்களும் மின்னல்களும் அங்கே ஏற்படும். அப்போதெல்லாம் கடற்கரையில் தண்ணீரில் இருக்கும் மக்களை மின்னல் தாக்கியதாக எந்தச் செய்தியும் இதுவரை பதியப்படவில்லை.
கடலுக்குள் இருக்கும் கப்பல்கள் எல்லாம் தாக்கப்பட்டிருக்கும் செய்திகள் உண்டு. ஆனால் கடற்கரையில் இருப்பவர்களைத் தாக்கியதாக ஏதுவும் பதிவானதாக இதுவரை எந்தப் பதிவும் இல்லை!

கடற்கரையில் இருந்து காணும் தூரத்திலோ அல்லது காணாத தூரத்திலோ உண்டாகும் மின்னல்கள் கடலைத் தீண்டும் போது, பக்கத்துக் கரையில் இருக்கும் நமக்கே ஒன்றும் ஆகவில்லை.
ஆக, புயலுக்கோ தாழ்வு மண்டலத்திற்கோ அருகில் இருக்கும் கரைக்கே அது பரவுவதில்லை எனில், எதிர்க்கரை, அதாவது பலமடங்கு தூரத்தில் இருக்கும் கரையையும் இக்கரையையும் கடந்து செல்ல பல கோடி பில்லியன் வோல்ட் மின்சாரம் தேவைப்படும்!
அவ்வளவு மின்சாரத்திற்கு ஆதாரமாக நாம் இதுவரை ஏதும் கண்டு பிடிக்கவில்லை. இனி எதிர்காலத்தில் வேண்டுமானால் கண்டு பிடிக்கப்படலாம்!
கடல் நீரைப் பொறுத்தவரை, மின் அயனிகளை உருவாக்க மூலக்கூறுகளில் இருந்து எலக்ட்ரான்களை வெளியேற்றத் தேவையில்லை. ஏனெனில் கடல் நீரில் ஏற்கனவே அயனிகள் அதிகம் உள்ளது. ஆக, காற்றினைப் போல் அல்லாமல், கடல் நீரை மின்னல் தாக்கும் நொடியிலேயே, கடல் நீர் முழுக்க மின்னோட்டமானது விரவிப் படரும். காற்றைப் போலில்லாமல், கடத்திகளுடன் கூடிய கடலின் அளவு பெரியது அல்லவா? மின்னற் கீற்றின் அளவிற்கும் கடலுக்கும் ஒரு ஒப்புமைப் படுத்திப் பாருங்கள். கடலின் பரப்பு மிக மிகப் பெரியது.

கடலின் அளவு பெரியாதாக இருப்பதால், அதற்குள் மின்னூட்டம் வலுவிழந்துவிடுகிறது! வினாடிக்கும் குறைவான நேரத்தில் வலுவிழக்க இரண்டு காரணங்கள்.
கடலின் மிகப் பெரும் ஆழம் மற்றும் பரப்பு
வேகமாகக் கடத்து பண்பு
வேகமாகக் கடத்தப்படும் பண்பால், கடலின் பரப்பைத் தொட்டதுமே மின்னூட்டம் மிகப் பெரும் தூரத்துக்கும் ஆழத்திற்கும் கடத்தப்பட்டு, வலுவிழந்து விடும். எனவே, மின்னல் விழும் பகுதிக்கும் வெகு அருகில் வெறும் 10 மீட்டர்களுக்குள் இருக்கும் உயிரினங்கள் கூட மிகவும் மெல்லிய மின்னதிர்வுகளையே உணருமே தவிர பாதிப்படையாது.அவைகளின் உயிருக்கெல்லாம் கூட ஆபத்து ஏதுமில்லை.
இடி-மின்னலின் போது வானில் பறக்கும் விமானங்கள் தாக்கப்படுமா என்றால் தாக்கப்படாது. காரணம்

பூமியின் வளிமண்டலமானது ஐந்து அடுக்குகளாக பிரிக்கப்பட்டுள்ளது. முதல் அடுக்கான ட்ரப்போஸ்பியரில் தான் பெரும்பாலான வானிலை மாற்றங்கள் ஏற்படுகின்றன. இடி, மின்னல் மற்றும் மழைக்கு காரணமான மேகங்கள் இந்த அடுக்கில் தான் காணப்படுகின்றன ஆனால் விமானங்கள் இதற்கு அடுத்த அடுக்கான ஸ்ட்ரட்டோஸ்பியரில் பறக்கின்றன. அதனால் தான் வானிலை மாற்றங்களால் விமானத்திற்கு எந்தவித பாதிப்பும் ஏற்படுவதில்லை. (படம் 2)
சரி விமானங்கள் தரையிறங்கும் போது உள் அடுக்கிற்கு வந்து தானே ஆக வேண்டும். அப்போது இடி மின்னலால் எந்த பாதிப்பும் ஏற்படாதா? என்று நீங்கள் கேட்பது என் காதில் கேட்கிறது.
“மின்னலின் போது வெட்டவெளியில் நிற்பதை விட காரில் இருப்பது பாதுகாப்பானது” என்று நாம் பள்ளியில் படித்து இருக்கிறோம் அல்லவா?
ஏனெனில் மூடிய உலோக சுற்றின் வழியே பாயும் மின்னோட்டமானது அதன் உட்புறம் எந்தவித பாதிப்பையும் ஏற்படுத்தாது. இதனை ஃபாரடே விளைவு என்பர்.
விமானத்திலும் நாம் மூடிய உலோக/அலோக சுற்றின் வழியே பயணிப்பதால் நமக்கு எந்த ஆபத்தும் ஏற்படாது.
விமானத்தை சுற்றி பாய்ந்த மின்னோட்டமானது அடுத்து தரையிறங்க முடியாத காரணத்தினால் காற்றில் சென்றுவிடும். இதனால் விமானத்திற்கும் எந்தவித பெரிய பிரச்சனையும் ஏற்படாது. மின்னோட்டம் பாய்ந்து வெளியேறும் இடம் மட்டும் சற்று பாதிப்படைந்தாலும் கணக்கில் எடுத்து கொள்ளும் அளவிற்கு இருக்காது.
இதெல்லாம் வல்ல ரஹ்மானின் மாபெரும் கருணையல்லவா

**Rahmat Rajakumaran**
ஒரு வியாபாரியின் முழுவேஷத்தையும் கழற்றி விட்டு ஓர் ஆய்வாளனாக இருந்து நேரத்தை பார்க்கிறேன்.
சுவர்க் கடிகாரத்தையோ, கைக் கடிகாரத்தையோ பார்த்து மனம் பதற்றம் அடையவில்லை இப்போது.
எந்தப் புத்தகத்தையும் அவசர அவசர புரட்டுவதில்லை. தென்படும் கிடைத்த குறிப்போடு பதிவுக்குப் போகாமல், அதன் கருத்து தெளிவாகும்வரை தேடிக்கொண்டே இருக்கிறேன்.
கடந்த கால அவசரத்தில் பிடிபடாத எத்தனையோ அர்த்தங்கள் மிக எளிதாக அமிர்தமாகின்றன.
அட , கடந்த காலத்தில் எத்தனை எத்தனை சிறைப்பட்டிருக்கிறேன். இப்போ, ஆஹா, எவ்வளவு சுதந்திரம் கிடைக்கிறது என்பதையும்,
வாழ்க்கை எவ்வளவு அழகாக மிச்சம் இருக்கிறது என்பதையும் வியப்புடன் நினைக்கிறேன்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 38**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 2)**

سُورَةُ الرَّعْدِ

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

الٓمٓرۚ تِلْكَ ءَايَٰتُ ٱلْكِتَٰبِۗ وَٱلَّذِىٓ أُنزِلَ إِلَيْكَ مِن رَّبِّكَ ٱلْحَقُّ
وَلَٰكِنَّ أَكْثَرَ ٱلنَّاسِ لَا يُؤْمِنُونَ ١

الٓمّٓرٰ
"அலிஃப், லாம், மீம், றா." - இந்த 4 எழுத்துக்களுக்கும் என்ன விளக்கம் என்பதை தெரிவிக்கப்படாமல், இவை வேதத்தின் வசனங்களாகும். மேலும் (நபியே!) உம் மீது, உம் இறைவனிடமிருந்து அருளப்பட்டுள்ள இது உண்மையாகும் - எனினும் மனிதர்களில் பெரும்பாலோர் (இதனை) நம்புவதில்லை. (அல்குர்ஆன் : 13:1)
அரபி எழுத்துக்கள் மொத்தம் 28 . அதில் நேர் பாதி 14 எழுத்துக்களை இறைவன் 29 அத்தியாயங்களின் தலைப்புகளில் தனித்தனியாக ஓத வேண்டிய சங்கேத எழுத்துக்களைப் பயன்படுத்தியுள்ளான் .
அவற்றை அரபு மொழியில் "ஹுருபுல் முகத்தஆத் "எனக் குறிப்பிடுவர்.
உலகில் வேறு எந்த மொழியிலும் , எந்த நூலிலும் காண இயலாத தனிச் சிறப்புடையது இந்த ஹுருபுல் முகத்தஆத் எழுத்துக்கள் .
சங்கே எழுத்துக்கள் 29 சூராக்களின் தலைப்பில் இடம் பெற்றுள்ளன.
அந்த 29 அத்தியாயங்களை கீழே கொடுக்கப்பட்டுள்ளது .

1. அலிஃப்; லாம்; மீம்.
(அல்குர்ஆன் : 2:1)
2 . அலிஃப்; லாம் ; மீம் (3:1)
3 . அலிஃப், லாம், மீம், ஸாத் ( 7:1)
4. அலிஃப்; லாம்; றா (10:1)
5. அலிஃப் ;லாம் : றா ( 11:1)
6. அலிஃப்: லாம் ;றா ( 12 : 1 )
7. அலிஃப் ;லாம் ; மீம் : றா (13:1 )
8. அலிஃப் ;லாம் ;றா (14 : 1)
9. அலிஃப் : லாம் ; றா (15:1)
10. காஃப்; ஹா: யா; ஐன் : ஸாத் (19:1)
11. தா ; ஹா (20 :1 )
12 . தா : ஸீம் ; மீம் (26:1)
13. தா; ஸீன் (27 : 1 )
14 . தா ; ஸீம் : மீம் (28 : 1 )
15. அலிஃப் ;லாம் : மீம் (29:1)
16 . அலிஃப் ; லாம் ; மீம் (30:1)
17 . அலிஃப் ;லாம் ; மீம் (31:1)
18 . அலிஃப் ; லாம் ; மீம் (32 : 1)
19. யா ; ஸீன் (36 : 1 )
20 . ஸாத் ( 38 : 1 )
21 .ஹா : மீம் (40 : 1 )
22 . ஹா ; மீம் (41 :1)
23 .ஹா ; மீம் ; ஐன் ; ஸீன் ; காஃப் (42 : 1 )
24 .ஹா : மீம் ( 43 : 1 )
25. ஹா ; மீம் (44 : 1 )
26. ஹா ; மீம் (45 : 1 )

27. ஹா ; மீம் (46 : 1 )

28. காஃப் (50 : 1 )

29 .நூன் (68 : 1 )

இந்த ரஃது அத்தியாயத்திலும் " அலிஃப் ;லாம் ; மீம் : றா " (13:1 ) என்கிற 4 எழுத்துக்கள் தலையில் முதல் வசனமாக அருளப்பட்டிருக்கிறது.
குர்ஆனில் சங்கேத எழுத்துக்கள் அடங்கிய இந்த தளத்தில் அறிஞர்களும், ஆய்வாளர்களும் செய்துள்ள இந்த ஆய்வு 19 என்கிற எண்ணின கட்டமைப்பிற்குள் வருவதை சுட்டிக்காட்டியுள்ளனர்.
உதாரணமாக...
சூரா அலிப் லாம் மீம்

2 4592 3204 2195

3 2578 1885 1251

7 2572 1523 1165

13 625. 479 260

29 784 554 347

30 545 396 318

31 348 298 177

32 268 154 158

---

12 ,312 + 8493 + 5871 = 26,676

26,676 / 19 = 1404 = (1404 X 19 )

அலிப் , லாம், மீம் எனத் தொடங்கும் மேற்கண்ட 8 சூராக்களில் இம் மூன்று எழுத்துகளும் மேற்கண்ட எண்ணிக்கையில் பயன்படுத்தப்பட்டுள்ளது .
குர்ஆன் என்னும் சொல்லின்முதல் எழுத்து 'காஃப்' ; கடைசி எழுத்து ''நூன்'. 'நூன்' எனத் தொடங்கும் சூரா 68-ல் இடம் பெற்றுள்ள நூன்களின் எண்ணிக்கை 133; அதாவது 19 × 7=133.
''காஃப்' எனத் தொடங்கும் 50-வது அத்தியாயம் 57 காஃப்களைப் பெற்றுள்ளது. அதாவது 19 × 3 = 57. ஹாமீம் ஐன் ஸீன் காஃப் எனத் தொடங்கும் 42-வது சூராவில் 57 காஃப்கள் இருக்கின்றன அதாவது 19×3= 57 இவ்விரு சூராக்களிலுள்ள மொத்த காஃப் 114 அதாவது 19 x 6 114 அதாவது குர்ஆனின் மொத்த சூராக்களுக்கு (114) இஷாரா வாகவும் அமைகின்றது.

"அலிப், லாம், மீம், ஸாத் "எனத் தொடங்கும் அத்தியாயத்தில் ஸாதின் எண்ணிக்கை கட்டுப்பாட்டைக் காணலாம். அவ்வத்தியாயத்தின் 69-வது வசனத்தில் "பஸ்ததன்" என்னும் சொல்லில் ஸாதுக்கு மேலாக ஒரு ஸீன் பொறிக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.
எழுத்து ஸாதாக இருந்தாலும் உச்சரிப்பு ஸீனாக இருந்தால் மட்டுமே அதற்குரிய பொருள் வெளிப்படும். வரிவடிவில் இந்த எழுத்து இப்படி தான் அமைந்திருக்க வேண்டுமென அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு தனியாக எடுத்துரைக்கப்பட்டதாம். அந்த இடத்தில் ஸாத் அமையாவிடில் அதிகாரத்தில் இருக்க வேண்டிய ஸாதின் எண்ணிக்கையில் ஒன்று குறைபடும்.
சூரா 7 உள்ள ஸாத் = 98

சூரா 19 உள்ள ஸாத் = 26

சூரா 38 உள்ள ஸாத் = 38

மொத்தம் =152

152 = 19×8= 19ன் பெருக்கமாக அமைகிறது.

அலிப் லாம் மீம் ஸாத் எனத் தொடங்கும் 7வது அத்தியாயத்தில்

அலிப் : = 2572

லாம் : = 1523

மீம் : = 1165

ஸாத் : = 98

மொத்தம் = 5358

அதாவது 5358 = 19 × 282 -19ன் பெருக்கமாகவே அமைகிறது.காஃப், ஹா, யா, அய்ன், ஸாத் எனத் தொடங்கும் 19-வது அத்தியாயத்தில்

காஃப் = 137

ஹா = 168

யா = 345

அய்ன் = 122

ஸாத் = 26

மொத்தம் = 798

அறிஞர்கள் சூரா : 2, 3, 13, 29, 30, 31, 32 , 60, 50 , 42, 7, 19, 38 ஆகிய இந்த 13 சூராக்களில் உள்ள எழுத்துக்களை மட்டுமே ஆய்வு செய்து 19 எண்ணிற்குள் கட்டமைத்தனர்.

மீதி 16 சூராக்களான 1, 10, 11, 12, 14,15, 20, 26, 29, 36, 40, 41, 43, 44, 45, 46 ஆகிய 16 சூராக்களின் தலையில் உள்ள சங்கேத எழுத்துக்கள் 19 என்கிற எண் கட்டமைப்பிற்குள் வரவில்லை.
அவை 19 எண் மாதிரி வேறு ஒரு நம்பர் சிஸ்டத்திற்குள் வரலாம். அல்லது வேறு எதையோ சொல்ல வரும் சேதியை உள்ளடக்கியதாக இருக்கலாம். ஆக ,
الٓمّٓرٰ
"அலிஃப், லாம், மீம், றா." - இந்த 4 எழுத்துக்களுக்கும் என்ன விளக்கம் என்பதை தெரிவிக்கப்படாமல், இவை வேதத்தின் வசனங்களாகும். மேலும் (நபியே!) உம் மீது, உம் இறைவனிடமிருந்து அருளப்பட்டுள்ள இது உண்மையாகும் - எனினும் மனிதர்களில் பெரும்பாலோர் (இதனை) நம்புவதில்லை. (அல்குர்ஆன் : 13:1)
நீங்கள் இருப்பது கம்ப்யூட்டர் காலம். முயற்சி செய்து அவைகள் என்ன சொல்ல வருகிறது என்பதை உலகிற்கு ஆய்வு சொல்லுங்களேன்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 39**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 3 )**

( தூண் இல்லாத வானம் )
"அல்லாஹ்தான் நீங்கள் காணக்கூடிய தூண்கள் எதுவுமின்றி வானங்களை உயர்த்தியுள்ளான் (குர்ஆன் : 13:2)
"அவன் வானங்களைத் தூண்களின்றியே படைத்துள்ளான். அதனை நீங்களும்
பார்க்கிறீர்கள்" (குர்ஆன் : 31:10)
பூமியில் மனிதனால் கட்டப்படுகின்ற கட்டடங்கள் சிறியதோ, பெரியதோ எதுவாயினும் அவற்றைத் தாங்குவதற்கு தூணோ, சுவரோ அவசியமாகின்றன. இல்லையென்றால் அவற்றைக் கட்டவே முடியாது. ஆகாயத்தில் அப்படியே உறுதியாக நிற்கின்ற எந்தக் கட்டடத்தையும் மனித சக்தியால் உருவாக்கவே முடியாது.
"விண்வெளியில் செலுத்தப்படும் விண்வெளி கலம், விண்வெளி ஆராய்ச்சிக் கூடம், பூமியின் புவியீர்ப்புத் தானத்திற்கு அப்பால் சென்று விண்வெளியில் அப்படியே தவழ்கின்றன. ஆகவே பூமியின் புவிஈர்ப்புத் தானத்திற்கு வெளியே பொருள்கள் நிற்க முடியும் என்ற விஞ்ஞான உண்மை இந்த ஆயத்துக்களினால் உணரப்படுகின்றன.
ஆனால், இவ்வுலகையே சுற்றிவளைத்துக் கொண்டிருக்கிற பிரமாண்டமான வானத்துக்கு எந்தத் தூணும் இல்லை. நான்கு சுவர்களும் கிடையாது. அது படைக்கப்பட்ட காலம் முதல் கீழே விழுந்துவிடாமல் அப்படியே நிற்கிறது. இதனை இம்முறையில் உண்டாக்கியவன் யார்?
அல்லாஹ் ஒருவனேதான். அவனே தூணின்றியும் எத்தகைய பிடிப்புமின்றியும் வானங்களைப் படைத்து பல லட்சம் மைல்களுக்கு மேல் உயர்த்தினான்.

அவ்வளவு உயரத்தில் அவையிருந்தும் நீங்கள் அவற்றைப் பார்க்கிறீர்கள்.இவ்வாறு செய்கின்ற வல்லமை அவனைத் தவிர வேறு யாருக்காவது இருக்க முடியுமா ? முடியாது. அல்லது அவற்றினைப் பிடித்துக் கொள்வதற்காகத் தூண்கள், நான்கு சுவர்கள் இருக்கின்றன என்று நீங்கள் நிரூபிக்க முடியுமா? உங்களால் இப்படியெல்லாம் செய்துவிட முடியுமா?
பார்க்க முடியாத தூண்கள் இருக்கின்றனவா? என்றால் நிச்சயமாக இருக்கின்றன. உலகத்தில் இருக்கின்ற பூமி உள்ளிட்ட எல்லாக் கோள்களும் அவற்றிற்குரிய இடங்களில் நீந்துவதற்கு, அவற்றைக் குறிப்பிட்ட வேகத்துடன் பிடித்து இழுத்து சுழற்றுகின்ற ஒரு ஈர்ப்புவிசை எல்லாப் பகுதியிலும் பரவியிருப்பது தான் காரணம்.
உதாரணமாக நாம் வாழ்கின்ற பூமி, மணிக்கு 1670 கி.மீ. வேகத்தில் தன்னைத் தானே சுற்றுகிறது. அதே சமயம் சூரியனை, மணிக்கு 1,07,000 கி.மீ. வேகத்தில் சுற்றி வருகின்றது.
இவ்வளவு வேகமாக தன்னைத் தானே சுற்றிக் கொண்டு, சூரியனையும் பூமி சுற்றும் பொழுது அதை ஈர்த்துப் பிடிக்கும் ஒரு சக்தி இல்லாவிட்டால் தனது நீள்வட்டப் பாதையிலிருந்து இப்பூமி தூக்கி வீசப்பட்டு விடும்.

பூமியின் எடை (நிறை) 6,000,000,000,000,000,000,000,000 கிலோ கிராம் (6க்குப் பின் 24 பூஜ்யங்கள்) ஆகும்.
அந்தத் தூண்கள் இல்லாமலேயே பூமி, தனது பாதையிலிருந்து விலகாமல் இருப்பதற்கு ஈர்ப்பு விசை என்ற கண்ணுக்குத் தெரியாத தூண்களே காரணம்.
இந்த அறிவியல் உண்மையைத்தான், "நீங்கள் பார்க்கின்ற தூண்களின்றி" என்று அல்லாஹ் கூறுகின்றான்.
இந்த ஈர்ப்பு விசையின் காரணமாகத்தான் ஒவ்வொரு கோளும் அந்தரத்தில் எவ்விதப் பிடிமானமும் இன்றி தொங்கும் காட்சியைப் பார்க்கின்றோம்.
எனவே 17வது நூற்றாண்டில் மனிதன் கண்டறிந்த ஈர்ப்பு விசை எனும் கண்டுபிடிப்பை, ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன்பே திருக்குர்ஆன் கூறுகிறது.
ஆனால் திருக்குர்ஆன் சில ஆய்வாளர்கள்: கண்கள் காணா தூண்களா? என்பதற்கு,
நீங்கள் காணக் கூடிய தூண்கள் எதுவுமின்றி' என்று அல்லாஹ் குறிப்பிடுகின்றான். அதாவது வானமானது இப்பூமிக்குத் தூண் இல்லாத முகட்டைப் போன்றதாகும்.
இவ்வாறு பொருள் கொள்வதே வசன ஓட்டத்திற்கு ஏற்றதாகும். (கண் ணுக்குத் தெரியா தூண்கள் உள்ளன என்பது பொருளன்று)

பின்வரும் வசனம் இதற்குச் சான்றாகும்: அல்லாஹ், தன் கட்டளையின்றி பூமியின் மீது வானம் விழுந்துவிடாதவாறு தடுத்து வைத்துள்ளான். (22:65)
எனவே நீங்கள் காணக்கூடிய (தரவ்னஹா) எனும் அடைமொழி, தூணே இல்லை என்பதை உறுதி செய்கின்ற சொற்றொடராகும். அதாவது நீங்கள் இப்போது காண்பதைப் போன்றே - வானம், தூண்கள் எதுவுமின்றி உயர்த்தப்பட்டுள்ளது.
இதுதான், இறைவனின் பேராற்றலை முழுமையாக வெளிப்படுத்துவதற்கு ஏற்ற பொருளாகும்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 39**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 3 )**
**( தூண் இல்லாத வானம் )**



"அல்லாஹ்தான் நீங்கள் காணக்கூடிய தூண்கள் எதுவுமின்றி வானங்களை உயர்த்தியுள்ளான் (குர்ஆன் : 13:2)
"அவன் வானங்களைத் தூண்களின்றியே படைத்துள்ளான். அதனை நீங்களும் பார்க்கிறீர்கள்" (குர்ஆன் : 31:10)
பூமியில் மனிதனால் கட்டப்படுகின்ற கட்டடங்கள் சிறியதோ, பெரியதோ எதுவாயினும் அவற்றைத் தாங்குவதற்கு தூணோ, சுவரோ அவசியமாகின்றன. இல்லையென்றால் அவற்றைக் கட்டவே முடியாது. ஆகாயத்தில் அப்படியே உறுதியாக நிற்கின்ற எந்தக் கட்டடத்தையும் மனித சக்தியால் உருவாக்கவே முடியாது.
"விண்வெளியில் செலுத்தப்படும் விண்வெளி கலம், விண்வெளி ஆராய்ச்சிக் கூடம், பூமியின் புவியீர்ப்புத் தானத்திற்கு அப்பால் சென்று விண்வெளியில் அப்படியே தவழ்கின்றன. ஆகவே பூமியின் புவிஈர்ப்புத் தானத்திற்கு வெளியே பொருள்கள் நிற்க முடியும் என்ற விஞ்ஞான உண்மை இந்த ஆயத்துக்களினால் உணரப்படுகின்றன.
ஆனால், இவ்வுலகையே சுற்றிவளைத்துக் கொண்டிருக்கிற பிரமாண்டமான வானத்துக்கு எந்தத் தூணும் இல்லை. நான்கு சுவர்களும் கிடையாது. அது படைக்கப்பட்ட காலம் முதல் கீழே விழுந்துவிடாமல் அப்படியே நிற்கிறது. இதனை இம்முறையில் உண்டாக்கியவன் யார்?
அல்லாஹ் ஒருவனேதான். அவனே தூணின்றியும் எத்தகைய பிடிப்புமின்றியும் வானங்களைப் படைத்து பல லட்சம் மைல்களுக்கு மேல் உயர்த்தினான்.

அவ்வளவு உயரத்தில் அவையிருந்தும் நீங்கள் அவற்றைப் பார்க்கிறீர்கள்.இவ்வாறு செய்கின்ற வல்லமை அவனைத் தவிர வேறு யாருக்காவது இருக்க முடியுமா ? முடியாது. அல்லது அவற்றினைப் பிடித்துக் கொள்வதற்காகத் தூண்கள், நான்கு சுவர்கள் இருக்கின்றன என்று நீங்கள் நிரூபிக்க முடியுமா? உங்களால் இப்படியெல்லாம் செய்துவிட முடியுமா?
பார்க்க முடியாத தூண்கள் இருக்கின்றனவா? என்றால் நிச்சயமாக இருக்கின்றன. உலகத்தில் இருக்கின்ற பூமி உள்ளிட்ட எல்லாக் கோள்களும் அவற்றிற்குரிய இடங்களில் நீந்துவதற்கு, அவற்றைக் குறிப்பிட்ட வேகத்துடன் பிடித்து இழுத்து சுழற்றுகின்ற ஒரு ஈர்ப்புவிசை எல்லாப் பகுதியிலும் பரவியிருப்பது தான் காரணம்.

உதாரணமாக நாம் வாழ்கின்ற பூமி, மணிக்கு 1670 கி.மீ. வேகத்தில் தன்னைத் தானே சுற்றுகிறது. அதே சமயம் சூரியனை, மணிக்கு 1,07,000 கி.மீ. வேகத்தில் சுற்றி வருகின்றது.
இவ்வளவு வேகமாக தன்னைத் தானே சுற்றிக் கொண்டு, சூரியனையும் பூமி சுற்றும் பொழுது அதை ஈர்த்துப் பிடிக்கும் ஒரு சக்தி இல்லாவிட்டால் தனது நீள்வட்டப் பாதையிலிருந்து இப்பூமி தூக்கி வீசப்பட்டு விடும்.
பூமியின் எடை (நிறை) 6,000,000,000,000,000,000,000,000 கிலோ கிராம் (6க்குப் பின் 24 பூஜ்யங்கள்) ஆகும்.
அந்தத் தூண்கள் இல்லாமலேயே பூமி, தனது பாதையிலிருந்து விலகாமல் இருப்பதற்கு ஈர்ப்பு விசை என்ற கண்ணுக்குத் தெரியாத தூண்களே காரணம்.
இந்த அறிவியல் உண்மையைத்தான், "நீங்கள் பார்க்கின்ற தூண்களின்றி" என்று அல்லாஹ் கூறுகின்றான்.
இந்த ஈர்ப்பு விசையின் காரணமாகத்தான் ஒவ்வொரு கோளும் அந்தரத்தில் எவ்விதப் பிடிமானமும் இன்றி தொங்கும் காட்சியைப் பார்க்கின்றோம்.
எனவே 17வது நூற்றாண்டில் மனிதன் கண்டறிந்த ஈர்ப்பு விசை எனும் கண்டுபிடிப்பை, ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன்பே திருக்குர்ஆன் கூறுகிறது.
ஆனால் திருக்குர்ஆன் சில ஆய்வாளர்கள்: கண்கள் காணா தூண்களா? என்பதற்கு,
நீங்கள் காணக் கூடிய தூண்கள் எதுவுமின்றி' என்று அல்லாஹ் குறிப்பிடுகின்றான். அதாவது வானமானது இப்பூமிக்குத் தூண் இல்லாத முகட்டைப் போன்றதாகும்.
இவ்வாறு பொருள் கொள்வதே வசன ஓட்டத்திற்கு ஏற்றதாகும். (கண் ணுக்குத் தெரியா தூண்கள் உள்ளன என்பது பொருளன்று)
பின்வரும் வசனம் இதற்குச் சான்றாகும்: அல்லாஹ், தன் கட்டளையின்றி பூமியின் மீது வானம் விழுந்துவிடாதவாறு தடுத்து வைத்துள்ளான். (22:65)
எனவே நீங்கள் காணக்கூடிய (தரவ்னஹா) எனும் அடைமொழி, தூணே இல்லை என்பதை உறுதி செய்கின்ற சொற்றொடராகும். அதாவது நீங்கள் இப்போது காண்பதைப் போன்றே - வானம், தூண்கள் எதுவுமின்றி உயர்த்தப்பட்டுள்ளது.
இதுதான், இறைவனின் பேராற்றலை முழுமையாக வெளிப்படுத்துவதற்கு ஏற்ற பொருளாகும்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 40**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 4 )**
**( அர்ஷின் மீது அமைந்தான் )**




" பின்னர் அவன் அர்ஷின் மீது அமைந்தான்". (குர்ஆன் : 13:2)
அர்ஷ் , குர்ஸி என்பதெல்லாம் மனித சக்திக்கும், அவனது புலனறிவுக்கும் அப்பாற்பட்டவை.
ஒரு ஹதீஸில் வந்துள்ளதாவது: குர்ஸியோடு ஒப்பிடுகையில் ஏழு வானங்கள், அவற்றிலுள்ள மற்றும் அவற்றுக்கு மத்தியிலுள்ள அனைத்தின் அளவானது, பாலைவனத்தில் வீசப்பட்ட ஒரு வளையத்தின் அளவைப் போன்றதாகும்.
(பிரமாண்டத்தில் அந்த வளையத்தை விடப் பாலைவனப் பகுதியின் அளவைப் போன்றே குர்ஸியோடு ஒப்பிடுகையில் அர்ஷின் அளவும் அமைந்துள்ளது.
குர்ஸிய்யு என்றால் இறைவன் திருமறையில் கூறுவது போன்று
அவனுடைய அரியாசனம் (குர்ஸிய்யு) வானங்களிலும், பூமியிலும் பரந்து நிற்கின்றது.
( குர்ஆன் 2:255 )
குர்ஸிய்யு என்றால் இறைவனின் ஞானம் என்றும் அவனுடைய கால்கள் இருக்கும் இடம் என்றும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் சயீத் இப்னு ஜுபைர் (ரலி) அவர்களும் கூறுகிறார்கள். ஷரஹு அகீதது தஹாவீ (313,312 பக்கம் )
குர்ஸி என்றால் சிலர் அர்ஷுதான் என்கின்றனர் அது சரியான கூற்று அல்ல என்று அல்லாமா இப்னு உஸைமீன் (ரஹ்) கூறுகிறார்கள் (பதாவா முஹம்மது சாலிஹ் பின் முனஜித் இணைய தளம் )
மற்றோர் அறிவிப்பில் வந்துள்ளதாவது: வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வின் அரியணையின் (அர்ஷ்) அளவை அவனே அறிவான்

முற்கால அறிஞர்களில் சிலர் கூறியிருப்பதாவது அர்ஷுக்கும் பூமிக்கும் மத்தியிலான இடைவெளி ஐம்பதாயிரம் ஆண்டுகால பயணத் தொலைவாகும். அதன் இரு முனைகளுக்குமான இடைவெளி ஐம்பதாயிரம் ஆண்டுகால பயணத் தொலைவாகும். அது செந்நிற மரகதத்தால் ஆனது.

"அர்ரஹ்மான் அர்ஷின் மீது அமைந்தான்" என்ற திருக்குர்ஆன் வசனத்தின் அர்த்தம், விளக்கம் தந்த விரிவுரையாளர்கள் அல்லாஹுதஆலா அர்ஷின் மீது ஆதிக்கம் செலுத்தினான், அர்ஷை அதிகாரத்திற்கு உட்படுத்தினான், அல்லாஹ் அர்ஷை பாதுகாத்தான், அதை தரிபடுத்தினான் என்று கூறியுள்ளார்கள்.

அந்த அடிப்படையில் அல்லாஹ்வின் படைப்புகளில் மிகப்பெரியதும் இதர படைப்புகளை தன்னுள்ளடக்கியதுமான ஒரு படைப்பே அர்ஷ் என்பதாகும்.
அந்த அர்ஷின் மீது அல்லாஹ்வின் ஆதிக்கம் நிலை பெற்று விடும் போது அதனுள் அடக்கமாகிய குர்ஸ், லவ்ஹுல் மஹ்பூல், கலம், ஏழு வானம், ஏழு பூமி இன்னும் அனைத்து படைப்புகள் மீதும் அவன் ஆதிக்கம் பெற்றுள்ளான் என்பதையே இவ்வசனம் சுட்டிக் காட்டுகிறது.
உதாரணத்திற்கு "உலகை ஆண்ட மன்னர்" என்ற வார்த்தைக்குள் உலகின் எல்லா பகுதிகளும் அடங்கி அதுவெல்லாம் அந்த மன்னரின் கட்டுப்பாட்டுக்குள் இருக்கிறது என்பதை போல இங்கும் விளங்க வேண்டும். மேலும் எதனளவிலும் தேவையற்ற அல்லாஹ் அவன் அமர்வதற்கு அர்ஷ் (அரியாசனம்) மீது தேவையாகுவது எவ்வாறு சாத்தியமாகாதோ என்ற அல்லாஹ்வின் பேச்சுக்குரிய பொருள் என்னவெனில் "அர்ஷ்" என்ற படைப்போடு அல்லாஹ் படைத்தலை நிறைவு செய்து விட்டான் என்பதாகும்.

அல்லாஹ்வின் ஆட்சி பீடமாகிய அர்ஷ் என்பதற்கும் குர்ஸி என்பதற்கும் வித்தியாசங்கள் உள்ளன, அந்த இரண்டும் ஒன்று என்று விளங்குவது தவறு, அர்ஷ் என்பது குர்ஷியை விட பெரியது, அர்ஷ் அனைத்து படைப்புக்களை விட உயர்ந்த கண்ணியமிக்கது,
அதில் தான் ரப்புல் ஆலமீன் (இறைவன்) இருக்கிறான் (அவனுடைய தகுதிக்கு தகுந்தவாறு), அர்ஷிற்கு கால்கள் இருக்கின்றன அதை உயர்ந்த வானவர்கள் சுமந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை கீழ்காணும் சில ஆதாரங்கள் மூலம் அவதானிக்கலாம் :-
அப்துல்லாஹ் இப்னு மசூது (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.
பூமியுடைய வானத்திற்கும் ,அதற்கடுத்து உள்ள வானத்திற்கும் 500 வருடங்கள் (தொலைவு ) உள்ளது, ஒவ்வொரு வானத்திற்கும் மத்தியில் 500 வருடங்கள் உள்ளன, ஏழாவது வானத்திற்கும், குர்ஸிக்கும் மத்தியில் 500 வருடங்கள் உள்ளன, குர்ஸிக்கும் தண்ணீருக்கும் மத்தியில் 500 வருடங்கள் உள்ளன.

அர்ஷ் தண்ணீரின் மீது இருக்கின்றது, அல்லாஹ் அர்ஷின் மீது இருக்கின்றான், நீங்கள் செய்யும் அனைத்து காரியங்களையும் இறைவன் அறியாமலில்லை. நூல் -பைஹகீ பக்கம் -401
இறைவன் குர்ஆனில் அர்ஷை பற்றி இவ்வாறு கூறுகிறான்.
ஆகவே, உண்மையில் அரசனான அல்லாஹ், மிக உயர்ந்தவன்; அவனைத் தவிர நாயனில்லை. கண்ணியமிக்க அர்ஷின் இறைவன் அவனே! -குர்ஆன் 23:116.
அவன் தான் மகத்தான அரியாசனத்தின் (அர்ஷின்) அதிபதி" என்று நீர் கூறுவீராக!-குர்ஆன் 9:129
(அவனே) அர்ஷுக்குடையவன்; பெருந்தன்மை மிக்கவன்.குர்ஆன் 85:15
இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் "கண்ணிய மிக்க அர்ஷ் " என்பதற்கு அவன் தான் அனைத்து படைப்புகளுக்கும் எஜமானன் இன்னும் படைத்தவன், மகத்தான அரியாசனத்தின் அதிபதி,
இந்த அரியாசனம் தான் அனைத்து படைப்புகளின் முகடு, இந்த வானம் இன்னும் பூமியின் படைப்பினங்கள், அதற்கு மத்தியில் இருப்பவைகள் அனைத்தும் அர்ஷிற்கு கீழ் அல்லாஹ்வின் கட்டுப்பாட்டில் இருக்கின்றன. நிச்சயமாக அவன் எல்லாப் பொருட்களையும் சூழ்ந்து (அறிந்தவனாக) இருக்கிறான். இப்னு கஸீர் (405/2)
இமாம் மாலிக் (ரஹ்) கீழ்கண்ட இறை வசனத்திற்கு விளக்கம் கூறுகிறார்கள்
அர்ரஹ்மான் அர்ஷின் மீது அமர்ந்தான். ( குர்ஆன் 20:5 )
அர்ஷில் ரஹ்மானின் அமர்தல் என்பது இந்த வசனத்தின் மூலம் அறியபட்டிருக்கின்றது. ஆனால் எவ்வாறு அமர்தல் என்பது அறியப்படாததாக இருக்கின்றது, ஆனால் அல்லாஹாவின் அமர்தல் என்பதை நம்புவது (ஈமான் கொள்வது) அவசியம் (வாஜிப்). ஆனால் அது எவ்வாறு என்று கேள்வி கேட்பது அனாச்சாரம் (பித்அத்).

**Rahmath Rajakumaran**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அமர்ந்து கொண்டிருந்த போது யூதர் ஒருவர் வந்து, "அபுல் காசிமே! உங்கள் தோழர்களில் ஒருவர் என் முகத்தில் அறைந்து விட்டார்" என்று கூறினார்.
நபி (ஸல்) அவர்கள், "(அந்தத் தோழர்) யார்?" என்று கேட்டார்கள்.
அதற்கு அவர், "அன்சாரிகளில் ஒருவர்" என்று கூறினார்.
நபி (ஸல்) அவர்கள், "அவரைக் கூப்பிடுங்கள்" என்று உத்தரவிட்டார்கள். அவர் வந்து சேர்ந்தவுடன், "இவரை நீர் அடித்தீரா?" என்று கேட்டார்கள்.
அந்த அன்சாரி, "இவர் "மனிதர்கள் அனைவரையும் விட மூஸாவுக்கு மேன்மையை அளித்தவன் மீது சத்தியமாக!' என்று கடைவீதியில் ஆணையிட்டுக் கூறிக் கொண்டிருந்ததை நான் செவியுற்றேன். உடனே நான், "தீயவனே! முஹம்மதை விடவா (மூஸா மேன்மை வாய்ந்தவர்)?' என்று கேட்டேன். என்னைக் கோபம் ஆட்கொண்டு விட, இவரது முகத்தில் அறைந்து விட்டேன்" என்று கூறினார்.
இதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள், "நபிமார்களுக்கிடையே ஒருவரை மற்றொருவரை விட உயர்த்திப் போசாதீர்கள். ஏனெனில், மறுமை நாளில் மக்கள் அனைவரும் மூர்ச்சையாகி விடுவார்கள். அப்போது, பூமி பிளந்து வெளிப்படுத்துபவர்களில் முதலாவது நபராக நான் இருப்பேன். அப்போது, நான் மூஸாவை அர்ஷின் கால்களில் ஒன்றைப் பிடித்துக் கொண்டிருப்பவராகக் காண்பேன்.
மூர்ச்சையடைந்தவர்களில் அவரும் ஒருவராக இருந்தாரா அல்லது (தூர்சீனா மலையில் இறைவனின் ஒளியை அவர் கண்ட போது அவர் அடைந்த) முதல் மூர்ச்சை கணக்கிலெடுக்கப்பட்டு (அதுவே போதுமென்று, இப்போது மூர்ச்சையடையத் தேவையில்லையென்று அவருக்கு விலக்கு அளிக்கப்பட்டு) விட்டதா என்று எனக்குத் தெரியாது" என்று கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூசயீத் அல்குத்ரீ (ரலி)
நூல்: புகாரி 2412

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 41**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 5 )**
**( சூரியனும் சந்திரனும் )**




" ...இன்னும் அவனே சூரியனையும் சந்திரனையும் (தன்) அதிகாரத்திற்குள் வைத்திருக்கின்றான்; (இவை) அனைத்தும் குறிப்பிட்ட காலத்திட்டப்படியே நடந்து வருகின்றன; அவனே (எல்லாக்) காரியத்தையும் நிர்வகிக்கின்றான் - நீங்கள் உங்கள் இறைவனைச் சந்திப்பதை உறுதி கொள்ளும் பொருட்டு, அவன் (இவ்வாறு தன்) வசனங்களை விளக்குகின்றான் " (அல்குர்ஆன் : 13:2)
"கோடிக்கணக்கான விண்மீன்களின் தொகுதியே அண்டம்! (GALAXY)
கோடிக்கணக்கான அண்டங்களின் தொகுதியே பேரண்டம்! (UNIVERSE)
பேரண்டத்தில் காணப்படும் பல்வேறு அண்டங்களில் ஒன்றுதான் ஆகாய கங்கை (மெட்டா காலக்ஸி ) என்னும் நம்முடைய பால்வெளி மண்டலம்.
இரவு வானில் ஒளிப்புள்ளிகள் போலப் புலப்படுகிறதில்லையா? அந்த விண்மீன்கள் எல்லாம் தொலைவில் உள்ள சூரியன்கள்தான்! இப்போ நம்ம சூரியனை பார்க்கிறோமே அதே மாதிரி நிறைய்ய்ய சூரியன்கள் வான வெளியில் இருக்கிறது!
நமது சூரிய மண்டலம் பால்வெளி மையத்திலிருந்து சுமார் 27,000 ஒளியாண்டுகள் தூரத்தில் உள்ளது!

(ஒரு ஒளியாண்டு என்பது....ஒளி ஒரு ஆண்டில் கடக்கும் தூரமாகும். உதாரணமாக.....ஒளி ஒரு வினாடியில் 2,99,792 கி.மீ தூரம் பயணிக்கும்! இதனை 60ஆல் பெருக்கி வரும் தொகையை மறுபடியும் 60ஆல் பெருக்கிக் கிடைக்கும் தொகையை 24ஆல் பெருக்கி, கிடைக்கும் தொகையை 365ஆல் பெருக்கிக் கிடைக்கும் தொகையாகும்! ((ஸ்ஸ்ஸ்ஸ்....ஹப்பாடா! வேண்டாம் விடையைக் கூறி விடுகிறேன்! தோராயமாக 1,000,000,000,000,000,000. வருடங்கள்!)
சூரிய மண்டலம் சும்மா இருக்கவில்லை! சூரியன் தன் குடும்பத்துடன் வினாடிக்கு 220 கி.மீ. வேகத்தில் பால்வெளி மண்டலத்தைச் சுற்றி வருகிறது! சூரிய மண்டலம் ஒருமுறை பால் வெளி மண்டத்தைச் சுற்றி வரும் காலம் 22.5 கோடி வருடங்கள்! இதுவும் அவன் வகுத்து கொடுத்த காலத்திட்டத்தின்படியே !
சூரியன்,சந்திரன் ஏற்படுத்தும் தாக்கம்
"நமது வாழ்க்கை என்பது காலமும் சக்தியும் கலந்த ஒரு கலவையாக இருக்கிறது. இதில் காலம் அல்லது நேரம் என்பது யாருடைய அனுமதிக்கும் காத்திருக்காமல் தொடர்ந்து நகர்ந்து கொண்டே இருக்கிறது. இந்தக் காலத்தை அளப்பதற்கு நாமே சில வழிமுறைகளை கண்டுபிடித்து
பயன்படுத்துகிறோம். பூமி தன்னைத்தானே ஒருமுறை சுற்றி வந்தால் அது ஒரு நாள். சந்திரன் பூமியை ஒருமுறை சுற்றி வந்தால், அது ஒரு மாதம். பூமி சூரியனை ஒருமுறை சுற்றி வந்தால், அது ஒரு வருடம்.

அடிப்படையில் நேரத்தைப் பற்றிய நம்முடைய கணிப்பு, சூரியனைச் சுற்றி பூமியின் இயக்கம் மற்றும் பூமியைச் சுற்றி சந்திரனின் இயக்கம் ஆகிய இரண்டு விஷயங்களைப் பொறுத்தே இருக்கிறது. அதனால்தான் மேற்கண்ட குர்ஆன் வசனத்தில் இந்த இரண்டையும் பற்றி இறைவன் கூறுகிறான்.
சூரியனை நம் தொழுகை நேரத்திற்கும் , சந்திரனை ஹஜ், நோன்பு போன்றவற்றை மாதத்தை கணிக்க பயன்படுத்துகிறோம்.
மேலும் சூரியன் மற்றும் சந்திரனைப் பொறுத்து, அந்தந்தக் காலகட்டத்தில் பூமி இருக்கும் இடம், நம் உடல் மற்றும் மனதின் செயல்பாடுகளில் நேரடித் தாக்கத்தை ஏற்படுத்துகிறது.
வாழ்க்கைக்கு அடிப்படையாக இருக்கும் இரண்டு அடிப்படை அம்சங்களான 'நேரம்' மற்றும் 'சக்தி' பெரும்பாலும் சூரியனாலேயே தீர்மானிக்கப்படுகின்றன.
இந்த பூமிக்கு முக்கியமாக சூரியனிலிருந்துதான் சக்தி கிடைக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும். உங்கள் உடல் என்பதும் இந்த பூமியின் ஒரு சிறு துகள்தான். எனவே உங்களுக்கும் முக்கியமாக சூரியனிலிருந்துதான் சக்தி கிடைக்கிறது. எனவே எவ்வளவு தூரம் உங்களால் சூரியனின் சக்தியை உள்வாங்கிக் கொள்ள முடியும் என்பதைப் பொறுத்து உங்கள் சக்தி தீர்மானிக்கப்படுகிறது.

ஆகவே சூரியனைச் சுற்றிவரும் பூமியின் நகர்வு, நேரத்தைத் தீர்மானிப்பதற்கான அளவுகோலாக மட்டும் அல்லாமல், நாம் எவ்வளவு சக்தியுடன் இருக்கிறோம் என்பதையும் தீர்மானிக்கிறது. ஆகவே வாழ்க்கைக்கு அடிப்படையாக இருக்கும் இரண்டு அம்சங்களான ‘நேரம்’ மற்றும் ‘சக்தி’ பெரும்பாலும் சூரியனாலேயே தீர்மானிக்கப்படுகின்றன."
இந்த உலகில் இருக்கும் அனைத்தின் மீதும் சூரியனுக்கு இருக்கும் ஆதிக்கம் மிகப் பெரியது. சந்திரனால் சூரியனைப் போல் சக்தியை வெளியிட முடியாது என்றாலும் அது பூமிக்கு மிகவும் நெருக்கமாக இருப்பதால் அதுவும் நம்முடைய உடல், மன அமைப்புகளின் மேல் அளப்பரிய தாக்கத்தை ஏற்படுத்துகிறது.

ஏதோ ஒரு இயந்திரத்தை சுழல வைத்துத்தான் நாம் மின்சக்தி தயாரிக்கிறோம். அதேபோல சந்திரன் பூமியைச் சுற்றிவரும்போது, அந்த சுழற்சியால் அங்கு சக்தி உருவாகிறது. எனவே சந்திரனுடைய ஆதிக்கம் பூமியின் மேல் காந்த ஈர்ப்பு சக்தியாக இருக்கிறது.
எனவேதான் நமக்கு நடக்கும் வெளிப்புற வாழ்வை புரிந்து கொள்ள சூரியனையும் உள்புற வாழ்வை புரிந்து கொள்ள சந்திரனையும் பார்க்கிறோம்.
அமாவாசை மற்றும் பௌர்ணமி நாட்களில், சந்திரன், கடலில் பேரலைகளை ஏற்படுத்தி மிகப் பெரிய தாக்கத்தை உருவாக்குவது உங்களுக்குத் தெரியும். அதாவது கடல் நீர் முழுதும் அந்த இரு நாட்களில் அல்லது அதைச் சுற்றியுள்ள நாட்களில் மேலெழும்புகின்றன. தண்ணீர் மட்டுமல்ல, அனைத்துமே மேலெழும்புகின்றன. ஆனால் நீரில் அது கண்கூடாகத் தெரிகிறது.
உங்கள் உடலில் கூட எழுபது சதவிகிதத்திற்கும் மேல் நீராக இருப்பதால், அந்த இரு நாட்களில் உங்கள் உடலில் இருக்கும் நீரும் வேகமாக மேலெழும்பலாம். குறிப்பாக உங்கள் மூளையில் எழுபத்தி எட்டு சதவிகிதம் நீராக இருக்கிறது. எனவே சந்திரனின் தாக்கம் மூளையின் மேல் அதிகமாக இருக்கும். மனோரீதியாக பலவீனமான மனிதர்கள் அன்றைய தினத்தில் மேலும் சமநிலை தவறுகிறார்கள் என்பதை நாம் கவனித்திருக்கிறோம்.
அதாவது அமாவாசை மற்றும் பௌர்ணமி நாட்களில், மனிதனின் மேல் சந்திரனின் தாக்கம் இருக்கும்போது, மனிதன் எந்த தன்மையில் இருக்கிறானோ அந்த தன்மை மேலும் சிறிது அதிகமாகிறது. மேம்பட்ட தன்மையில் இருந்தால் மேலும் மேம்பாடு அடைகிறது. பாதிப்புத் தன்மையில் இருந்தால், அந்தப் பாதிப்பு இன்னமும் அதிகமாகிறது. ஆனால் பாதிக்கப்படுவதை மட்டும் மனிதன் நன்றாக உணர்கிறான்.
தன்மை மேம்படும்போது அது நமக்குத் தெரிவதில்லை. ஏனென்றால் இது மனிதனின் குணம். உங்கள் உடலில் ஏதாவது நன்றாக நடந்தால் அது உங்கள் கவனத்திற்கு வருவதில்லை. ஆனால் உடல் ஏதாவது காயப்பட்டால் அது உடனே உங்கள் கவனத்திற்குள் வருகிறது.
சந்திரனின் சுழற்சிகளும், பெண் உடலில் இருக்கும் உயிரியல் சார்ந்த சுழற்சிகளும் நூறு சதவிகிதம் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. அதில் எந்த சந்தேகமும் கிடையாது. எனவே நமது பிறப்பின் அடிப்படையே கூட சந்திரனின் சுழற்சிக்குத் தொடர்புடையதாக இருக்கிறது.
எனவே நமது உடல், மனக் கட்டமைப்பின் மீது சந்திரனுக்குள்ள ஆதிக்கம் மறுக்க முடியாதது. எனவே உள்தன்மை பற்றி அக்கறை கொண்டிருக்கும் அத்தனை கலாச்சாரங்களும், இயல்பாகவே சந்திர நாள்காட்டி, மற்றும் சந்திர சூரிய நாள்காட்டியை பயன்படுத்தினார்கள்.
இந்த 2- வது வசனத்தில் வான் மண்டலத்தைப் பற்றியே இறைவன், தூண் இல்லாத வானம், அவனுடைய அர்ஷ், குர்ஷி மற்றும் சூரியன் சந்திரன் குறித்து பேசியுள்ளான்

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 42**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 6 )**




بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

وَهُوَ ٱلَّذِي مَدَّ ٱلۡأَرۡضَ وَجَعَلَ فِيهَا رَوَٰسِيَ وَأَنۡهَٰرٗاۖ وَمِن كُلِّ ٱلثَّمَرَٰتِ جَعَلَ فِيهَا زَوۡجَيۡنِ ٱثۡنَيۡنِۖ يُغۡشِي ٱلَّيۡلَ ٱلنَّهَارَۚ إِنَّ فِي ذَٰلِكَ لَأٓيَٰتٖ لِّقَوۡمٖ يَتَفَكَّرُونَ ٣

وَهُوَ الَّذِىْ مَدَّ الْاَرْضَ وَجَعَلَ فِيْهَا رَوَاسِىَ وَاَنْهٰرًا وَمِنْ كُلِّ الثَّمَرٰتِ جَعَلَ فِيْهَا زَوْجَيْنِ اثْنَيْنِ يُغْشِى الَّيْلَ النَّهَارَ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ
மேலும், அவன் எத்தகையவன் என்றால் அவனே பூமியை விரித்து. அதில் உறுதியான மலைகளையும், ஆறுகளையும் உண்டாக்கினான்;
(குர்ஆன் : 13:3)
( பூமியை விரித்தல் )
மத்தல் அர்ல - பூமியை விரித்தல் பற்றி அல்லாஹ் பல இடங்களில் குர்ஆனில் (51:48)வசனத்திலும் இப்பூமியை விரித்ததாக குறிப்பிடுகிறான். பூமி படைக்கப்பட்டபோது விரிந்திருக்கவில்லையா ?
என்றால் இல்லை என்பதுதான் வியப்பான விஷயம்.
ஆதியில் இப்பூமி படைக்கப்பட்டபோது இன்றிருப்பதுபோல் தனித் தனி கண்டங்களாக இல்லை.ஒற்றை பெரும் பாறைக் கோளமாக அதுவும் சூடாகவும் இருந்தது. இதனை “பாங்கியா’(**Super Continent Pangaea)** என்று அழைக்கின்றனர்.
பூமியின் நிலத்தட்டை அல்லாஹ் ஏன் விரிக்க வேண்டும்? என்பது பற்றி
-**Diana Valencia, Harvard University** சொல்லும் விஞ்ஞான ஆய்வு,
உயிர் ஜீவன்கள் வாழ்வதற்கு பூமியின் விரித்தல் அவசியம் என்கிறது.

பூமியின் அடித்தட்டு பெயர்ச்சி (**Tectonic Plate Movement**) உயிரின பிறப்புகளுக்கு மிகவும் முக்கியமானது என்று ஆய்வறிக்கை கூறுகிறது.
சூரிய மண்டலத்தில் நமது பூமியே பெரும்பாறைக் கோள் என்பதும், உயிரினம் வாழ தகுதி உள்ள கோள் என்பதும் இது எதிர்பாராது நிகழ்ந்த நிகழ்வே அல்ல;இது நடப்பதற்குரிய தக்க காரணத்தை முன்னேற்பாடுக் கொண்டு நடத்தப்பட்ட நிகழ்வு இது என்கிறார்கள் ஆய்வாளர்கள். இதனால் மீள் சுற்று இயக்கங்கள் பாறைக்கோள்களில் ஏற்பட்டு, உயிரினம் வசிக்க பெரும் பங்கு வகிக்கின்றன.
அடித்தட்டுகள் நகர்வதாலும், பாறைகளுக்குள் அடைபட்ட ஆக்சிஜன், கார்பன் டைஆக்சைடு போன்ற சிக்கலான இரசாயன வாயுக்கள் வெளியேறி, மீள் சுற்று நிகழ்ச்சியில் சூழ்வெளியில் தொடர்ந்து பயணிக்கின்றன.
அதே மாதிரி கடலடி தட்டுகள் நகர்ச்சியின்றி உயிரினங்கள் விருத்தி நேர்ந்திருக்காது. நமது நீர்க்கோள் நம் கண்முன்பே இன்னும் மாறிக் கொண்டே வருகிறது. அதனால் அநேக உயிரினப் பிறப்புகள் விளிம்பு முனையில் உள்ளன
(ஆரம்பத்தில்) வானம் (என்றும்) பூமி (என்றும் தனித்தனியாக) இல்லாமல் இருந்ததை நாமே பிரித்தமைத்து (வானத்திலிருந்து மழையை பொழியச் செய்து அந்த மழை) நீரைக் கொண்டு (உயிருள்ள) ஒவ்வொன்றையும் வாழ்ந்திருக்கச் செய்தோம் என்பதையும் இந்நிராகரிப்பவர்கள் பார்த்தேனும் நம்பிக்கை கொள்ள மாட்டார்களா?
(குர்ஆன் : 21:30)

நாம் வாழும் பூகோளமானது நிறை குன்றிச் சிறிதளவு சிறுத்திருந்தால் கண்டங்களை நகர்த்தி, மலைகளை எழுப்பும் அடித்தட்டுப் பெயர்ச்சிகள் ( Plate Tectonics ) நேர்ந்து இருக்காது. அடித்தட்டு நகர்ச்சி இல்லையேல் வாயுச் சூழ்வெளி அமைப்பின்றி உயிரினங்களும் பூமியில் தடம் வைத்து நடமாடி இருக்க முடியாது.
சுமார் 3.26 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்னார், சுமார் 25 மைல் (60 கி.மீ) அகலமுள்ள விண்கல் பூமியில் எங்கோ மோதி அதன் பூதகரமான விளைவுச் சான்றுகள் தென் ஆப்பிரிக்கப் பகுதியில் இருந்தது தெரிகிறது. புதிய ஆராய்ச்சியின்படி பூர்விகத்தில் பூமிக்கு நேர்ந்த பூதப்பளு தாக்குதலால், அடித்தட்டு நகர்ச்சியும் தொடங்கி நமது நீர்க்கோள் உயிரின வசிப்புக்கு ஏற்ற நட்புக்கோளாய் மாறியது என்று தெளிவாய் அறியப்படுகிறது.

அந்த மோதலைப் பற்றி ஆராய்ச்சியாளர் டோனால்டு லவ்- 2014 ஏப்ரல் Journal of Geochemistry,Geophysics & Geosystem ல் ஆய்வுக்கட்டுரை எழுதியுள்ளார் அதில் குறிப்பிடுவது ....
"அந்த யுகத்தில் உயிர் நுண்ணிகள் (Microbiological beings) மட்டும் இருந்ததாக அறியப்படுகிறது. அவை அந்த மோதலில் பெரிதும் பாதிக்கப்பட்டதாக தெரிகிறது. சுமார் 3 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்புதான் அடித்தட்டுப் பெயர்ச்சியே ஆரம்பமானது என்றும் டொனால்டு லவ் கூறுகிறார்.
தோன்றிய பூகோள உயிரினங்கள் அடித்தட்டு பெயர்ச்சியால் ஏற்பட்ட விளைவுகளுக்குத் தம்மை தகுதியாக்கிக் கொண்டன என்றும் கூறுகிறார்.
ஓய்வில்லாமல் விரியும் இன்றைய பூகோளம் பல மில்லியன் ஆண்டுகளாக படிப்படியாக மிக மெதுவாக பூமியின் வடிவம் மாற்றியும் அதனால் மாறியும் வருகிறது.

4.5 பில்லியன் வருடங்களுக்கு முன் தோன்றிய ஆரம்ப காலத்து விட்டம் 4000 மைல் (6600 கி.மீ) 3.5 பில்லியன் ஆண்டுகளில் 4800 மைலாக ( 8000 கி.மீ) விரிந்தது. 2.8 பில்லியன் ஆண்டுகளில் 5280 மைலாக ( 8800 கி.மீ) 600 மில்லியன் ஆண்டுகளில் 7200 மைல் ( 12000 கி.மீ) விட்டமும் இருந்தது. இப்போது 7850 மைல் ( 12750 கி.மீ) விட்டம் கொண்டுள்ளது.
இதைத்தான் இறைவன் "மத்தல் அர்ல" - பூமியை விரித்தல் என்பதாக குர்ஆனில் கூறுகிறான்.
“நமது பிரபஞ்ச விண்வெளியில் பூமியைப்போன்று கடினமான நிறையுடைய செவ்வாய், சந்திரன் போன்ற எத்தனையோ கோள்கள் உள்ளன. ஆனால் அக்கோள்களின் நில உள் அமைப்பில் அடித்தட்டு நகர்ச்சி (Tectonic Plate Movement) ஏற்படுவதில்லை. நமது பூமியில் மட்டுமே இச்செயல் நடக்கிறது.
பூமியில் உள்ள 70% கடல் நீரானது பூமித்தட்டு நகர்வுக்கு மசகு எண்ணெய் போல் செயல் புரிகிறது. இம்மாதிரி உட்கருவின் வெப்பமும் இடையடுக்கு, மேலடுக்கு அமைப்புகளும் பூமியில் இல்லாவிட்டால் பூமி தட்டு நகர்ச்சி எழவே எழாது. பூமியில் உயிரினமும் நீடித்திருக்காது”
என்பதாக The Solar System-What Makes Earth Right for Life? By:Jonathan Lunine ஜொனாதன் லூனின் (Dec.2008) குறிப்பிடுகிறார்
பூமியில் உயிரினங்கள் வாழ்வதற்கு தகுந்த சூழல் ஏற்பட அடித்தட்டு நகர்ச்சி அவசியம் என்று இன்றைய அறிவியல் கூறுவதை படைத்த ரப்புல் ஆலமீன் 1400 ஆண்டுகளுக்கு முன்பே கூறிவிட்டான்.
“இன்னும், பூமியை படைப்பினங்களுக்காக அவனே விரித்தமைத்தான்.” -அல் குர்ஆன்.55:10.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 43
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 7 )




وَهُوَ الَّذِىْ مَدَّ الْاَرْضَ وَجَعَلَ فِيْهَا رَوَاسِىَ وَاَنْهٰرًا وَمِنْ كُلِّ الثَّمَرٰتِ جَعَلَ فِيْهَا زَوْجَيْنِ اثْنَيْنِ يُغْشِى الَّيْلَ النَّهَارَ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ
மேலும், அவன் எத்தகையவன் என்றால் அவனே பூமியை விரித்து. அதில் உறுதியான மலைகளையும், ஆறுகளையும் உண்டாக்கினான்;
(குர்ஆன் : 13:3)
وَجَعَلَ فِيْهَا رَوَاسِىَ وَاَنْهٰرًا
( மலைகளை உண்டாக்குதல் )

பூமியை நாம் விரித்து அதில் உறுதியான மலைகளை நிலைப்படுத்தினோம் -குர்ஆன்.15:19.
நாம் வாழும் பூமியின் மேலடுக்கு பல பிளேட்டுகளாக ஒன்றோடோண்டு இணைக்கப்பட்டுள்ளது. பூமியின் மையத்தில் கடும் வெப்ப நிலையில் பாகு போன்ற திரவத்தில் நமது பூமியின் மேலடுக்கு மிதந்து விரிந்து கொண்டே செல்கிறது. வருடத்திற்கு சுமார் 4 செ.மீ. அளவில் விரிகிறது. பூமியின் மேலடுக்கில் உள்ள கண்டங்களும், கடல்களும் சேர்ந்தே நகர்கின்றன.
இப்படி பூமிக்கு அடியில் இருக்கும் பாறை அடுக்குகள் நகரும்போது ஒரு அடித்தட்டு பிளேட் அடுத்த தட்டு பிளேட்டோடு சொருகும் போது மேல்தட்டு அடுக்கு உயர்ந்து மலைகள் உருவாகின்றன.
உலகத்தில் உயர்ந்த இமயமலையானது இவ்விதம் உருவானதே. நவீன டெக்டோனிக் கொள்கையின்படி இமயமலை இந்திய ஆஸ்திரேலிய தட்டு மற்றும் யூரேசியன் கண்டங்களிடையே நிகழ்ந்த மோதலால் உருவாகியது.
பூமியில் மலைகள் ஏன்? எதற்கு?

உயிர் ஜீவன்கள் வாழ்வதற்கு தேவையான பிரதானமான நீர் மலையிலிருந்தே உருவாகின்றன. மிக உயர்ந்த இடத்தில் பனிக்கட்டி மற்றும் பனியாறு உருவாகிறது. இமயமலையில் மட்டும் சுமார் 15000 பனியாறுகள் உற்பத்தியாகின்றன. இத்தகைய உயர மாறுபாடு மழை அளவு மண்ணின் நிலை மற்றும் மிக அதிக பனிபொழிவு காரணமாக நிறைய தாவரங்களும் விலங்குகளும் உயிர் வாழ உதவுகிறது.
உலகில் மலைகளினால் ஆன நிலப் பரப்பு ஆசியாவின் 64% நிலப்பகுதியும்; ஐரோப்பாவின் 25%நிலப்பகுதியும்; தென் அமெரிக்காவின் 22% ம்; ஆஸ்திரேலியா, ஆப்பிரிக்காக் கண்டங்களில் முறையே 17%, 3% ஆகிய பகுதிகளும் மலைகளினால் மூடப்பட்டுள்ளன. மொத்தமாக உலகின் 24% நிலப்பகுதி மலைகளாக உள்ளன.
உலகின் 10% மக்கள் மலைப் பகுதிகளில் வாழ்கின்றனர். உலகின் 90% ஆறுகள் மலைப் பகுதிகளிலேயே உருவாகின்றன என்பதுடன் உலக மக்களில் 50% மக்களின் நீர் தேவையை இம்மலைகளே நிறைவு செய்கின்றன.
மழை பொழிவதற்கு மலைகள் அவசியம். உதாரணமாக கேரளா மாநிலத்தில் அதிக மழை பொழியக் காரணம் மேற்கு தொடர்ச்சி மலைகள் அங்கு இருப்பதே.
மேற்குத் தொடர்ச்சி மலை (Western Ghats) இந்திய துணைக்கண்டத்தின் மேற்புறத்தில் அரபிக்கடலுக்கு இணையாக அமைந்துள்ள தொடர்மலையாகும். மேற்குத் தொடர்ச்சி மலை அரபிக்கடலில் இருந்து வரும் குளிர்ந்த காற்றைத் தடுத்து அதன் மேற்பகுதியில் அமைந்துள்ள கேரளா மற்றும் மேற்கு கடற்கரையில் நல்ல மழையைத் தருகின்றது.
கடல் வெப்பம் ஆவியாகி மிக உயரம் சென்று மேற்கு தொடர்ச்சி மலைத்தொடரில் பட்டு குளிர்ந்து அங்கு தொடர் மழையைப் பொழிவிக்கிறது.மலை இன்றி மழை இல்லை. மழை இன்றி உயிர் இல்லை .

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 44
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 8 )

وَهُوَ الَّذِىْ مَدَّ الْاَرْضَ وَجَعَلَ فِيْهَا رَوَاسِىَ وَاَنْهٰرًا‌ وَمِنْ كُلِّ الثَّمَرٰتِ جَعَلَ فِيْهَا زَوْجَيْنِ اثْنَيْنِ‌ يُغْشِى الَّيْلَ النَّهَارَ‌ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ
மேலும், அவன் எத்தகையவன் என்றால் அவனே பூமியை விரித்து. அதில் உறுதியான மலைகளையும், ஆறுகளையும் உண்டாக்கினான்;
(குர்ஆன் : 13:3)
( ஆறுகளை உருவாக்குதல் )
அல்லாஹ் மலைகளைப் படைத்து அதில் ஆறுகளை உருவாக்கி சகல ஜீவராசிகளுக்கும் நீரை ஆதாரமாக்கியுள்ளான்.
99% ஆன பனியாறுகள் துருவப் பகுதிகளிலுள்ள பனிவிரிப்புகளில் காணப்படுகின்றது. மற்றவை ஒவ்வொரு கண்டத்திலும் உள்ள மலை குன்றுகளிலும் உயர் தீவுகளிலும் உள்ளன.
புவியில் காணப்படும் நன்னீர் மூலங்களில் மிகப் பெரியதும் இந்த பனியாறுகளே. உலகத்தில் இருக்கும் மக்கள் தொகையின் ஒன்றில் மூன்று மடங்கு மக்களுக்கான நன்னீர்த் தேவை இந்த பனியாறுகளாலேயே பூர்த்தி செய்யப்படுகின்றது.
தாவரங்கள், விலங்குகள் மனிதரின் நன்னீர்த் தேவையை ஈடுசெய்ய முக்கியமாக இந்த பனியாறுகள் பயன்படுகின்றன. உலகின் நீளமான ஆறுகளில் ஒன்றான அமேசான் நதி பெரு நாட்டின் ஆண்டீஸ் மலைத்தொடரில் பணி ஆறாக உருவாகிறது.
நமது இமயமலை பனிச் சிகரங்களில் சிந்து, கங்கை, கோதாவரி, பிரமபுத்ரா,போன்ற நதிகள் உற்பத்தியாகி பல்லுயிர் ஜீவன்களுக்கு பயன் தருகிறது. அத்துடன் ஆறுகளின் பயன்களை அல்லாஹ் கூறுகிறான்.
உங்களுடன் பூமி அசையாதிருப்பதற்க்காக, அவன் அதன் மேல் உறுதியான மலைகளை நிறுத்தினான்; இன்னும் நீங்கள் சரியான வழியை அறிவதற்காக அவன் ஆறுகளையும், பாதைகளையும் அமைத்தான். –அல் குர்ஆன்.16:15
இன்று ஆறுகள் நீர்வழிப் போக்குவரத்திற்கு சிறந்த பாதையாக உள்ளன. நதி செல்லும் பாதையிலேயே மனித நாகரிகங்கள் பிறந்தன, வளர்ந்தன. மேலும் நாடுகளுக்கிடையில் மலைகளும்,நதிகளும் எல்லைகளாக விளங்குகின்றன.
குறிப்பாக ஐரோப்பாவில் ஓடும் நதிகள் இரு நாடுகளுக்கு குறுக்கே ஓடி எல்லைகளாக விளங்குகின்றன. நதியில் பாலம் அமைப்பதன் மூலம் தரை வழி பாதைகளை உருவாக்கி போக்குவரத்திற்கு பெரிதும் பயன்தருகின்றன.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 45
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 9 )

وَهُوَ الَّذِىْ مَدَّ الْاَرْضَ وَجَعَلَ فِيْهَا رَوَاسِىَ وَاَنْهٰرًا‌ وَمِنْ كُلِّ الثَّمَرٰتِ جَعَلَ فِيْهَا زَوْجَيْنِ اثْنَيْنِ‌ يُغْشِى الَّيْلَ النَّهَارَ‌ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ
( زَوْجَيْنِ اثْنَيْنِ - ஸவ்ஜைனித்னைனி )
இன்னும் அதில் ஒவ்வொரு கனிவர்க்கத்திலிருந்தும் இரண்டு இரண்டாக ஜோடிகளை உண்டாக்கினான்; ( குர்ஆன் 13: 3 )
( தாவரங்களில் ஆண்-பெண் ஜோடி )
இது மாதிரி குர்ஆனில் இன்னொரு இடத்தில்
"மேலும் அதில் அழகிய புற்பூண்டுகளை (ஆண்,பெண்) ஜோடியாக முளைப்பிக்கவும் செய்திருக்கின்றோம்." -அல் குர்ஆன்.50;7
தாவரங்களில் இனப்பெருக்கம் செய்யும் செயல்முறை மகரந்தச் சேர்க்கை என்று அழைக்கப்படுகிறது. பூக்களில் ஆண் மற்றும் பெண் பாலின பாகங்கள் உள்ளன. ஒரு பூ என்பது பாலியல் இனப்பெருக்கம் நடைபெறும் தாவரத்தின் ஒரு பகுதியாகும்.
மற்ற உயிரினங்களைப் போலவே, தாவரங்களும் சந்ததிகளை இனப்பெருக்கம் செய்கின்றன. தாவரங்களில் இனப்பெருக்கம் செய்யும் செயல்முறை மகரந்தச் சேர்க்கை என்று அழைக்கப்படுகிறது.
பூக்களில் ஆண் மற்றும் பெண் பாலின பாகங்கள் உள்ளன. பூவின் ஆண் பாலினப் பகுதி மகரந்தம் என்றும், பெண் பாலினப் பகுதி பிஸ்டில் என்றும் அழைக்கப்படுகிறது; மகரந்தத்தின் மகரந்தப் பகுதியில் மகரந்தங்கள் உள்ளன.

தாவரங்களில் காற்று மற்றும் நீர், வண்டு, தேனீக்கள் போன்றவை மகரந்தச் சேர்க்கை நடைபெறும் முறைகளால் பாலியல் இனப்பெருக்கத்திற்கு காரணமாகின்றன. இந்த மகரந்தச் சேர்க்கைகள் புதிய தாவரங்களை உருவாக்குகின்றன. பின்னர், தாவரங்கள் வளர்ந்து விதைகள் மற்றும் பழங்களை கொடுக்கின்றன, இது இனப்பெருக்கம் என்று கருதப்படுகிறது.
தாவர புற்பூண்டு இனங்களில் ஆண்-பெண் ஜோடி உள்ளதா என்று கேள்விக்கு 17 ம் நூற்றாண்டு வரை எவருக்கும் தெரியாது.

1790 ம் ஆண்டு ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த கிருஸ்டியன் கொன்ராடு ஸ்பிரின்ஜெல் என்னும் ஆராய்ச்சியாளரே தாவரங்கள் ஆண்,பெண் ஜோடி,ஜோடியாக உள்ளன என்பதை கண்டு பிடித்து உலகிற்கு அறிவித்தார்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 46**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 10 )**



(இரவு- பகல் )
وَهُوَ الَّذِىْ مَدَّ الْاَرْضَ وَجَعَلَ فِيْهَا رَوَاسِىَ وَاَنْهٰرًا وَمِنْ كُلِّ الثَّمَرٰتِ جَعَلَ فِيْهَا زَوْجَيْنِ اثْنَيْنِ يُغْشِى الَّيْلَ النَّهَارَ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ
“அவனே இரவைப் பகலால் மூடுகிறான்” –அல் குர்ஆன்.!3:3
இராப்பகலைத் தேடிச் செல்லும் நிலப் பகுதிகள்
சூரியன் பூமியைச் சுற்றி வருவதாக நம்பிக் கொண்டிருக்கும் ஒருவர் புவிஈர்ப்பு விசை தம்மைப் பாதிக்காத உயரத்தில் நின்று பூமியின் மீது நடைபெறும் இந்த அற்புதமான காட்சியை (ஒரே இடத்தில் கட்டுண்டு நிற்கும் உதயம் மற்றும் மறைவுக் காட்சிகளைக்) காண்பது விந்தை மிகு காட்சியாக இருக்கும்.
சூரிய குடும்பத்தைப் பொருத்தவரை சூரியன் நகராமல் ஒரே இடத்தில் நிற்கிறது என்பதையும் கருத்தில் கொள்ளவும் சூரியன் நகராமல் ஒரே இடத்தில் நின்றிருக்க பூமி தன்னைத் தானே சுற்றி இராப்பகல் மாற்றத்தைத் தோற்றுவிப்பதே விந்தைகள் தோன்றுவதற்குக் காரணமாகும்.
சூரியன் நகராமல் நின்று விடுவதால் இராப் பகல்களும் நகராமல் நின்று விடுகின்றன. இராப் பகல்கள் நகராமல் நிற்பதால் உதயமும் மறைவும் நகராமல் அதனதன் இடத்தில் கட்டுண்டு நின்று விடுகின்றன. ஆயினும் பூமியின் ஒவ்வொரு நிலப்பகுதிகளும் நகர்ந்து சென்று நகராமல் கட்டுண்டு நிற்கும் உதயம், மறைவு, இரவு மற்றும் பகல் ஆகியவைகளை அவைகள் இருக்கும் இடங்களுக்குச் சென்று பெற்றுக் கொள்கிறது.
சான்றாக பூமியின் ஏதோ ஒரு நிலப்பகுதி. இதை லண்டன் மாநகர் எனக் கொள்வோம். இப்பிரதேசம் சூரியன் உதிக்கும் இடத்திற்கு வருவதற்கு சில வினாடிகளுக்கு முன்னால் வரை லண்டன் மாநகரில் சூரியோதயம் இல்லை. ஆயினும் உதயம் நகராமல் கட்டுண்டு நிற்கும் இடத்திற்கு வந்ததும் லண்டனில் சூரியோதயம் நிகழ்கிறது.
சில நிமிடங்களில் லண்டன் சூரியன் உதிக்கும் இடத்திலிருந்து நகர்ந்து விடுகிறது. உடனே லண்டன் சூரியோதயத்தை இழந்துவிட்டு முற்பகலாகி விடுகிறது.

இப்போது லண்டனைத் தொடர்ந்து அது வரை இரவாக இருந்த பெல்ஜியம் பூமியின் சுழற்சியால் சூரியன் உதிக்கும் இடத்தை அடைகிறது. உடனே அது வரை பெல்ஜியத்தில் இல்லாத சூரியோதயத்தை பெல்ஜியம் பெற்று விடுகிறது.
சில நிமிடங்களில் பூமியின் சுழற்சி பெல்ஜியத்தையும் அந்த இடத்திலிருந்து நகர்த்தி விடுவதால் பெல்ஜியம் சூரியோதயத்தை இழந்து முற்பகலைப் பெறுகிறது.

அதன் பின் பூமியின் சுழற்சி ஜெர்மனியின் பான் (Bonn city) மாநகரை அங்கு கொண்டு வருகிறது. அப்போது பான் நகரமும் அது வரை இல்லாத சூரியோதயத்தைப் பெற்று விடுகிறது. இந்த நிகழ்ச்சிப் போக்கு இவ்வாறே தொடர்கிறது.
சூரியனின் மறைவிடத்தையும் மேற்கூறியவாறே பூமியின் சுழற்சியால் பூமியின் ஒவ்வொரு பிரதேசங்களும் தேடிவந்து பெற்றுக் கொள்கிறது. இவ்வாறு சூரியனுக்கு உதிக்கும் இடமும் உண்டு, மறையும் இடமும் உண்டு எனத் திருக்குர்ஆன் கூறிய இயற்பாடு பூமி அதன் அச்சில் சுழன்று இராப் பகல்களைத் தோற்றுவிக்கும் போதே ஏற்படுகின்றன என ஐயத்திற்கிடமின்றி நாம் கண்டு தெளிந்தோம்.

இவ்வசனத்தின் மூலம் முதலில் இருளாக இருந்த பிரபஞ்சத்தில் சூரியனை படைத்த பின்னரே இரவு பகல் உண்டாகியது என்ற உண்மையையும் கோள்கள் அனைத்தும் உருண்டையாக சுழன்று செல்வதாலே இரவு பகல் மாறி மாறி வருகிறது என்ற தெளிவும் கிடைக்கிறது.
" அவன் எத்தகையவன் என்றால் அவனே பூமியை விரித்து, அதில் உறுதியான மலைகளையும், ஆறுகளையும் உண்டாக்கினான்; இன்னும் அதில் ஒவ்வொரு கனி வர்க்கத்திலிருந்தும் இரண்டு இரண்டு ஜோடிகளை உண்டாக்கினான்; அவனே இரவைப் பகலால் மூடுகிறான்- நிச்சயமாக இவற்றில் சிந்திக்கும் மக்களுக்குப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன." -அல் குர்ஆன்.13:3
( 13 : 3 ) என்கிற மேற்கண்ட ஒரே ஒரு வசனத்தில் ஏராளமான அறிவியல் உண்மைகளை அடைக்கி வைத்து நம்மை அல்லாஹ் சிந்திக்கச் சொல்கின்றான்.
(فِىْ ذٰ لِكَ) - ஃபீ தாலிக
( அதில் ) என்பது பூமி, மலைகள், நதிகள், கனி வர்க்கங்கள், இருள், பிரகாசம் ஆகிய ஒவ்வொன்றிலும் அவற்றைச் சிருஷ்டித்தவனையும் அவனது ஆற்றலையும், விவேகத்தையும், யுக்தியையும் அறிவிக்கக்கூடிய அத்தாட்சிகள் இருக்கின்றன என்பது கருத்து.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 47**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 11 )**



( பல வகை தாவரங்களில் ஏகத்துவம் )
وَ فِى الْاَرْضِ قِطَعٌ مُّتَجٰوِرٰتٌ وَّجَنّٰتٌ مِّنْ اَعْنَابٍ وَّزَرْعٌ وَّنَخِيْلٌ صِنْوَانٌ وَّغَيْرُ صِنْوَانٍ يُّسْقٰى بِمَآءٍ وَّاحِدٍ وَنُفَضِّلُ بَعْضَهَا عَلٰى بَعْضٍ فِى الْاُكُلِ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّعْقِلُوْنَ
இன்னும், பூமியில் அருகருகே இணைந்தார்போல் பல பகுதிகளை (அமைத்து, அவற்றில்) திராட்சைத் தோட்டங்களையும், விளைநிலங்களையும், கிளைகள் உள்ளதும், கிளைகள் இல்லாததுமான பேரீச்சை (வர்க்கத்தை)யும் (அவனே உண்டாக்கினான்;
இவையனைத்திற்கும்) ஒரே தண்ணீர் கொண்டுதான் பாய்ச்சப்பட்டாலும், அவற்றில் சிலவற்றை வேறு சிலவற்றை விட சுவையில் நாம் மேன்மையாக்கியிருக்கின்றோம்; நிச்சயமாக இவற்றில் உணர்ந்தறியும் மக்களுக்கு பல அத்தாட்சிகள் இருக்கின்றன. (குர்ஆன் : 13:4)
இந்த பூமியில் இறைவன் அமைத்துள்ள ஏற்பாடுகள் அற்புதமாக இருக்கின்றன. ஒன்றையொன்று அடுத்திருக்கும் பல நிலப் பகுதிகள் இந்த பூமியில் இருக்கின்றன. அத்தனை பகுதிகளும் ஒன்றைப்போல் மற்றொன்று இல்லை. மாறுபட்ட நிலைகளே அவற்றில் காணப்படுகின்றன.
அதாவது பூமியின் ஒரே பகுதியில், மக்களுக்குப் பயனளிக்கும் பொருட்களை விளைவிக்கும் நல்ல நிலமும், அதன் அருகிலேயே எதுவும் முளைக்காத உவர் நிலமும் உள்ளன.
இதில் வண்ண வித்தியாசமுள்ள நிலப் பகுதிகளும் அடங்கும். இது செம் மண். அது வெண்மண், இன்னொன்று மஞ்சள் மண், மற்றொன்று கறுப்பு மண், இது கற்பாங்கான நிலம்: அது இலகுவான நிலம். இது கெட்டியான பூமி; அது மிருதுவான பூமி. எல்லாம் அருகருகே இருக்கலாம்.

மண்ணில் பத்துக்கும் மேற்பட்ட வகைகள் உண்டு

1 செம்பூர மண் 2 செந்நிற களிச்சேற்று மண் 3 செம்மண் 4. மஞ்சள் நிற மண் 5. சரளை மண் 6 மலையடிவார மண் ?. பாலைவன மண் 8. சாம்பல், பழுப்பு மண் 9 கரிசல் மண் 10 செம்மண், கரிசல் கலப்பு மண் 11 குன்று மலை மண் 12 வண்டல் மண் 13, உபயோகப்படாத மண்
வடிவிலும் மண்ணின் நிறத்திலும் அமைப்பிலும் அதில் விளையக்கூடிய உற்பத்திப் பொருள்களிலும் அதிலிருக்கின்ற சுரங்கங்களிலும் கனிகளிலும் ஒன்றைப் போன்று மற்றொன்றில்லாமல் மாறுபட்டே இருக்கின்றன.
இத்தனை மாறுபாடுகள் இருந்த போதிலும் அவை பிரிந்து தனித்தனியாக இல்லாமல் இணைந்து ஒரே பூமியாகவே காட்சியளிக்கிறது. இதனைக் குறித்தே ஒன்றையொன்று அடுத்திருக்கும் பகுதிகள் என இவ்வசனத்தில் குறிப்பிடுகின்றான்.
இவை யாவும் சுயமாக இயங்கும் படைப்பாளன் ஒருவன் இருக்கின்றான் என்பதற்கு அடையாளங்களாகும் அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை என்பதை அவை பறைசாற்றுகின்றன.
இங்கு கிளை மரங்கள் உள்ள ( ஸின்வான் ) பேரீச்ச மரம் என்பது ஒரே விதையில் பல வேர்கள் உருவாகி முளைக்கும் ஒன்றுக்கு மேற்பட்ட மரங்களைக் குறிக்கும்.
கிளை இல்லா பேரிச்சம் மரம் (ஃஹைரு வின்வான்) என்பது ஒரே வேரிலிருந்து முளைக்கும் ஒற்றை மரத்தை குறிக்கும்.
முந்தியதற்கு மாதுளை மற்றும் அத்தி மரங்கள் உதாரணங்களாகும். பிந்தியதற்கு (சாதாரணமான) இதர மரங்கள் உதாரணங்களாகும்.
பேரீச்சை மரங்களைக் கவனிக்கும்பொழுது, ஒரு வேரிலிருந்து ஒரே தூரை அடியைக் கொண்ட மரமும், ஒருவேரிலிந்து ஒன்றுக்கு மேற்பட்ட பல தூருகளைக் கொண்ட மரங்களும் உற்பத்தியாகின்றன.

இயற்கையாகவே அனைத்து மரங்களும் கிளைகளுடன் இருப்பதை நாம் பார்த்திருப்போம். ஒரு சில மரங்கள் கிளை இன்றி வளர்ந்து இருக்கும். கிளையின்றி அவை வளருவதற்கான காரணம் ஏன் என்று தெரியுமா.?
பனை , தென்னை மற்றும் பேரீச்ச மரங்கள் தான் கிளைகள் இன்றி காணப்படும். பனை, தென்னை பேரீச்ச மரத்தில் கிளைகள் இன்றி உயரம் உயரம் வளர கூடிய மரவகையை சேர்ந்தவை.
இந்த மரங்களின் தண்டு பகுதியில் "ஸ்கெலரன்கிமா" எனும் கார்டிகல் நாரிழைகள் காணப்படுகின்றன. இவை எளிமையான திசுக்களை கொண்டிருக்கும். எனவே இந்த நாரிழைகள் நேரடியாக வளரும் தன்மையுடையவை.
இந்த வகை மரங்கள் மிக உயரமாக வளருவதால், மரத்தில் கிளைகள் வளர இவை அனுமதிப்பதில்லை. எனவே தான், பனை மற்றும் தென்னை மரங்களில் கிளைகள் இருப்பதில்லை.
சமீப காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட இந்த அறிவியல் உண்மையை திருக்குர்ஆன் 1000 ஆண்டுகளுக்கு முன்பே இவ்வசனத்தில் எடுத்துரைத்திருப்பதைக் காணலாம்.
அடுத்து அதில் உற்பத்தியாகின்ற பொருட்களைக் கவனிக்கும் பொழுது, திரட்சைத் தோட்டங்களும், பற்பல வகையான விவசாயங்களும், பேரீச்சை மரங்களும் இன்னும் எத்தனையோ வகையான கனி வர்க்கங்களும் அதில் இருக்கின்றன.
ஒரு வாழை மரத்தைக் கவனித்தால் ஒரு கிழங்கிலிருந்து பல மரங்கள் தோன்றுகின்றன. இப்படி எத்தனையோ மரங்கள்!
ஆனால் இப்படிப் பலவகையான விருட்சங்களையும் கனிகளையும், கொண்ட அவற்றிற்கு ஒரே தண்ணீர் தான் பாய்ச்சப்படுகிறது. அதனைக் கொண்டு உற்பத்தியாகின்ற அவை பல்வேறு தன்மைகளைக் கொண்டிருக்கின்றன.
அவற்றின் சுவையைக் கவனிக்கும்பொழுது ஒன்றைப்போன்று மற்றொன்று இருப்பதில்லை. இதனைக் குறித்தே, அவற்றில் சிலதை சிலதைவிட சுவையில் நாம் சிறப்பாக்கி வைத்திருக்கின்றோம் எனக் குறிப்பிடப்படுகிறது. உணரக் கூடிய கூட்டத்தினருக்கு இதில் பல ஆதாரங்கள் நிச்சயமாக உள்ளன.
பூமி ஒன்றுதான். அதில் எத்தனை மாறுதல்கள் இருப்பினும் தனித்தனியே இல்லாமல் ஒன்றோடொன்று இணைந்தே இருக்கின்றன.
மேற்கண்ட காரியங்களை மனித சக்தியால் செய்துவிட முடியுமா? சற்று சிந்தித்துப் பார்ப்போர் இறைவனின் சக்தியையும், அவனுடைய ஏகத்துவத்தையும் அப்பொருட்கள் ஒவ்வொன்றிலும் காணலாம்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 48**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 12 )**




( "நிச்சயமாக நாங்கள் (மரித்து) மண்ணாகிவிட்ட பிறகு நாம் புதிதாக படைக்கப்படுவோமா?")

وَ اِنْ تَعْجَبْ فَعَجَبٌ قَوْلُهُمْ ءَاِذَا كُنَّا تُرٰبًا ءَاِنَّا لَفِىْ خَلْقٍ جَدِيْدٍ اُولٰٓٮِٕكَ الَّذِيْنَ كَفَرُوْا بِرَبِّهِمْ وَاُولٰٓٮِٕكَ الْاَغْلٰلُ فِىْۤ اَعْنَاقِهِمْ وَاُولٰٓٮِٕكَ اَصْحٰبُ النَّارِ هُمْ فِيْهَا خٰلِدُوْنَ

(அவர்களிடம் நம்பிக்கை இல்லையே என்று நபியே!) நீர் ஆச்சரியப்படுவீராயின் அவர்கள், "நிச்சயமாக நாங்கள் (மரித்து) மண்ணாகிவிட்ட பிறகு நாம் புதிதாக படைக்கப்படுவோமா?" என்று கூறுவது (இதைவிட) ஆச்சரியமானதே! இவர்கள் தாம் தங்களுடைய இறைவனையே நிராகரிப்பவர்கள் (ஆகவே, மறுமையில்) இவர்களுடைய கழுத்துகளில் விலங்கிடப்படும்; இவர்கள் நரகவாசிகளே யாவார்கள்; இவர்கள் அதில் என்றென்றும் இருப்பார்கள். (குர்ஆன் : 13:5)

மனிதன் தன் எதிர்காலத்தைப் பற்றி சிந்திக்காமல் தற்காலிக சுகங்களை மட்டும் நோக்கமாகக் கொண்டு வாழ்வதைக் கண்டு வியப்படைகிறீர்களா? இதனால்தான் அவர்கள், "நாங்கள் மரித்து மண்ணோடு மண்ணாகிவிட்ட பின்பு, நாம் மீண்டும் புதிதாகப் படைக்கப்படுவோமா?" என்று கேட்கிறார்கள்.
மனித வாழ்க்கை மரணத்திற்குப் பின்பும் தொடர்கிறது என்கிற உண்மையை அவர்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை. இந்த அளவிற்கு "தற்காலிக சுகவாழ்வு'' எனும் வலையில் சிக்கிக் கொள்கிறார்கள். இதனால் அவர்களுடைய எதிர்கால நிலையான மறுமை வாழ்வு கேள்விக்குறியாக ஆகிவிடுகிறது.
"நிச்சயமாக நாங்கள் (மரித்து) மண்ணாகிவிட்ட பிறகு நாம் புதிதாக படைக்கப்படுவோமா?" என்று கூறுவது (இதைவிட) ஆச்சரியமானதே! என்று அவர்கள் கூறுகிறார்கள் இது ஆச்சரியத்திற்குரியதுதான்.
ஏனெனில் வானங்களையும் பூமியையும் படைப்பது மனிதர்களைப் படைப்பதை விட மிகப்பெரிய விஷயம் ஆரம்பத்தில் படைத்தவனுக்கு மறுபடியும் படைப்பது எளிதான ஒன்றாகும் இதை அறிவுள்ள ஒவ்வொருவரும் அறிவர்.
''மனிதனின் உடலில் எலும்பு ஒன்று உள்ளது. அதை பூமி ஒருபோதும் புசிக்காது. அதை வைத்தே மீண்டும் மறுமையில் அவன் படைக்கப்படுவான்''.
அப்போது அருகில் இருந்த தோழர்கள் கேட்டனர் 'அது எந்த எலும்பு என்று எங்களுக்கு விளக்கிச் சொல்ல முடியுமா?'
அதற்கு நபிகளார் பதில் அளிக்கும்போது, 'உள்வால் எலும்பின் நுனி' என்றார்கள். (முஸ்லிம்–5662)
ஜெர்மன் விஞ்ஞானி ஹான்ஸ் ஸ்பீமேன் என்பவர் உள்வால் எலும்பு நுனி குறித்து தீவிரமாக ஆராய்ந்தார். அதனை பல ஆயிரம் டிகிரி வெப்பத்தில் நெருப்பில் எரிக்கவும், வீரியம் மிக்க அமிலங்களின் கலவை கொண்டு அதனை கரைக்கவும் முயற்சி செய்தார். அதில் சிறு மாறுதலைக் கூட அவரால் செய்ய முடியவில்லை. ஆராய்ச்சியின் முடிவாய் திருக்குர்ஆன் வார்த்தைகளை உண்மைபடுத்தி உலகிற்கு அறிவித்தார்.

.... இப்படி எத்தனையோ அத்தாட்சிகளைக் கொண்டு அற்புத படைப்பாய் மனிதனை அல்லாஹ் படைத்திருக்கின்றான். சிந்தித்து பார்க்கும் மக்கள் அவனுக்கு சிரம் பணிய வேண்டாமா?
நீங்கள் பார்த்த " ஜுராசிக் பார்க்" சினிமா படத்தில் தொல்லுயிர்ப் படிமத்திலிருந்து டைனோஸர் செல்லின் மரபணுவைப் பிரித்தெடுத்து , அதைப் பல படிகளாகப் பெருக்கி , வேறொரு விலங்கின் கருவினுள் செலுத்தி, லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் அழிந்த டைனோஸர் இனத்தை மீண்டும் உயிரோடு உருவாக்கி விடுகிறார் ஒரு விஞ்ஞானி.
அடைத்து வைக்கப்பட்டிருந்த டைனோஸர்கள் தப்பி வெளியேறி அட்டகாசம் செய்யும்போது, அவற்றிடம் இருந்து எப்படியோ தப்பித்து , அந்த இனத்தைத் திரும்பவும் அழிக்கிறார்கள் என்பதே கதை !
இக்கதையின் கருத்து பல நாட்டு விஞ்ஞானிகளை ஈர்த்தது. எப்போதோ அழிந்து போன உயிரினங்களின் ஒற்றை செல்லை வைத்து மரபணு தொழில் நுட்ப விஞ்ஞானத்தின் மூலம் மீண்டும் அழிந்து போன உயிரினத்தை உருவாக்கலாம் என்ற கருத்து இப்போது மேலோங்கி இருக்கிறது !
அழிந்து போன ஓர் உயிரினத்தைப் போலவே குணங்களைக் கொண்ட இன்னொரு உயிரினம் இப்போது வாழ்ந்து கொண்டிருக்கும் . அதிலிருந்து கரு முட்டையைத் தனியாக பிரித்தெடுத்து அதன் செல்களில் இருக்கும் நியூக்ளிக் அமிலத்தை நீக்கிவிட்டு, அழிந்து போன உயிரினத்தின் செல்லிருந்த நியூக்ளிக் அமிலத்தை அதில் பொருத்த வேண்டும் .
பின் மிதமான மின்சாரத்தை பாய்ச்சி தூண்டி விட , இது வளர ஆரம்பிக்கும் . போதுமான வளர்ச்சி அடைந்ததும் , அந்த கருமுட்டை பிரித்தெடுக்கப்பட்ட உயிரினத்தின் கருவில் செலுத்தினால் அது அழிந்த போன உயிரினத்தின் குட்டி பிறக்கும். அவ்வளவுதான்.
இந்த சினிமா விஞ்ஞான கற்பனைதான் என்றாலும் உண்மையை விரைவில் தொடும் சாத்தியம் இருப்பதாக விஞ்ஞான உலகம் உறுதியளிக்கிறது.

"வானங்களையும், பூமியையும் படைத்து அவற்றின் படைப்பால் எவ்வித சோர்வுமின்றி இருக்கின்றானே அல்லாஹ் அவன் நிச்சயமாக மரித்தோரை உயிர்ப்பிக்கும் ஆற்றலுடையவன்; ஆம்! நிச்சயமாக அவன் எல்லாப் பொருள்கள் மீதும் பேராற்றலுடையவன் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா? " (குர்ஆன் : 46:33)
இந்த உண்மையை பொய் என்று கூறுவோரின் நிலை குறித்து அல்லாஹ் விவரிக்கிறான் :
"அவர்கள் தம் ஏக இறைவனை மறுப்பவர்கள் ஆவர். நரகத்தில் அவர்களின் கழுத்துக்களில் விலங்குகள் மாட்டப்பட்டு இருக்கும். அதாவது அவர்கள் தம் கழுத்துகளில் விலங்குகளால் பிணைக்கப்பட்டு நரகத்தில் இழுத்துச் செல்லப்படுவார்கள்.
அவர்கள் நரகவாசிகள். அதில் அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள் அதாவது அதிலேயே என்றென்றும் தங்கி விடுவார்கள். அதிலிருந்து திரும்பவும் மீளவும் மாட்டார்கள்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 49**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 13 )**




بِسۡمِ ٱللَّهِ ٱلرَّحۡمَٰنِ ٱلرَّحِيمِ

وَيَسۡتَعۡجِلُونَكَ بِٱلسَّيِّئَةِ قَبۡلَ ٱلۡحَسَنَةِ وَقَدۡ خَلَتۡ مِن قَبۡلِهِمُ ٱلۡمَثُلَٰتُۗ وَإِنَّ رَبَّكَ لَذُو مَغۡفِرَةٖ لِّلنَّاسِ عَلَىٰ ظُلۡمِهِمۡۖ وَإِنَّ رَبَّكَ لَشَدِيدُ ٱلۡعِقَابِ ٦

(இறை அச்சத்திற்கும், இறை ஆதரவுக்கும் மத்தியில் ஈமான் )
وَيَسْتَعْجِلُوْنَكَ بِالسَّيِّئَةِ قَبْلَ الْحَسَنَةِ وَقَدْ خَلَتْ مِنْ قَبْلِهِمُ الْمَثُلٰتُ وَاِنَّ رَبَّكَ لَذُوْ مَغْفِرَةٍ لِّلنَّاسِ عَلٰى ظُلْمِهِمْ وَاِنَّ رَبَّكَ لَشَدِيْدُ الْعِقَابِ
(நபியே!) நன்மை (வருவதற்கு) முன்னர், தீமையைக் கொண்டு (வருமாறு) உம்மை இவர்கள் அவசரப்படுத்துகிறார்கள்; நிச்சயமாக இவர்களுக்கு முன்னரும் (வேதனை மிக்க தண்டனைகள் வழங்கப்பட்ட உதாரணமான) நிகழ்ச்சிகள் நடந்தேயிருக்கின்றன;
நிச்சயமாக உம் இறைவன் மனிதர்களை அவர்களின் பாவங்களுக்காக மன்னிப்பவனாகவும் இருக்கின்றான்; மேலும், உம் இறைவன் நிச்சயமாக வேதனை செய்வதிலும் கடுமையானவனாக இருக்கின்றான். (குர்ஆன் : 13:6)
மக்கத்து முஷ்ரிக்குகளிடம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இஸ்லாமியப் பிரசாரம் செய்த போது, கியாமத்து நாளில் வரக்கூடிய வேதனையையும், சில சமயங்களில் இவ்வுலகில் துன்மார்க்கர்களுக்கு வரக்கூடிய ஆபத்துகளையும் கூறி உபதேசம் செய்வது வழக்கம்.
மறுமையைப் பற்றிக் கூறும் பொழுது, மரணத்துக்குப் பிறகு மனிதன் உயிர்ப்பிக்கப்படுவதை அவர்கள் நிராகரிப்பதும், இவ்வுலகில் வரக்கூடிய ஆபத்துகளைக் கூறும் பொழுது. அவற்றை உடனே வரச் செய்ய வேண்டுமென அவர்கள் பரிகாசமாகக் கூறுவதும் வழக்கம்.
இதற்கு மறுமொழியாக இறைவன் இந்த ஆயத்தை அருளி "குற்றஞ் செய்தவர்களுக்கு இதற்கு முன் வேதனைகள் வந்திருக்கின்றன. ஆகவே, இப்பொழுதும் அவர்களுக்கு வேதனையை அனுப்ப அவனால் முடியாது என்பதில்லை. என்றாலும், இவைகள் எல்லாம் தெரிந்திருந்தும் அவர்கள் அக்கிரமங்களையே செய்கின்றனர்.
அவ்வாறு அவர்கள் அக்கிரமங்கள் செய்யும் நிலையிலும் அவர்களுக்கு அவன் மன்னிப்பளிப்பவனாகவே இருக்கிறான். ஆயினும், அவன் வேதனை செய்யத் தொடங்கினால் அதிலும் அவன் மிகக் கடுமையானவனே" என்று பதிலளித்துள்ளான்.
இறையச்சம் என்பது அல்லாஹ்வின் நினைவு நிறைந்த வேறுபட்ட மாறுபட்ட சிந்தனைகள் தோன்றாத இதயம். எச்செயலையும் இறைவனால் அங்கீகரிக்கப்பட்டதா என்று ஆய்ந்து செய்து அங்கீகரிக்கப்படாதவற்றை அடியோடு தவிர்த்து குர்ஆன் கூறும் வரம்பை மீறாது மேன்மையாய் வாழ வழிகாட்டும்.
ஒவ்வொரு நபியும் அவரவர் கால மக்களுக்கு இறையச்சத்தை வலியுறுத்தி ஒவ்வொரு நிலையிலும் இறையச்சத்தோடு செயல்பட சொன்னார்கள் என்பதை குர்ஆன் ...
ஏக இறை கொள்கையை ஏற்காத மக்களிடம் ஏக இறை கொள்கையை எடுத்துரைத்து நீங்கள் அல்லாஹ்விற்கு அஞ்ச மாட்டீர்களா? என்று நூஹ் நபி கேட்டதை நவில்கிறது (குர்ஆன் 26-10) வசனம்.
அல்லாஹாவிற்கு இணைவைத்து செய்யாதன செய்த ஸமூத் சமுதாயத்தை நோக்கி ஸாலிஹ் நபி நீங்கள் அல்லாஹ்விற்கு அஞ்சமாட்டீர்களா? என்று கேட்டதை எடுத்துரைக்கிறது குர்ஆன் (26-142)
தன்னைத் தானே இறைவன் என்று பிரகடனப்படுத்தி பேரழிவு பாதையில் ஆட்சி செய்த பிர்அவ்னிடம் சீரழியாமல் சிறப்பாக ஆட்சி புரிய அல்லாஹ் ஒருவனை வணங்கி அல்லாஹ்விற்கு அஞ்சி வாழ இப்ராஹீம் நபி அறிவுறுத்தியதை குர்ஆன் (26- 16 - 26 )
இந்த ஆயத்து (குர்ஆன் : 13:6) அருளப்பட்ட பொழுது "அவனது மன்னிப்பும் ரட்சிப்பும் இல்லாமலிருந்தால் எவருக்கும் வாழ்வே இருக்க முடியாது. அவனது அச்சுறுத்தல் இல்லாமலிருந்தால் அனைவரும் அவனது கிருபையை நம்பியே இருந்து விடுவர்" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக கூறப்படுகிறது.
ஈமான் (ஓர்இறை விசுவாசம்] என்பது இறை அச்சத்திற்கும், இறை ஆதரவுக்கும் மத்தியிலிருக்கிறது என்ற விதி இந்த ஆயத்திலிருந்துதான் ஏற்பட்டதென்பதாக அறிஞர்கள் கூறி இருக்கின்றனர்.
மனிதன் நோயில்லாமல் ஆரோக்கியமாக இருக்கும் காலத்தில் இறைவனை அஞ்சிக் கொண்டே இருப்பதுதான் சிறந்தது. இவ்விதப் பயம் இருந்தால்தான் நன்மையான காரியங்களைச் செய்யவும். பாவங்களைத் தவிர்த்துக் கொள்ளவும் முடியும்.

அவன் நோயாளியாகி விட்டால், எச்செய்கையுஞ் செய்து கொள்ள அவனால் இயலாது. அவ்வாறான சந்தர்ப்பத்தில், இறைவனது கிருபையை நம்பியும் ஆசை வைத்தும் இருப்பது சிறந்தது.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 50**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 14 )**




وَيَقُوْلُ الَّذِيْنَ كَفَرُوْا لَوْلَاۤ اُنْزِلَ عَلَيْهِ اٰيَةٌ مِّنْ رَّبِّهٖ اِنَّمَاۤ اَنْتَ مُنْذِرٌ وَّ لِكُلِّ قَوْمٍ هَادٍ
இன்னும் (நபியே! உம்மைப்பற்றி இந் நிராகரிப்போர் "அவருக்கு அவருடைய இறைவனிடமிருந்து (நாம் விரும்பும்) அத்தாட்சி இறக்கப்படட வேண்டாமா?" என்று கூறுகிறார்கள்; நீர் அச்சமூட்டி எச்சரிப்பவரே ஆவீர், மேலும், ஒவ்வொரு சமூகத்தவருக்கும் ஒரு நேர்வழி காட்டியுண்டு. (குர்ஆன் : 13:7)
ஆயத்துன் (அத்தாட்சி) என்பதற்கு அற்புதச் செய்கை என்பது கருத்து.
ஹளரத் மூஸா (அலை)அவர்கள் காலத்தில், அவர்களுடைய சமூகத்தாரிடம் சூனியஞ் செய்தல் மிகைத்திருந்தது. ஆதலால், அவர்களுடைய அத்தொழிலுக்கு இயைந்தவாறு கடல் பிளத்தல், கைத்தடி பாம்பாக மாறுதல் போன்ற பல அற்புத சக்திகளைக் கொடுத்தான்
ஹளரத் ஈஸா ( அலை ) அவர்கள் காலத்தில் மருத்துவ தொழில் அவர்களுடைய சமூகத்தில் மிகைத்திருந்தது. ஆதலால், அத்தொழிலைத் தோற்கடிக்கக் கூடியவாறு மருத்துவர்கள் இயலாது என்று கைவிட்ட பிறவிக் குருடு, வெண்குஷ்டம்,மரணித்தவர் உயிர்த் தெழும்புதல், இளம்பிள்ளை முடக்குவாதத்தை குணப்படுத்தல் போன்ற அற்புத சக்தியை ஈஸா ( அலை ) அவர்களுடைய ஸ்பரிசம் பட்ட மாத்திரத்தில் குணமாயின.

நமது நபி ( ஸல் )அவர்களுடைய காலத்தில் கவி சொல்லல், சாதுர்யமாகப் பேசுதல் போன்ற இலக்கண இலக்கியக் கல்விகள் அரபியரில் மிகைத்திருந்தன.அவர்களுடைய பின் சந்ததியினர் அறிவுத்திறன் கொண்டு விண்ணுலகப் பயணம் செய்யும் ஆற்றலையும் பெற்றிருந்தனர்.
ஆதலால், அவர்களைத் தோற்கடிக்கக் கூடியவாறு நிரந்தரமான அறிவு நிரம்பிய மிக அற்புதமாக திருக்குர்ஆனை இறைவன் அருளினான். இதன் சொற்சுவையையும் சொல் நயத்தையும் பொருட் பொலிவையும் நடையழகையும் இலக்கண அழகையும் கண்டு அரபு நாட்டிலுள்ள பெரும் பெரும் அறிஞர்களும் மிகப் பெரிய புலவர்களும் திகைத்தனர்.
பின் சந்ததியினர் செய்யப்போகும் விண்ணுலகப் பயணத்திற்கு முன்பாக நபி (ஸல்) அவர்கள் "மிஃராஜ்" என்ற விண்வெளிப் பயணத்தையும் இறைவன் கொடுத்தான்.
இவ்வாறான அற்புதத்தை இறைவன் நபி (ஸல்) அவர்களுக்கு அளித்துங்கூட அத்திருமறையை அவர்கள் விசுவாசிக்காமல், நபி (ஸல்) நபிப் பதவியை அடைந்துள்ளார்கள் என்பதைப் பிரத்தியட்சமாக அறிவிப்பதற்குள்ள அற்புதமாக...

மக்காவிலுள்ள 'ஸஃபா' எனும் கல் மலையைப் பொன்மலையாக அவர் மாற்ற வேண்டும் என்றும், மக்காவைச் சுற்றியுள்ள மற்ற மலைகளையெல்லாம் அகற்றிவிட்டு, அங்கெல்லாம் நதிகளையும், மேய்ச்சல் நிலங்களையும் அவர் உருவாக்க வேண்டும் என்றும் இணை வைப்பாளர்கள் கேட்டு அடம்பிடித்தார்கள். அவர்களுடைய இக்கோரிக்கை இங்கு மறுக்கப்படுகிறது. உண்மையாகவே அவர்கள் விசுவாசங் கொள்ளும் நோக்கத்துடன் கோரியிருந்தால், அவர்களுடைய கோரிக்கை ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கும். தவிர, அவ்விரோதிகள் ஒவ்வொருவருடைய கோரிக்கையையும் நிறைவேற்றும் முறையில் அற்புதங்களைச் செய்து கொண்டிருந்தால், நபித்துவத்தின் கடனாகிய சன்மார்க்கப் பிரச்சாரத்தை நிறைவேற்ற அவகாசம் கிடைக்கவே மாட்டாது.

" மேலும் (அவர்கள் கோரியபடி) அற்புதங்களை அனுப்ப நமக்குத் தடையாக இருப்பதே, (அவர்களுடைய) முன்னோர்கள் அவற்றைப் பொய்யெனக் கூறியதுதான்" குர்ஆன் (17:59)
எனவே ஏனைய நபிமார்களைப் போல் நீரும் மனிதர்களுக்கு அவர்களுடைய இறுதிக்காலத்தில் வரக்கூடிய தீங்கைக் குறித்து எச்சரிக்கை செய்பவர்தான் என்பதாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 51
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 15 )




( ஒரு பெண் கர்ப்பத்தில் சுமந்து கொண்டிருப்பது என்ன ? )
اَللّٰهُ يَعْلَمُ مَا تَحْمِلُ كُلُّ اُنْثٰى وَمَا تَغِيْضُ الْاَرْحَامُ وَمَا تَزْدَادُ‌ وَكُلُّ شَىْءٍ عِنْدَهٗ بِمِقْدَارٍ
ஒவ்வொரு பெண்ணும் (கர்ப்பத்தில்) சுமந்து கொண்டிருப்பதையும், கர்ப்பப்பைகள் சுருங்கி குறைவதையும், அவை விரிந்து அதிகரிப்பதையும் அல்லாஹ் நன்கறிவான்; ஒவ்வொரு பொருளுக்கும் அவனிடம் அளவு இருக்கின்றது. (குர்ஆன் : 13:8)
( இவ்வசனத்திற்கு 'தப்ஸீருல் ஹமீத்' சொல்லப்பட்டிருக்கும் விண்ணை முட்டும் வியப்பான செய்திகளை அப்படியே உங்களுக்குத் தருகிறேன். பின்பு குர்ஆன் 13:8 வசனத்திற்கு நவீன விஞ்ஞான விளக்கத்தை அடுத்தப் பதிவில் தருகிறேன் )
ஒவ்வொரு பெண்ணும் எதைச் சுமக்கிறாள் என்பதையும், கர்ப்பப் பைக்குள் குறைப்பதையும் கூட்டுவதையும் அல்லாஹ் அறிகிறான். இன்னும், ஒவ்வொரு பொருளும் அவனிடத்தில் ஒரு அளவிலிருக்கிறது
( குர்ஆன் 13:8 )

பெண்களது கர்ப்பப் பையினுள் இருப்பது குழந்தையா அல்லது வேறு பொருளா? குழந்தை ஆணா அல்லது பெண்ணா? அல்லது ஆணும் பெண்ணுமற்றதா? அல்லது ஆண் பெண் என்று பிரித்துக் கூற முடியாத குன்தாமுஷ்கிலா ?
குழந்தையின் குணங்களும் நடத்தைகளும் எவ்வாறு இருக்கும். அதன் நிறம் என்ன? அது எத்தனை வயதுக்கு வாழும்? அவர்கள் சன்மார்க்கர்களா? அல்லது துன்மார்க்கர்களா? அவர்கள் அறிஞர்களா? அறிவற்றவர்களா? என்பன போன்ற சகல விஷயங்களையும் அல்லாஹுதஆலா அறிகிறான் என்ற விபரத்தை ஒவ்வொரு பெண்ணும் எதைச் சுமக்கிறாள் என்பதை அல்லாஹ் அறிகிறான் என்ற வசனம் குறிக்கிறது.
குறிகாரர்கள், பிறந்த குழந்தையைக் குறித்துச் சில விபரங்களைக் கூற முடியும். என்றாலும், அவ்விபரங்களை நிச்சயமாக நம்புவதற்குமில்லை. அவ்விபரத்தைக் கூறுகிற ஜோதிடர்களுக்கும் கூட அவர்கள் கூறும் விபரம் உண்மைதான், தவறாமல் நிகழும் என்ற உறுதியான நம்பிக்கையில்லை.
மேலும், ஜோதிடர்கள் கூறும் விபரங்களில் சில உண்மையாகவும் பல பொய்யாகவும் இருப்பதை யாவரும் அறிவர். சில விஷயங்களை இவர்கள் தெரிந்து கொள்ளவே முடிவதில்லை.
ஆனால், அல்லாஹுதஆலாவுடைய அறிவு அவ்வாறல்ல, அவன் அறிந்திருப்பதன் பிரகாரமே யாவும் நிகழும். அது பொய்யாகாது. ஆதலால், கர்ப்பத்தைக் குறித்து இறைவன் அறிந்திருப்பதை ஜோதிடர்கள் போன்றவர்கள் அறிவதற்கு சமமாகக் கருத இடமில்லை.

وَمَا تَغِيْضُ الْاَرْحَامُ وَمَا تَزْدَادُ
"இன்னும் கர்ப்பங்கள் குறைப்பதையும் கூட்டுவதையும் என்ற வசனத்துக்கு கர்ப்பங்கள் குறைவதையும் அதிகமாவதையும் என்று பொருள் கொள்ளலாம். இவ்விருவகைப் பொருளுக்கும் கருத்துக்களில் .வித்தியாசமில்லை
குழந்தைகளில் சில பெரியதாகவும் சில சிறியதாகவும் சில அங்கங்கள் பூர்த்தியாகவும் சில ஊனமுற்றதாகவும் இருப்பதை இவ்வசனம் குறிப்பிடுகிறது. கர்ப்பத்தினுள் சிசு இருக்கும் காலத்தை இவ்வசனம் குறிப்பிடுவதாகவும் கூறப்படுகிறது.
கர்ப்பத்தின் குறைந்த காலம் ஆறு மாதம். ஆறு மாதத்துக்குக் குறைந்த சிசு அங்கங்கள் செவ்வையாகவும் உயிருடையதாகவும் இருக்க மாட்டாது என்பதாக எல்லா இமாம்களும் ஏகோபித்துக் கூறி இருக்கின்றனர்.
கர்ப்பத்துக்கு அதிகப்படியான காலம் ஒன்பது மாதம் முதல் இரண்டு வருடம் வரை என்பதாக இமாம் அபூஹனீஃபா ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறியிருக் கிறார்கள்.
நான்கு வருட காலம் என்று இமாம் ஷாஃபிஈ ரஹ்மத் துல்லாஹி அலைஹி அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

ஐந்து வருட காலம் என்று இமாம் மாலிக் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறியிருக்கிறார்கள்.
ரிவாயத்து:- லஹ்ஹாக்கிப்னு முஜாஹிம் ரஹ்மத்துல்லாஹி அலைஹி என்னும் தாபிஈ, தனது தாயின் வயிற்றில் இரண்டு வருட காலமிருந்ததாகவும், இமாம் மாலிக் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் மூன்று வருட காலம் வரை கர்ப்பத்தில் இருந்ததாகவும், ஜலாலுத்தீனிஸ் ஸுயூத்தீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுடைய முஹ்ளராத்து என்ற கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது.
இமாம் மாலிக் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுடைய அயலகத்தாள் (மனைவி) நான்கு ஆண்டுக்கு ஒரு சிசு வீதம் தொடர்ந்து மூன்று சிசுக்களைப் பிரசவித்ததாகவும், ஹரமுப்னு ஹப்பான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி தமது தாயின் கற்பத்தில் நான்கு வருடம் இருந்ததாகவும் இமாம் மாலிக் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறி இருக்கிறார்கள்.

கர்ப்பக் குறைவு என்பது எட்டு மாதமும் அதற்குக் குறைவான காலமுமாகும் என்றும், கர்ப்பம் அதிகமாகுதல் என்பது ஒன்பது மாதத்துக்கு அதிகமான காலம் என்று இமாம் ஹஸன் ரஹ்மத் துல்லாஹி அலைஹி அவர்கள் கூறியுள்ளார்கள்.
தவிர, குறை மாதத்திலேயே குழந்தை பிறந்து விடுவதற்கு காப்பக் குறைவு என்றும், பூர்த்தியான காலத்தில் குழந்தை பிறப்பதற்கு கர்ப்பம் அதிகமாதல் என்றும் கூறப்படுவதாக இமாம் ஹஸன் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறியிருக்கிறார்கள்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தாயின் வயிற்றில் எத்தனை காலம் இருந்தனர் என்பதில் கருத்து வேறுபாடு இருப்பதாக அன்ஸானுக் உயூன் என்னும் நூலில் கூறப்பட்டிருக்கிறது.
அதாவது கர்ப்பத்திலுள்ள சிசுக்கள் ஆறாவது, ஏழாவதுது, ஒன்பதாவது மாதங்களில் பிறந்தால் உயிருடனிருப்பதும், எட்டாவது மாதத்தில் பிறக்கும் குழந்தைகள் மரணித்து விடுவதும் வழக்கமாக இருந்து வருகிறது.
ஆனால் ஹளரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் எட்டு மாதத்தில் பிறந்தார்கள். இப்பிறப்பும் ஒரு வகையில் அற்புதமாக இருந்தது.
இது போல நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் எட்டு மாதத்தில் பிறந்தார்கள். அல்லாமலும் ஒன்பது மாதங்கள் இருந்ததாகவும், ஆறு மாதங்கள் இருந்ததாகவும், பத்து மாதங்கள் இருந்ததாகவும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் குறித்து கூறப்பட்டிருக்கிறது.
மேலும், எட்டாவது மாதத்தில்தான் கர்ப்பத்தில் இருக்கும் சிசுவுக்குக் குளிர்ச்சி அல்லது வறட்சி அதிகமாக ஏற்படுகிறது. இவ்விரண்டில் எது மிகைத்தாலும் மரணம் வந்துவிடும்.
ஆதலால், எட்டாவது மாதத்தில் பிறக்கும் குழந்தை பிழைப்பதில்லை. ஒன்றிரண்டு தப்பிப் பிழைத்தாலும் நோயாளியாகவே இருக்கும் என்பதாக அஷ்ஷெய்கு முஹிய்யித் தீனிப்னுல் அரபிய்யி குத்திஸ ஸிர்ருஹு அவர்கள் கூறி இருக்கிறார்கள்.
கர்ப்பத்தில் ஒரே சூலில் ஒரு குழந்தை அல்லது ஒன்றுக்கு மேல் அதிகமான குழந்தைகள் பிறப்பதை இவ்வசனம் அறிவிப்பதாகவும் கூறப்படுகிறது.

திருமதீனாவிலுள்ள மார்க்கச் சட்ட நிபுணர்களில் ஒருவரான இமாம் ஷுஐறைக் ரஹ்மத்துல்லாஹி அலைஹி என்ற தாபிஈ தன் தாயின் ஒரே சூலில் நான்காவது புதல்வராகப் பிறந்தார்கள் என்று ரிவாயத்து செய்யப்பட்டிருக்கிறது.
"தமது மனைவி ஒரே சூலில் ஐந்து குழந்தைகளைப் பிரசவித்தாள்" என்று யமன் தேசத்தைச் சேர்ந்த ஒரு ஷெய்கு, தமக்கு அறிவித்ததாக இமாம் ஷாஃபிஈ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறியிருக்கிறார்கள்.
பெண்களது மாதவிடாயை இவ்வசனம் குறிப்பிடுவதாகவும் சிலர் கூறியிருக்கிறார்கள். மாதவிடாய் குறைவாகவும் வரக்கூடும் அதிகமாகவும் வரக்கூடும்.
தவிர, கர்ப்ப காலத்தில் மாதவிடாய் நின்று விடுவதையும், கர்ப்பமுள்ளவளுக்கு மாதவிடாய் வருவதையும் இது குறிப்பிடுவதாகவும் கூறப்படுகிறது.
கர்ப்பமுள்ளவளுக்கு மாதவிடாய் வந்தால் சிசுவில் குறைவேற்படும். மாதவிடாய்தான் சிசுவுக்கு உணவு. அவ்வுதிரம் வெளியேறி விட்டால் சிசுவுக்கு உணவு குறையும். அப்பொழுது அதன் வளர்ச்சியும் குன்றும். மாதவிடாய் பரிபூரணமாக நின்று விட்டால் குழந்தையின் வளர்ச்சியும் அதிகமாகும்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 52**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 16 )**




( கருவைக் காக்கும் கருணையாளன் )
اَللّٰهُ يَعْلَمُ مَا تَحْمِلُ كُلُّ اُنْثٰى وَمَا تَغِيْضُ الْاَرْحَامُ وَمَا تَزْدَادُ ۚ وَكُلُّ شَىْءٍ عِنْدَهٗ بِمِقْدَارٍ
ஒவ்வொரு பெண்ணும் (கர்ப்பத்தில்) சுமந்து கொண்டிருப்பதையும், கர்ப்பப்பைகள் சுருங்கி குறைவதையும், அவை விரிந்து அதிகரிப்பதையும் அல்லாஹ் நன்கறிவான்; ஒவ்வொரு பொருளுக்கும் அவனிடம் அளவு இருக்கின்றது. (குர்ஆன் : 13:8)
பெண்ணின உயிரினங்கள் ஒவ்வொன்றும் (கருப்பையில்) எதைச் சுமக்கின்றன என்பதை அல்லாஹ் நன்கறிவான்.கர்ப்பப்பைகளில் உள்ளதை அவன் அறிவான் ( குர்ஆன் 31: 34 )
ஒரு பெண் தன் வயிற்றில் சுமப்பது ஆணா, பெண்ணா? அழகானதா அழகற்றதா? நற்பேறு பெற்றதா ? நற் பேறு அற்றதா? ஆயுள் நீண்டதா ?
ஆயுள் குறைந்ததா என்பதையெல்லாம் இறைவன் துல்லியமாக அறிவான்.
அவன் உங்களைப் பூமியிலுள்ள மண்ணி)லிருந்து முதன் முதலாகப் படைத்தபோதும். உங்கள் அன்னையரின் வயிறுகளில் நீங்கள் சிசுக்களாக இருந்தபோதும் அவன் உங்களை நன்கு அறிவான். (53:32)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
"உங்களில் ஒருவர் தம் தாயின் வயிற்றில் நாற்பது நாட்கள் (கருவாக) 'சேமிக்கப்படுகிறார். பிறகு அதைப் போன்றே (நாற்பது நாட்கள்) அந்தக் கரு (அட்டை போன்று கருப்பையின் சுவரைப் பற்றிப் பிடித்துத் தொங்கும்) ஒரு கட்டியாக மாறுகிறது. பிறகு வயிற்றில் அதைப் போன்றே (மேலும்) நாற்பது நாட்கள் மெல்லப்பட்ட சக்கைப் போன்ற) ஒரு சதைப் பிண்டமாக மாறிவிடுகிறது.
பிறகு அதனிடம் ஒரு வானவர் அனுப்பப்படுகிறார். (அவர் அதில் உயிரை ஊதுகிறார். அதற்கு (முன்பே) அந்த மனிதனின் வாழ்வாதாரம், வாழ்நாள், செயல்பாடு, அவன் நற்பேறற்றவனா அல்லது நற்பேறு பெற்றவனா ஆகிய நான்கு விஷயங்களை எழுதுமாறு அவர் பணிக்கப்படுகிறார்.
இதையே சற்று விரிவான விஞ்ஞான விளக்கத்தில் ...
பீரியட்ஸ் ஆனதிலிருந்து சுமாராகப் பதினாலாவது நாள் அல்லது பதினைந்தாவது நாள்தான அந்த சுபமுகூர்த்த நாள்! அதாவது, ஒரு பெண்ணின் சினைப் பைகளில் ஏதாவது ஒன்றிலிருந்து ஓவம் வெடித்துக் கொண்டு வெளிவரும் நாள்!
மாதத்துக்கு ஒரு தரம் வெளிவரும் ஒரு சினை முட்டைக்கு ரொம்ப குறுகிய ஆயுட்காலமதான்! அது வெடித்து வெளிவந்த பின் ஒரே ஒரு முழுநாள்தான் உயிரோடு இருக்கும். அதற்குள் உடலுறவு நடந்தால்தான் பெண்ணின் வஜினாவில் சேரும் உயிரணு போய் ஓவத்துடன் சேர்ந்து கருவாக முடியும்!

சினைமுட்டை வெடிக்கும் அந்த நாளை பெண்ணின் உள்ளுணர்வால் கண்டுபிடிக்கமுடியும் என்றுகூடச் சொல்கிறார்கள். உடம்பெல்லாம். லேசான சிலிர்ப்போடியபடி செக்ஸ் உணர்ச்சி அன்று சற்றே அதிகமானாற் போலிருக்கும் என்று சொல்லப்படுவதுண்டு'
ஒரு ஆணும் பெண்ணும் சேரும் செக்ஸ்தான் கருவுறுதலின் முதல் ஸ்டெப். அதற்கப்புறம் என்ன நடக்கிறது என்று பார்ப்போம்! இருவரும் சேர்ந்து கலந்தபின் பெண்ணின் வஜினாவை அடையும் ஆணின் கோடிக்கணக்கான உயிரணுக்கள் எப்படியும் சினை முட்டையை அடைத்தே தீருவது என்று வீராவேசத்தோடு அணிவகுத்துப் புறப்படுகின்றன.
வழுவழுப்பான விந்து திரவத்தின் உதவியால் அவை வாலை ஆட்டியாட்டி நீந்தியபடி கர்ப்பப்பையை நோக்கிச் செல்கின்றன. வஜினாவிலிருந்து கருப்பையின் தூரம் 15லிருந்து 25 செ.மீட்டர் இருக்கும். கோடிக்கணக்கான உயிரணுக்களில் பல லடசம் இந்த இருபத்தைந்து செ.மீட்டர் தூரத்தைக் கடக்கும் முன்னமே களைப்புற்று விழுந்துவிடுகின்றன.
மிச்சமிருக்கும் 'உயிரணுப் படை' மணந்தால் மகாதேவி. இல்லையேல் மரண தேவி என்று சபதம் இட்டதுபோல சினை முட்டை இருக்கும் இடம் நோக்கி எட்டு நிமிடங்களில் ஓர் அங்குல தூரம் என்ற லெவலில் போய்க்கொண்டிருக்கும்.

சினைமுட்டை' என்பது ஒரு செ.மீட்டரில் 164 -ல் ஒரு பங்கு அளவில் லட்டு ஷேப்பில் இருக்கும். மொழு மொழுவென்று Zona pellucida என்ற ஜெல்லி பூசிய அந்த வட்டுவை ஏகப்பட்ட வீரர்கள், 'நான் நீ ' என்று முட்டி மோதித் தாக்கினாலும் அந்த அதிர்ஷ்ட வாய்ப்பு ஏதாவதொரு உயிரணுவுக்குதான் கிடைக்கும்.
ஜெல்லியைத் துளைத்து உட்புகும் அந்த மாவீரன். அடுத்துள்ள சவ்வுப் பகுதியையும் சுலபமாக துளைப்பதற்கென்றே தலைப்பிரட்டை சைஸிலிருக்கும் உயிரணுவின் தலைப்பகுதியிலிருந்து 'அக்ரோசின்' என்ற என்ஸைம் சுரக்கிறது.
சினைமுட்டையை மாவீரன் துளைத்த மறுகணமே, முட்டி மோதும் மற்ற உயிரணுக்கள் உள்ளே நுழைய முடியாமல் சினை மூட்டையின் சவ்வுப் இறுகிப்போய் தாழ் போட்டுக்கொள்வது இயற்கையின் மற்றோர் அதிசயம்.
நம் 'மாவீரன் உயிரணுவின் வால் பகுதி சினைமுட்டையின் சவ்வுக்கு
வெளியிலேயே நின்றுவிட நீள்வட்ட வடிவ தலை (உயிரணுவின் உட்கரு) மட்டுமே உள்ளே போகிறது.
உள்ளே... தடைபல கடந்து மூச்சுவாங்கியபடி நுழையும் தம் மாவீரனும், மதில்களை உடைத்துக்கொண்டு வரும் வீரனின் கழுத்தில் மாலையிடுவதற்காக சினை முட்டையில் நடுநாயகமாக காத்திருக்கும் அதன் உட்கருவான இளவரசியும் ஆவேசமாக அணைத்துக்கொள்ள....
அந்த உயிரணு கருவாகி, சிசுவாகி குழந்தையாகிறது.
மருத்துவ விழிப்பு உணர்வு வளர்ந்துவிட்ட இந்தக் காலத்தில்கூட ஆண் குழந்தை பெற்றுத் தரவில்லை' என்று பல கணவன்மார்கள் தங்கள். மனைவியை இம்சிப்பதும், இன்னொரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதும் நடந்து கொண்டுதான் இருக்கிறது.
உண்மையில், ஒரு குழந்தை ஆணா, பெண்ணா என்ற விஷயத்தை தீர்மானிப்பதே கணவன்தான்!
உயிரணுவும், சினை முட்டையும் சேரும் அந்த நிமிடங்களிலேயே அதன் ஆண், பெண் தன்மை தீர்மானிக்கப்பட்டு விடுகிறது!

சாதாரணமாக மனித உடம்பின் ஒரு செல்லில் இருபத்து மூணு ஜோடி (நாற்பத்தாறு) குரோமோசோம்கள் இருக்கும். ஆனால் உயிரணுவிலும், சினை முட்டையிலும் மட்டும் தலா இருபத்துமூன்று குரோமோசோம்கள்தான்.
செக்ஸில் இணைந்த அந்த இருவரின் ஊத அல்லது கறுப்பு கண்கள், தோலின் நிறம், சுருட்டை முடி,உயரம் என்று பல குறிப்புகள் அவரவர்களுடைய குரோமோசோம்களின் ஜீன்களுக்கு ஒளிந்து கொண்டிருக்கின்றன. இவற்றில் அந்த இருபத்துமூன்றாவது குரோமோசோம் மட்டும் அந்த கரு ஆணா, பெண்ணா என் தீர்மானிக்கும் செக்ஸ் குரோமோசோம்!
இதில் பெண்களுக்கு எப்போதுமே 'X' குரோமோசோம்களாகத்தான் இருக்கும். இது மாறாது . ஆணிடமிருந்து வெளியேறும் கோடிக்கணக்கான உயிரணுக்களில் பாதி 'X' குரோமோசோம்களாகவும் மீதி ' Y 'குரோமோசோம்களாவும் இருக்கும். அன்று எந்த குரோமோசோம்கள் உடைய 'மாவீரன்' உயிரணு, சினைமுட்டையைச் சேர முடிந்ததோ அதுதான் அந்த கரு ஆணா, பெண்ணா என்பதைத் தீர்மானிக்கிறது
'X ' குரோமோசோம் - உயிரணு எனில் பெண்ணின் 'X' உடன் சேர்ந்து XX ஆகி பெண் குழந்தை உருவாகும்.
'Y' குரோமோசோம் எனில் ' XY'ஆகி ஆண் குழந்தை உருவாகும்.
ஆக, ஆணோ, பெண்ணோ கணவனே முழுப் பொறுப்பு !
அவன் விரும்பியவர்களுக்குப் பெண் சந்ததியை மட்டும் கொடுக்கின்றான். அவன் விரும்பியவர்களுக்கு ஆண் சந்ததியை மட்டும் கொடுக்கின்றான். அல்லது அவர்களுக்கு அவன் ஆண்மக்களையும், பெண் மக்களையும் சேர்த்துக் கொடுக்கின்றான்; அன்றியும் தான் விரும்பியோரை மலடாகவும் செய்கிறான் - நிச்சயமாக, அவன் மிக அறிந்தவன்; பேராற்றலுடையவன். (குர்ஆன் : 42:49, 50)

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 53
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 17 )




عٰلِمُ الْغَيْبِ وَالشَّهَادَةِ الْكَبِيْرُ الْمُتَعَالِ
(எல்லாவற்றின்) இரகசியத்தையும், பரகசியத்தையும் அவன் நன்கறிந்தவன்; அவன் மிகவும் பெரியவன்; மிகவும் உயர்ந்தவன். ( குர்ஆன் 13:9)
سَوَآءٌ مِّنْكُمْ مَّنْ اَسَرَّ الْقَوْلَ وَ مَنْ جَهَرَ بِهٖ وَمَنْ هُوَ مُسْتَخْفٍ بِالَّيْلِ وَسَارِبٌ بِالنَّهَارِ
எனவே, உங்களில் எவரும் தம் பேச்சை இரகசியமாக வைத்துக் கொண்டாலும், அல்லது, அதை வெளிப்படையாகக் கூறினாலும், (அவனுக்கு) சமமேயாகும்; இரவில் மறைந்திருப்பவனும், பகலில் பகிரங்கமாக நடப்பவனும் (எல்லோரும் அவனுக்குச் சமமே). (குர்ஆன் : 13:10)
நாம் வாழும் உலகத்தைப் பற்றிய மறைவான உண்மைகளை விளக்குவதே விஞ்ஞானத்தின் குறிக்கோளாகும் .
" விளக்கம் " என்ற சொல் உண்மைப் பொருளைக் கண்டறிய முன்னேறும் ஒவ்வொரு படியிலும் சுருங்கிக் கொண்டே வருகிறது. அதாவது , உண்மையை அதிகமாக அறிய, அறிய அதை விளக்கிச் சொல்வது கடினமாகிக் கொண்டே போகிறது .
மின்சாரம் , காந்தம் , ஈர்ப்பு சக்தி போன்ற பதங்களை விஞ்ஞானம் உண்மையில் விளக்க முடியாது .
அந்த இயற்கைச் சக்திகளை முன்கூட்டியறியவோ , அச்சக்திகளின் இயக்கங்களை அளந்து சொல்லவோதான் விஞ்ஞான அறிவு பயன்படுகிறதே தவிர , அச்சக்திகளின் ஆரம்பம் என்ன என்பதைப் பற்றியோ , அவற்றின் கடைசி நிலை என்ன என்பதைப் பற்றியோ விஞ்ஞான அறிவால் ஒன்றும் கூறமுடியவில்லை .
தற்கால விஞ்ஞான ஆய்வாளர்களின் பெரும்பாலோர் அந்த மாயாஜால இயற்கைச் சக்திகள் ' உண்மையில் அவைகள் என்ன ? ' என்பதைக் கண்டு பிடிக்கவே முடியாது என்று அவ்வாராய்ச்சி எண்ணத்தையே ஒதுக்கி தள்ளிவிட்டார்கள்.
பெர்ட்ரண்டு ரஸ்ஸல் என்னும் அறிஞர், மின்சாரம் என்றால் என்ன என்பதற்கு , "மின்சாரம் என்பது ஸெயிண்ட் பால்ஸ் கதீட்ரல் மாதா கோயிலைப் போல் ஒரு பொருள் அன்று .
மின்சாரத்தில் பொருள்கள் இவ்வாறு இயங்கும். பொருள்களில் மின்சக்தியைச் செலுத்தினால் அவை இம்மாதிரியான மாறுதலையடையும் , இந்த இந்த சந்தர்ப்பங்களில் பொருள்களில் மின்சக்தியைப் பாயவிட முடியும்,என்பது போன்ற விஷயங்களை நாம் பிறருக்குச் சொல்லத்தான் முடியுமே தவிர , 'மின்சாரம் ' என்பது என்ன என்பதைத் திட்டவட்டமாகக் கடைசிவரை சொல்லவே முடியாது ".
இவ்வாறு, விஞ்ஞான அறிவு " எப்படி ? " என்ற கேள்விக்கே பதில் கொடுத்தது ; ஆனால் " ஏன் ? " என்ற கேள்விக்கு அது பதில் கொடுக்க முடியவில்லை.
அரிஸ்டாடில் என்ற கிரேக்க தத்துவஞானி , இயற்கைச் சக்திகளால் ஏற்படும் பிரச்சனைகளில் " எப்படி " என்ற கேள்விக்கு மாத்திரம் பதில் கொடுக்க முற்பட்டார் . ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் துவங்கிய அவருடைய முயற்சியின் லட்சியம் இயற்கைப் பிரச்னைகளின் "ஏன்" என்ற கேள்விக்குப் இன்னும் பதில் யாராலும் கொடுக்க முடியவில்லை .
விஞ்ஞானம் என்பது முழுமையான ஞானம் அல்ல... அது ஒரு விதமான சிந்திக்கும் முறை. மேகங்களைப் பற்றி, துபாய் செயற்கை மழை பொழிவதைப் பற்றி, குழந்தைப் பிறப்பதைப் பற்றி , நேற்று சாப்பிட்ட சோறு , இன்று எப்படித் தண்ணீர் குழாய் பைப் அடிக்கத் தெம்பாக மாறுகிறது என்பது பற்றியெல்லாம் சிந்திக்க வைத்து, பரிசோதனைகள் மூலம் பதில் கண்டுபிடிப்பதுதான் அதன் குறிக்கோள்.

விஞ்ஞானம் சில ' ஏன் 'களுக்கு பதில் சொன்னாலும், பல 'ஏன்'களுக்கு அதனிடம் பதில் இல்லை.
உதாரணமாக..
சூரியன் ஏன் வட்ட வடிவில் இருக்கிறது ஏன் முக்கோண வடிவத்தில் இருக்கக் கூடாது ? பதில் சொல்ல முடியாது .தெரியாது.
'எப்படி' என்று கண்டுபிடிப்பதில்தான் விஞ்ஞானத்துக்கு ஆதாரமான பூரிப்பு ஏற்படுகிறது !

ஆனால் மேற்கூறப்பட்ட அத்தனை விஷயங்களுக்கும் இறைவனிடம் பதிலும் ஞானமும் இருக்கிறது.
அவனிடமே மறைவானவற்றின் திறவு கோல்கள் இருக்கின்றன. அவற்றை அவனன்றி எவரும் அறியார் குர்ஆன் (6:59)
மறைவு ஞானம் என்பது மனிதனின் கண் பார்வை, அறிவு சிந்தனை ஆய்வு போன்றவற்றுக்கு அப்பாற்பட்ட அனைத்து விஷயங்களுமாகும். அவற்றை அறிந்தவன் அல்லாஹ்வே.
உ-ம்: இறந்த கால நிகழ் கால அறிவு மனிதனுக்கு இருக்கலாம். ஆனால் எதிர் காலத்தோடு சார்ந்த அனைத்து நிகழ்வுகளும் மறைவானதே. எங்கள் எதிரே இருக்கும் ஒரு வினாடியாக இருந்தாலும் சரியே.
உ-ம்: கடலுக்குள் என்ன நடக்கின்றது என்பதனை ஒருவன் ஆய்வு செய்து கூறலாமே தவிர ஆய்வின்றி சுயமாக கூற முடியாது
அவனிடமே மறைவானவற்றின் திறவு கோல்கள் இருக்கின்றன. அவற்றை அவனன்றி எவரும் அறியார். மேலும் கரையிலும் கடலிலும் உள்ளவற்றையெல்லாம் அவன் அறிவான்; அவன் அறியாமல் ஓர் இலையும் உதிர்வதில்லை. பூமியின் (ஆழத்தில் அடர்ந்த) இருள்களில் கிடக்கும் சிறு வித்தும், பசுமையானதும், உலர்ந்ததும் (எந்தப் பொருளும்) தெளிவான (அவனுடைய) பதிவேட்டில் இல்லாமலில்லை. (குர்ஆன் : 6:59)
ஜின்களும் மறைவானவற்றை அறிந்து கொள்ள முடியாது.
" அவர் (ஸுலைமான்) மீது நாம் மரணத்தை விதித்த போது அவர் இறந்து விட்டார் என்பதை, அவர் (சாய்ந்திருந்த) தடியை அரித்து விட்ட நிலத்தின் பூச்சி (கரையானைத்) தவிர வேறெதுவும் அந்த ஜின்களுக்கு அறிவிக்கவில்லை.
அவர் கீழே விழவே; "தாங்கள் மறைவான விஷயங்களை அறிந்திருக்கக் கூடுமானால் (கடின உழைப்பாகிய) இழிவுதரும் வேதனையில் தாங்கள் தரிபட்டிருந்திர க்க வேண்டியதில்லை" என்று ஜின்களுக்கு தெளிவாக தெரிந்தது. (அல்குர்ஆன் 34:14)
"(முன்னர் வானில் பேசப்படுவதைச்) செவிமடுப்பதற்காக (அதற்குள்ள சில) இடங்களில் நாங்கள் அமர்ந்திருப்போம்; ஆனால் இப்பொழுதோ எவன் அவ்வாறு செவிமடுக்க முயல்கிறானோ, அவன் தனக்காகக் காத்திருக்கும் தீப்பந்தத்தையே காண்பான். 10. "அன்றியும், பூமியிலிருப்பவர்களுக்குத் தீங்கு நாடப்பட்டிருக்கிறதா, அல்லது அவர்களுடைய இறைவன் அவர்களுக்கு நன்மையை நாடி இருக்கிறானா என்பதையும் நாங்கள் நிச்சயமாக அறிய மாட்டோம். (குர்ஆன் 72:9,10)
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன் தோழர்களில் சிலருடன் உகால் சந்தையை நோக்கி நடந்தார்கள்.

(அந்த நேரம்) ஷைத்தான்களுக்கும் வானத்தின் செய்திக்கும் இடையில் தடை போடப்பட்டு, அவர்கள் மீது நெறுப்புக் கங்குகளும் எறியப்பட்டு, தன் கூட்டத்தாரிடம் அந்த ஷைத்தான்கள் திரும்பிவந்தன. அப்போது உங்களுக்கு என்ன நேர்ந்தது என அவர்கள் கேட்க, எங்களுக்கும் வானத்தின் செய்திக்கும் இடையில் தடை போடப்பட்டு, எங்கள் மீது நெறுப்புக் கங்குகளும் எறியப்பட்டன. என்று கூறினர்.
(அதற்கவர்கள்) உங்களுக்கும் வானச் செய்திகளுக்குமிடையில் ஏதோ ஒன்று நடந்திருப்பதின் காரணமாகவே தடை போடப்பட்டிருக்கின்றது. எனவே பூமியின் கிழக்கு மேற்கு திசைகளுக்குச் சென்று காரணத்தை தேடுங்கள். என்று கூற,
திஹாமா பகுதியை நோக்கி புறப்பட்டவர்களே, நபிகளார் உகால் சந்தையை நோக்கி போகும் போது நக்லா என்ற இடத்தில் நபியவர்கள் தம் தோழர்களுடன் சுபஹ் தொழும் போது சந்தித்தவர்கள், அவர்கள் குர்ஆன் (ஓசையை) கேட்டபோது, அதற்கு செவிதாழ்த்தினார்கள்.
அப்போது அல்லாஹ்வின் மீது சத்தியமாக இதுவே உங்களுக்கும் வானச் செய்திக்கும் இடையில் தடைபோட்டது என்று கூறினர்.

அதுவே அவர்கள் தம் கூட்டத்தாரிடம் திரும்பிச் சென்று, எம் சமூகமே! நாம் ஆச்சர்யமான ஒரு குர்ஆனை (ஓதலைக்) கேட்டோம், அது நேர் வழியின் பக்கம் வழிகாட்டுகின்றத நாம் அதனை நம்பினோம் (ஈமான்கொண்டோம்). மேலும் எங்கள் நாயனுக்கு எதையும் இணையாக (ஷிர்க்) வைக்கமாட்டோம். என்று கூறிய நேரமாகும்.
அல்லாஹ் நபியவர்கள் மீது 'குல் ஊஹிய இலைய' -நபியே எனக்கு வஹி அறிவிக்கப்பட்டது என்று நீர் கூறும்- என்ற (72 வது அத்தியாயத்தின் ஆரம்ப சில வசனங்களை) வசனத்தை இறக்கினான். (இப்னு அப்பாஸ்(றழி) அவர்கள் கூறினார்கள்) நபியவர்களுக்கு ஜின்னின் சொல்லே வஹியாக அறிவிக்கப்பட்டது (புகாரி, முஸ்லிம்)
மலக்குமார்கள் சுயமாக மறைவானவற்றை அறியவில்லை.
(நபியே) இன்னும், உம் இறைவன் வானவர்களை நோக்கி "நிச்சயமாக நான் பூமியில் ஒரு பிரதிநிதியை அமைக்கப் போகிறேன்" என்று கூறியபோது, அவர்கள் "(இறைவா!) நீ அதில் குழப்பத்தை உண்டாக்கி, இரத்தம் சிந்துவோரையா அமைக்கப்போகிறாய ? இன்னும் நாங்களோ உன் புகழ் ஓதியவர்களாக உன்னைத் துதித்து, உன் பரிசுத்ததைப் போற்றியவர்களாக இருக்கின்றோம் என்று கூறினார்கள்;
அ(தற்கு இறை)வன் "நீங்கள் அறியாதவற்றையெல்லாம் நிச்சயமாக நான் அறிவேன்" எனக் கூறினான்.

இன்னும், (இறைவன்) எல்லாப் (பொருட்களின்) பெயர்களையும் ஆதமுக்கு கற்றுக் கொடுத்தான், பின் அவற்றை வானவர்கள் முன் எடுத்துக்காட்டி, "நீங்கள் (உங்கள் கூற்றில்) உண்மையாளர்களாயிருப்பின் இவற்றின் பெயர்களை எனக்கு விவரியுங்கள்" என்றான்.
அவர்கள் "(இறைவா!) நீயே தூயவன். நீ எங்களுக்குக் கற்றுக்கொடுத்தவரை தவிர எதைப்பற்றியும் எங்களுக்கு அறிவு இல்லை. நிச்சயமாக நீயே பேரறிவாளன்; விவேகமிக்கோன்" எனக் கூறினார்கள்.
"ஆதமே! அப் பொருட்களின் பெயர்களை அவர்களுக்கு விவரிப்பீராக!" என்று (இறைவன்) சொன்னான்; அவர் அப்பெயர்களை அவர்களுக்கு விவரித்தபோது "நிச்சயமாக நான் வானங்களிலும், பூமியிலும்

மறைந்திருப்பவற்றை அறிவேன் என்றும், நீங்கள் வெளிப்படுத்துவதையும், நீங்கள் மறைத்துக் கொண்டிருப்பதையும் நான் அறிவேன் என்றும் உங்களிடம் நான் சொல்லவில்லையா?" என்று (இறைவன்) கூறினான். (குர்ஆன் 2:30-33)
தன் தூதர்களில் தான் நாடியவர்களுக்கு மறைவானவற்றை அறிவித்து வைப்பவனாக உள்ளான்.
தீயவர்களை நல்லவர்களைவிட்ட ம் பிரித்தறிவிக்கும் வரையில் முஃமின்களை நீங்கள் இருக்கும் நிலையில் அல்லாஹ் விட்டு வைக்க வில்லை; இன்னும், அல்லாஹ் உங்களுக்கு மறைவானவற்றை அறிவித்து வைப்பவனாகவும் இல்லை; ஏனெனில் (இவ்வாறு அறிவிப்பதற்கு) அல்லாஹ் தான் நாடியவரைத் தன் தூதர்களிலிருந்த தேர்ந்தெடுக்கிறான். ஆகவே அல்லாஹ்வின் மீதும், அவன் தூதர்கள் மீதும் ஈமான் கொள்ளுங்கள்; நீங்கள் நம்பிக்கை கொண்டு பயபக்தியுடன் நடப்பீர்களாயின் உங்களுக்கு மகத்தான நற்கூலியுண்டு. (அல்குர்ஆன் 3:179)

" தீயவர்களை நல்லவர்களைவிட்டும் பிரித்தறிவிக்கும் வரையில் முஃமின்களை நீங்கள் இருக்கும் நிலையில் அல்லாஹ் விட்டு வைக்க (நாட)வில்லை; இன்னும், அல்லாஹ் உங்களுக்கு மறைவானவற்றை அறிவித்து வைப்பவனாகவும் இல்லை; ஏனெனில் (இவ்வாறு அறிவிப்பதற்கு) அல்லாஹ் தான் நாடியவரைத் தன் தூதர்களிலிருந்து தேர்ந்தெடுக்கிறான்.
ஆகவே அல்லாஹ்வின் மீதும், அவன் தூதர்கள் மீதும் ஈமான் கொள்ளுங்கள்; நீங்கள் நம்பிக்கை கொண்டு பயபக்தியுடன் நடப்பீர்களாயின் உங்களுக்கு மகத்தான நற்கூலியுண்டு. (குர்ஆன் : 3:179)

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 54**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 18 )**



"13:11 لَهٗ مُعَقِّبٰتٌ مِّنْۢ بَيْنِ يَدَيْهِ وَمِنْ خَلْفِهٖ يَحْفَظُوْنَهٗ مِنْ اَمْرِ اللّٰهِ‌ؕ اِنَّ اللّٰهَ لَا يُغَيِّرُ مَا بِقَوْمٍ حَتّٰى يُغَيِّرُوْا مَا بِاَنْفُسِهِمْ‌ؕ وَاِذَاۤ اَرَادَ اللّٰهُ بِقَوْمٍ سُوْۤءًا فَلَا مَرَدَّ لَهٗ‌ۚ وَمَا لَهُمْ مِّنْ دُوْنِهٖ مِنْ وَّالٍ
. மனிதனுக்கு முன்னாலும், பின்னாலும் தொடர்ந்து வரக்கூடிய (மலக்குகள்) இருக்கிறார்கள். அல்லாஹ்வின் கட்டளையால் அவர்கள் அவனைப் பாதுகாக்கிறார்கள்;
எந்த ஒரு சமூதாயத்தவரும், தம் நிலையயைத் தாமே மாற்றிக் கொள்ளாத வரையில், அல்லாஹ் அவர்களை நிச்சயமாக மாற்றுவதில்லை; இன்னும் அல்லாஹ் ஒரு சமுதாயத்தாருக்குத் தீவினையை நாடினால், அதைத்தடுப்பவர் எவருமில்லை - அவர்களுக்கு அவனைத்தவிர துணை செய்வோர் எவரும் இல்லை." ( குர்ஆன் 13:11 )
"அடியானது தூக்கத்திலும் விழிப்பிலும், ஜீன்களையும்,மனிதர்களையும் விஷ ஐந்துக்களையும் விட்டுக் காப்பதற்காக மலக்குகள் ஏற்படுத்தப்படாமல் எந்த அடியானும் இல்லை" என்பதாக முஜாஹிது ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறியிருக்கிறார்கள்
மனிதனுக்கு நியமிக்கப்பட்டுள்ள மலக்குகள் எத்தனை என்பதில் அறிஞர்களுக்கிடையில் கருத்து வேறுபாடு இருந்து வருகிறது.

ஒரு மனிதனுக்கு இருபது மலக்குகள் விகிதம் நியமிக்கப் பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது.
இதற்கதிகமாகவும் நியமிக்கப் பட்டிருப்பதாகவும் கூறப்படுகிறது. ஆயினும், இருபது மலக்குகள் நியமிக்கப்பட்டிருப்பதாகவுள்ள கருத்துதான் மிகவும் சரியானது.
இதற்கு ஆதாரமாக ஹளரத் உதுமான் ரலியல்லா தஆலா அன்ஹு அவர்களுடைய கேள்விக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அளித்த விடை
ஹளரத் உதுமான் (ரலி) அவர்கள் மலக்குகளது எண்ணிக்கையைக் குறித்து நபி (ஸல்) வஸல்லம் அவர்களை வினவியதற்கு "இருபது பேர்" என பதிலளித்தார்கள்.
உமது வலது புறத்தில் இருக்கிற மலக்கு இடது புறத்திலிருக்கிற மலக்குக்கு மேலதிகாரி.
உனக்கு முன்னாலும். பின்னாலும் இரண்டு பேர்.
மனிதனது நெற்றி ரோமத்தில் ஒருவர். அல்லாஹு தஆலாவுக்காக மனிதன் பணிந்தால் அவனை அவர் உயர்த்துகிறார். அவன் மீறினால் அவனைத் தாழ்த்துகிறார்.
உமது இரு உதடுகளிலும் இரண்டு பேர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது நீ ஓதும் ஸலவாத்தை இவர்கள் பாதுகாக்கிறார்கள்.

உமது வாயில் பாம்பு புகாமல் பாதுகாப்பதற்காக ஒருவர். உமது கண்களை பாதுகாக்க இருவர் ஆக பத்து பேர் ஒவ்வொரு மனிதனுக்கும் இருக்கின்றனர்.
பகலுக்குரிய பத்து பேர் போனவுடன் இரவுக்குரிய பத்து பேர் வருவர். இதனால் மொத்தம் இருபது பேர்களாகின்றனர்.

இப்லீஸ் பகலிலும், அவனது சந்ததியினர் இரவிலும் மனிதனை வழிகெடுக்க முயல்கின்றனர்.
அடியார்களது அமல்களைப் பகலில் எடுத்துச் செல்கிற அதே மலக்குகள்தான் மீண்டும் மறுநாள் பகலில் வருவார்களா? அல்லது வேறு மலக்குகளா?
அதே மலக்குகள் தான் மீண்டும் வருகிறார்கள் என்பதாகச் சில இமாம்கள் கூறியிருக் கிறார்கள். மூமின்களது வழிபாடுகளும் தர்மங்களும் மரணத் தருவாயிலும் கப்ரிலும், கியாமத்திலும் அல்லாஹுு தஆலாவின் வேதனையை விட்டுப் பாதுகாக்கின்றன என்று கூறப்படுகிறது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
நீங்கள் நிர்வாணமாக இருப்பதைத் தவிர்த்துக்கொள்ளுங்கள்! காலைக் கடனை நிறைவேற்றும் நேரத்திலும், தாம்பத்திய உறவு கொள்ளும் நேரத்திலும் தவிர மற்ற எல்லா நேரங்களிலும் உங்களைவிட்டுப் பிரியாத (வானவர்கள்) சிலர் உங்களுடன் இருக்கிறார்கள். அவர்களுக்காக வெட்கப்படுங்கள்; அவர்களைக் கண்ணியப்படுத்துங்கள்.
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
மனிதனைப் பாதுகாக்கும் வானவர்கள், அவனுக்கு முன்னாலும் பின்னாலும் இருக்கின்றனர். ஆனால், இறைவனின் விதி(யின்படி தீங்கு ஏதும்) வந்து விட்டால், அவனைவிட்டு அவர்கள் விலகிவிடுவார்கள்.

முஜாஹித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது: "ஒவ்வோர் அடியானுக்கும் ஒரு வானவர் நியமிக்கப்படுகிறார். தூக்கத்தி லும் விழிப்பிலும் மனிதன், ஜின், விஷ சில் சில ஐந்துக்கள் ஆகியவற்றிடமிருந்து அவனை அவர் பாதுகாக்கிறார்.
இவற்றில் ஒன்று தீங்கிழைப்பதற்காக அவனை நெருங்கினால் அந்த வானவர், நெருங்காதே!" என்று கூறி (தடுத்து) விடுவார்.
ஆனால், அவனுக்குத் தீங்கிழைக்க இவற்றில் ஏதேனும் ஒன்றுக்கு அல்லாஹ் அனுமதியளித்திருந்தால், அப்போது அவனுக்குத் தீங்கு ஏற்படும்.
கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறினார்கள் "அல்லாஹ்வின் கட்டளையின் பேரில் (பி அம்ரில்லாஹ்) அவனைப் பாதுகாக்கின்றனர்" என்று விளக்கமளித்தார்கள்.
கஅபுல் அஹ்பார் (ரஹ்) அவர்கள் கூறியதாவது: ஆதமுடைய மகனுக்கு (மனிதனுக்கு) ஏற்படும் ஒவ்வொரு மகிழ்ச்சியும், துக்கமும் (காரணத்துடன்) தெளிவாகத் தெரிந்தால், அவை ஒவ்வொன்றிலும் அவனைப் பாதுகாக்கும் ஓரம்சம் இருப்பதை அவன் தெளிவாக காணலாம்.
ஒவ்வொரு மகிழ்ச்சியும், துக்கமும் பற்றி உளவியல் ரீதியாக நீங்கள் சிந்தித்தால் நீங்கள் பாதுக்காக்கப்பட்ட விஷயம் மிகத் தெரியவரும்.

உங்கள் உணவு, பானம். இரகசிய உறுப்புகள் ஆகியவற்றின் விஷயத்தில் உங்களைப் பாதுகாக்கும் வானவர்களை அல்லாஹ் நியமிக்காதிருந்தால். நீங்கள் எப்போதோ அழிக்கப்பட்டிருப்பீர்கள்.
அடுத்த தொடர். "எந்த சமூகத்தாரும் தங்களிடம் உள்ளதை (அதாவது நல்ல போக்கை) மாற்றிக் கொள்ளாத வரை அல்லாஹ்வும் அவர்களிடம் உள்ளதை (அதாவது அருட்கொடைகளை) மாற்றுவதில்லை" என்று கூறுகின்றது.

இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள் கூறியதாவது: இஸ்ரவேலர்களுக்கு அனுப்பப்பட்ட நபிமார்களில் ஒருவருக்கு இவ்வாறு தம் சமுதாயத்தாரிடம் கூறுமாறு அல்லாஹ் அறிவித்தான்:
அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்து நடந்துவரும் எந்த ஊராரும் எந்த வீட்டாரும் அந்நிலையிலிருந்து மாறி அல்லாஹ்வுக்கு மாறு செய்தால்,அவர்களுக்கு இருந்து வந்த விரும்பத் தக்க சூழ்நிலையை விரும்பத் தகாத சூழ்நிலையாக அல்லாஹ்வும் மாற்றி விடுவான்.
அதாவது மனிதர்களுக்கு பாதுகாப்பு வழங்கியது போலவும், பாதுகாப்பை நீக்கியது போலவும் .

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 55**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 19 )**




هُوَ الَّذِىْ يُرِيْكُمُ الْبَرْقَ خَوْفًا وَّطَمَعًا وَّيُنْشِئُ السَّحَابَ الثِّقَالَ
அவன் எத்தகையவெனின், அச்சத்தையும் (அதே நேரத்தில் மழைக்குரிய) ஆதரவையும் தரக்கூடிய நிலையில் மின்னலை அவன்தான் உங்களுக்குக் காட்டுகிறான்; கனத்த மேகத்தையும் அவனே உண்டாக்குகிறான். (குர்ஆன் : 13:12)
இடி உண்டாக அறிவியல் பூர்வமான காரணங்கள் பலவாறாக உள்ளன. அவற்றுள் கி.மு. நான்காம் நூற்றாண்டில் கிரேக்க தத்துவமேதை அரிஸ்டாடில் முதல்முறையாக ஓர் கருதுகோளை முன்வைத்தார். மின்னல் புவியை தாக்கும் முன்னர் மேகத்திற்கும் புவிக்கும் இடையில் உள்ள காற்று நிரப்பப்பட்ட பகுதியில் சில வினாடிகள் பயணிக்கும் போது அதிக வெப்பநிலையில் உள்ள மின்னலின் கீற்று அதனை சுற்றி உள்ள காற்றின் மூலக்கூறுகளை வெப்பமாக்கும்.
இவ்வாறு வெப்பமான காற்று விரிவடையும் போது ஏற்படும் சத்தமே ‘இடி’ என்று அழைகப்படுகிறது.

இடி (Thunder) என்பது காற்றில் உள்ள மூலக்கூறுகளுடன் மேகங்கள் உராய்வதால் வானத்தில் மின்சாரம் உண்டாகிப் பூமியில் பாயும்போது மின்னல் உண்டாகிறது.
அமெரிக்காவைச் சேர்ந்த அறிவியலாளர் பெஞ்சமின் பிராங்களின் மின்னலில் மின்சாரம் இருப்பதாக கூறியதை பலரும் முதலில் நம்பவில்லை.
அதை நிரூபிக்க மழைபெய்யும் போது பட்டம் ஒன்றை செய்து அதனுடன் உலோக கம்பியை இணைந்து பரிசோதனை மேற் கொண்டார். அப்போது, மின்னல் அடிக்கும்போது உலோக கம்பி வழியே அதிர்வை உணர்ந்த அவர், மின்சாரம் இருக்கிறது என்பதை உறுதி செய்தார். இதனை இன்றும் வானியல் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகிறது.

வீட்டில் இருக்கும் மின்சாதனங்களை உடனடியாக ஆஃப் செய்துவிடுவது பாதுகாப்பானது. குறிப்பாக, மொபைல் போன் பயன்படுத்துவதை அப்போதாவது தவிர்க்க வேண்டும்.
இரும்பு உள்ளிட்ட பொருட்களை இடி இடிக்கும்போது எடுத்துச் செல்ல வேண்டாம். மழைக்காக பயன்படுத்தும் குடை கூட ஆபத்தானது. ஆய்வாளர்களின் கூற்றுப்படி, நம் கண்களுக்கு ஒரே ஒருமுறை மட்டும் மின்னல் தெரியலாம்.
ஆனால், அவை நொடிப்பொழுதில் தொடர்ச்சியாக 25 முறைவரை கூட மின்னும் என கூறுகின்றனர். இதனால் ஏற்படும் இடி மிகவும் பயங்கரமானதாக இருக்கும், கண்ணிமைக்கும் நேரத்தில் அவற்றின் செயல்பாடு முடியும் என எச்சரிக்கின்றனர்.

மேகத்திலிருந்து தரையில் இறங்கும் இந்த மின்னல் ஒரு பொதுவான நிகழ்வு ஆகும். இது பூமியின் மேற்பரப்பில் ஒவ்வொரு விநாடியிலும் சுமார் 100 ஸ்ட்ரைக் மின்னல்களை பாய்ச்சும். ஆனாலும் அவற்றின் சக்தி அசாதாரணமானது. இதனை மின்னல் போல்ட் எனப்படுகிறது
ஒவ்வொரு போல்ட்டிலும் ஒரு பில்லியன் வோல்ட் மின்சாரம் இருக்க முடியும். எதிர்மறை (நெகடிவ்) சார்ஜ்ர்ஸ் ஒரு புயல் மேகத்தின் அடிப்பகுதியில் இருந்து பூமியை நோக்கி ஒரு சேனலுடன் சுமார் 200,000 மைல் (300,000 கி.மீ) வேகத்தில் ஓடும்போது, பொதுவான ஒரு மேகத்திலிருந்து தரையில் மின்னல் தாக்கம் தொடங்குகிறது. இந்த பகுதிகள் ஒவ்வொன்றும் சுமார் 150 அடி (46 மீட்டர்) நீளம் கொண்டவை.

இடி, மின்னல் இரண்டும் ஒரே நேரத்தில் ஏற்பட்டாலும் மின்னல் முதலில் நம் கண்ணுக்கு தெரியும். சிறிது நேரம் கழித்து இடியொலி கேட்கும். ஒளியின் வேகம் ஒரு நொடிக்கு 300000 கிலோமீட்டர்; ஒலியின் வேகம் ஒரு நொடிக்கு 330 மீட்டர் மட்டும் என்பதே இதன் காரணம் ஆகும்

மழை தேவையுள்ளவர்களெல்லோரும் மழை பெய்யும் என்ற ஆசையுடன் அதனைப் பார்ப்பார்கள். மழை தேவையில்லாதவர்கள் மழை பெய்வதால் தங்கள் தொடர்புகளுக்கு இடைஞ்சல் ஏற்படுமே என்று அஞ்சுவார்கள். எனவே, மின்னொளி கண்ணுக்குத் தோன்றுவதிலேயே சிலருக்கு ஆனந்தமும், சிலருக்கு வருத்தமும் உண்டாகிறது.

கனத்த மேகத்தையும் அவனே உண்டாக்குகிறான். அவன் சிருஷ்டிக்கிறான் என்பது கருத்து மேகம் எவ்வாறு உண்டாகிறது என்பதைக் குறித்து விஞ்ஞானிகள் பலவித கருத்துகளைன கூறுகின்றனர்.
பூமியிலுள்ள தண்ணீர் சூரிய வெப்பத்தால் நீராவியாக காற்றுடன் கலந்து மேலே செல்கிறது. அங்கு குளிர்ச்சி ஏற்பட்டவுடன் நீராவி தண்ணீராக மாறி பூமியில் பெய்கிறது என்பது ஒரு சாரார் கருத்து.
மேகம் உண்டாவதற்கு, புறத்தில் எந்தக் காரணமிருந்தாலும் அந்தரங்கத்தில் இவற்றை உண்டு பண்ணுபவன் இறைவன்தான்
ஏனெனில், சூரிய வெப்பத்தால் நீராவி ஏற்பட்டு, ஆகாயத்தில் உயரச் செல்வதும், பின்னர் குளிர்ந்த காற்று பட்டவுடன் தண்ணீராக மாறி பூமிக்கு இறங்குவது இயற்கை என்று இருந்தால், ஒரு நாட்டில் காலத்தில் நல்ல மழையும் செழிப்பும் ஏற்பட, பின்னர் அதே நாட்டில் பஞ்சமேற்படவும், மழைக்குறைவு உண்டாகவும் காரணமில்லை.

மழை பொழியும் அளவிலும் காலத்துக்குக் காலம், ஆண்டுக்கு ஆண்டு வித்தியாசப்படவும் இடமில்லை. விஞ்ஞானிகள் கூறுவது ஓரளவு புறக்காரணமாக இருந்தாலும், அதனை உண்மையில் உண்டு பண்ணுபவன் அல்லாஹு தஆலாதான் என்பதை இவ்வித்தியாசங்கள் காட்டுகின்றன.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 56**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 20)**




'இடி முழக்கம் என்பது என்ன?" என்று யூதர்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை வினவினார்கள்.
"மேகத்துக்கு நியமிக்கப்பட்ட மலக்குகளில் ஒரு மலக்கு, அவரிடம் நெருப்பினாலான மகாரிக்குகள் (சாட்டை போன்ற கருவி) இருக்கின்றன. அல்லாஹ் நாடிய இடத்துக்கு அவற்றைக் கொண்டு மேகத்தை அவர் ஓட்டுகிறார்" என்று கூறினார்கள்.
செவிக்கெட்டுகிற சப்தம் யாது? என்பதாக வினவியதற்கு,
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்:
"மேகத்தை அவர் அதட்டுகிறார்; மேகங்கள் கடுமையாகி விட்டால் அவற்றை அவர் சேர்க்கிறார். அவரது கோபம் கடுமையாகி விட்டால் அவரது வாயிலிருந்து நெருப்பு பறக்கும். அதுதான் இடி என்பதாகக் கூறினார்கள்" என்று இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹுமா அவர்கள் ரிவாயத்து செய்திருக்கிறார்கள்.
இவையாவும் மனிதர்களின் புறபுலன்களுக்கு அப்பாற்பட்ட மறைவான உலகத்து நிகழ்ச்சிகள்.
மேகம், இடி, மின்னல், மழை ஆகியவைகள் உண்டாகும் விபரத்தைக் குறித்து விஞ்ஞானிகள் கூறியிருக்கும் விபரம்
https://m.facebook.com/story.php?story_fbid=3748511478741513&id=100007480923921&mibextid=Nif5oz
மேற்கண்ட ஹதீஸ்களுக்கும் ரிவாயத்துகளுக்கும் நேர்மாறாக இருப்பதாகச் சிலர் கருதக் கூடும். ஆத்மார்த்த ஞானங்களை அடைந்த பெரியோர்கள் வித்தியாசங்களை காண மாட்டார்கள்.
மலக்குகளை விஞ்ஞானிகள் அறிய மாட்டார்கள். அவர்களுடைய உருவத்தையும் தோற்றத்தையும் காணவும் மாட்டார்கள். ஆதலால், அவற்றிலுள்ள அகக் காரணம் விஞ்ஞானிகளுக்குத் தெரியவில்லை.

நபிமார்களும், ஒலிமார்களும் தங்களது ஞானக் கண்ணால் அகக் காரணத்தைக் காண்கின்றனர். அகக் காரணத்தின் முன் புறக் காரணம் வெறும் போலியேயாகும் . ஆதலால், அவர்கள் புறக் காரணத்தைப் புறக்கணித்து விட்டு அகக் காரணத்தை மட்டும் கூறுகின்றனர்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அரபு நாட்டிலுள்ள ஒரு வம்பனை இஸ்லாத்தில் சேருமாறு கூறுவதற்காக அழைத்து வருமாறு ஆளனுப்பினார்கள். அவர் சென்று அவ்வம்பனை அழைத்த போது, "அல்லாஹ் வெள்ளியில் செய்யப்பட்டிருக்கிறானா அல்லது தங்கத்திலா, இரண்டுமில்லாமல் செம்பிலா" என்று பதில் கூறி அனுப்பி விட்டான்.
இரண்டாம் முறையும் ஆளனுப்பினார்கள். இரண்டாம் முறையிலும் அதே பதிலைக் கூறி அனுப்பி விட்டான்.

மூன்றாம் முறையில் ஆளனுப்பிய போதும் அதே பதிலைக் கூறி அனுப்பி விட்டான். இவ்வாறு இவன் கூறி அனுப்பியவுடன் ஒரு மேகம் இவனது தலைக்கு மேல் வந்து இடியிடித்து, அவனது தலையின் மீது விழுந்தது. அப்பொழுது இறைவன்,
"இன்னும் இடிகளை அவனனுப்பி அவற்றைக் கொண்டு அவன் நாடியவரைத் தொடச் செய்கிறான். ஆனால், அவர்கள் அல்லாஹ்வைக் குறித்து தர்க்கம் செய்கின்றனர். மேலும், அவன் சக்தியில் மிகக் கடினமானவன்" என்ற வசனத்தை அருளினான்.

"இந்த ஆயத்தும் இதற்கு முன்னருள்ள ஆயத்தும் ஆமிருப்னுத் துபைலையும், அர்பதுப்னு கைஸையும் குறித்து அருளப்பட்டவை" என்பதாக இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹுமா அவர்கள் கூறியிருக்கிறார்கள்.
இவ்விருவரும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நோக்கி வந்தார்கள். ஸஹாபிகளில் ஒருவர் "அல்லாஹ்வின் தூதரே! இதோ ஆமிருப்னு துபைல் தங்களை நோக்கி வருகிறார்" என்று கூறினார். அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "விட்டு விடும். அவருக்கு அல்லாஹ் நன்மையை நாடி இருந்தால் அவரை நேர்வழியில் சேர்ப்பான்" என்று கூறினார்கள். '
அவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து ''முஹம்மதே! நான் இஸ்லாத்தில் சேர்ந்தால் எனக்கென்ன பிரதி பலன்?" என்று வினவினார்.
எல்லா முஸ்லிம்களுக்கும் இருப்பதுதான் உனக்கும். அவர்களுக்குள்ள தீமை உனக்கும்" என்றார்கள். :
"தங்களுக்குப் பிறகு எனக்குத்தான் தலைமைப் பதவி என்று ஏற்படுத்த வேண்டும்" என அவர் கோரினார். அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "இல்லை! அது என் கைவசமில்லை. அது அல்லாஹுதஆலாவிடம்தான் இருக்கிறது. அவன் நாடியவருக்கு அப்பதவியை அளிப்பான்" என்று கூறினார்கள்.
அப்பொழுதவர் "தங்களுக்கு நகரங்களில் அதிகாரம், எனக்கு கிராமங்களில் அதிகாரம் என்று ஏற்படுத்தினால் நான் இஸ்லாத்தைத் தழுவுவேன்" என்று கூறினார்.
அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் "இல்லை, முடியாது" என்றார்கள்.
"அவ்வாறாயின் எனக்கு எதைத் தருவீர்" என்று வினவினார். அப்பொழுது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "உம்மை குதிரைகளுக்கு அதிபதியாக்குவேன்" என்றார்கள்.
அப்பொழுதவர் "அப்பதவி இப்பொழுது எனக்கு இல்லையா?" என்று கூறி இஸ்லாத்தைத் தழுவ மறுத்து விட்டார்.
பின்னர் தமது துணைவர் அர்பதிடம் "நான் முஹம்மதிடம் விவாதித்துக் கொண்டிருப்பேன். நீர் பின்புறமாக வந்து அவரது தலையை ஒரே வீச்சில் வாங்கிவிட வேண்டும்' என்று திட்டமிட்டு விட்டு,மீண்டும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து தர்க்கம் செய்து கொண்டிருந்தார்.
முற்கூட்டியே திட்டமிட்டிருந்தபடி அர்பத் என்பவர், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின்புறமாக வந்து, தமது வாளை உருவினார். என்றாலும், அல்லாஹு தஆலாவுக்கு அது விருப்பமாக இருக்கவில்லை. அல்லாஹு தஆலா அவனைத் தடுத்து விட்டான். அவன் வாளை உறையிலிருந்து ஒரு சாண் அளவுக்கு வெளியில் இழுத்தான். ஆயினும் பின்னர் அது வெளியில் வரவில்லை.
இதற்குள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். அர்பத் வாளை உறையிலிருந்து வெளியில் எடுக்க முடியாமல் இழுத்துக் கொண்டிருப்பதைப் பார்த்து
"நாயனே! உன் விருப்பப்படி இவ்விருவரையும் விட்டு என்னைக் காப்பாற்றுவாயாக" என்று பிரார்த்தித்தார்கள்.

உடனே, ஒரு இடி அர்பத் மீது விழுந்தது. அவன் மரணமடைந்தான். ஆமிருப்னுத் துபைல் என்பவன் பீதியடைந்து "முஹம்மதே! உமது நாயனை நீர் பிரார்த்தித்தீர். அவன் அர்பதைக் கொன்று விட்டான். நான் உமக்கு விரோதமாக பூமியில் ஆடவர்களையும் வாலிபர்களையும் அல்லாஹ்வின் மீது சத்தியமாக நிறப்பி விடுவேன்" என்று கூறிக் கொண்டு ஓடினான்.
அப்பொழுது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "அதனை விட்டு உன்னையும் கபீலாவின் ஆடவர்களையும் அல்லாஹுதஆலா விலக்கி விடுவான்" என்று கூறினார்கள். (அவ்ஸ், கஸ்ரஜ் கோத்திரத்து மக்கள் ஆமிருப்னுத் துபைலுடன் சேர மாட்டார்கள் என்பது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய கருத்து.
பிறகு ஆமிர், ஸலூலிக் கோத்திரத்து பெண்ணின் வீட்டில் போய் தங்கினான். மறுநாள் பொழுது விடிந்த பிறகு ஆயுதங்களைத் தரித்துக் கொண்டு "முஹம்மதும் அவரது துணைவரும் (அதாவது மலக்குல் மவ்த்து அலைஹிஸ்ஸலாம் அவர்கள்) எனக்கு எதிர்பட்டால் என்னுடைய அம்பால் அவ்விருவரையும் எய்திடுவேன் என்று லாத்து என்ற விக்கிரஹத்தின் மீது சத்தியமாகக் கூறிச் சென்றான்.

இவன் இவ்வாறு புறப்படவே இறைவன் ஒரு மலக்கை அனுப்பினான், அவர் ஆமிரைத் தமது இறக்கையால் அறைந்தார். இதனால் அவனது முட்டுக்காலின் மீது ஒரு கட்டி உண்டாயிற்று. எனவே, அவன் நடக்கமாட்டாமல், ஸலூலிய்யத்து கோத்திரத்து பெண்ணின் வீட்டுக்குத் திரும்பி வந்தான். ஒட்டகைக்கு

வருகிற கட்டி போன்ற கட்டியும் ஸலூலிப் பெண் வீட்டில் மரணமும் என்று கூறிக் கொண்டே சென்றான். அப்பால் தனது குதிரையின் முதுகின் மீதிருந்தபடியே மரணித்தான்.
ஒட்டகைக்கு முட்டுக்காலில் ஒருவிதமான கட்டி வருவதுண்டு அக்கட்டி வந்தால் அது பிழைப்பது அரிது. இதனை ஒட்டகையின் பிளேக்கட்டி என்றுங் கூறுவர். இவ்விதமான கட்டி முட்டுக்காலில் மனிதருக்கும் வருவது வழக்கம். அவர்கள் கதியும் அவ்விதமே.
ஸலூலிய்யத் என்பது அரபு நாட்டிலுள்ள ஒரு கேவலமான கோத்திரத்துக்குப் பெயர். இக்கோத்திரத்தை அரபியர் மிக இழிவாகவே நடத்துவர்.
ஆதலின், தனக்கு கட்டி வந்து விட்டதால் தன் வீட்டுக்குச் செல்ல முடியாத நிலை ஏற்பட்டு, ஸலூலிப் பெண்ணின் வீட்டிலேயே தங்க வேண்டியதாயிற்று. இந்நோயாளிகள் பிழைப்பது அரிது. ஆகையால் ஆமிர் கவலையுற்று, மிகவும் இழிவான ஸலூலிக் கோத்திரத்து பெண்ணின் வீட்டில் மரணிக்க வேண்டியதாக இருக்கிறதே. ஒட்டகைக் கட்டியால் அவதிப்பட வேண்டியதிருக்கிறதே என்று கவலையுற்று மேற்கண்டவாறு கூறினான்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 57**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 21**



لَهٗ دَعْوَةُ الْحَـقِّ وَالَّذِيْنَ يَدْعُوْنَ مِنْ دُوْنِهٖ لَا يَسْتَجِيْبُوْنَ لَهُمْ بِشَىْءٍ اِلَّا كَبَاسِطِ كَفَّيْهِ اِلَى الْمَآءِ لِيَبْلُغَ فَاهُ وَمَا هُوَ بِبَالِـغِهٖ وَمَا دُعَآءُ الْكٰفِرِيْنَ اِلَّا فِىْ ضَلٰلٍ
உண்மையான அழைப்பு (பிரார்த்தனை) அவனுக்கே உரியதாகும்; எவர் அவனை அன்றி (வேறு தெய்வங்களை) அழைக்கின்றார்களோ, அவைகள் இவர்களுக்கு எவ்வித பதிலும் தர மாட்டார்கள்; (அல்லாஹ் அல்லாதவைகளைப் பிரார்த்திப் போரின் உதாரணம்;) தண்ணீர் தன் வாய்க்கு(த் தானாக) வந்தடைய வேண்டுமென்று, தன் இருகைகளையும் விரித்து ஏந்திக் கொண்டு இருப்பவனைப் போல் இருக்கிறது; (இவன் அள்ளாது) அது வாயை அடைந்து விடாது - இன்னும் காஃபிர்களின் பிரார்த்தனை வழிகேட்டில் இருப்பதே தவிர வேறில்லை. (குர்ஆன் : 13:14)
இங்கு உயர்ந்தோன் அல்லாஹ். பொய்த் தெய்வங்களிடம் பிரார்த்திப் போருக்கு ஓர் அழகான உதாரணம் கூறுகின்றான்.

கையை விரித்தால் போதுமா? "ஒருவன் தாகித்து இருக்கும் போது, தண்ணீர் அருந்த வேண்டுமென்று விரும்புகிறான். தண்ணீரை அள்ளி வாய்க்குள் இட வேண்டும். ஆனால், அவனோ தண்ணீரை நோக்கிக் இரு கைகளை விரித்துக்கொண்டு, தானாகவே தண்ணீர்,வாய்க்குள் சென்றுவிடும் என்று காத்திருக்கிறான். தண்ணீர் தானாக வாய்க்குள் செல்லப் போவதுமில்லை; இவர்களின் பிரார்த்தனையும் கவனிக்கப்படப் போவதுமில்லை)
வாழைப் பழத்தைக் கொடுக்கலாம். அதையும் தோல் உறித்து வாயில் ஊட்ட வேண்டுமா ?
இங்கு உண்மையான பிரார்த்தனை (தஅவத்துல் ஹக்) என்பது. அல் லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை என்ற ஏகஇறைக் கொள்கையைக் குறிக்கும் என்று இப்னு அப்பாஸ் (ரலி),கத்தாதா (ரஹ்) உள்ளிட்டோர் குறிப்பிட்டுள்ளனர்.
அடுத்து "அவனை விடுத்து எவைகளிடம் இவர்கள் பிரார்த்திக்கிறார்களோ அவர்கள் -அதாவது அல்லாஹ்வையன்றி இவர்கள் வழிபடும் தெய்வங்கள் - இவர்களுக்கு எந்தப் பதிலும் அளிக்கமாட்டார்கள்" என்று அல்லாஹ் கூறுகின்றான்.
அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது: கிணற்றோரம் நின்றுகொண்டு தன் கரத்தால் தண்ணீரை எடுக்க வேண்டும் என்று எண்ணுகின்றவனின் நிலையைப் போன்றதுதான் அவர்களின் நிலையும். அவன் அப்படியே

நின்றுகொண்டிருந்தால்) தண்ணீர் அவனது கரத்தைக் கூட ஒருபோதும் எட்டாது. பிறகெப்படி அவனது வாயை எட்டும்?

இறை மறுப்பாளர்களது பிரார்த்தனையை அல்லாஹுதஆலா நிறைவேற்றுகிறானா இல்லையா என்ற பிரச்சினை இவ்விடத்தில் உண்டாகிறது. இறை மறுப்பாளர்களது பிரார்த்தனைகளையும் அவன் நிறைவேற்றுகிறான் என்பதே இஸ்லாம் மார்க்கத்தின் கட்டளை.
இப்லீஸ் காஃபிர்களுக்குத் தலைவனாகவும், நல்லடியார்களை வழிகெடுப்பவனாகவும் இருப்பது யாவருக்கும் தெரிந்த விஷயம். அவ்வாறிருந்தும் அவன் இறைவனைப் பிரார்த்தித்த போது அவனது பிரார்த்தனையையும் இறைவன் அங்கீகரித்து நிறைவேற்றிய விபரம் திருக்குர்ஆனில் இப்லீஸைப் பற்றிக் கூறப்படும் இடங்களில் காணப்படுகிறது.
எகிப்து அரசனான ஃபிர்அவன், இறைவனது தூதரான ஹளரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய சத்திய அழைப்பை ஏற்றுக் கொள்ள மறுத்து, தன்னையே தெய்வமாக வணங்கவேண்டுமெனப் தன் நாட்டு மக்களுக்கு கட்டளையிட்டான்.
எகிப்திலுள்ள நீல் நதியில் தண்ணீர் வற்றி விட்ட காலத்தில், தங்களுக்கு தண்ணீர் வேண்டுமென மக்கள் ஃபிர்அவ்னைக் கேட்டுக் கொண்டார்கள். அப்பொழுது அவன், மனிதர்கள் காணாது தனித்த இடத்தில் இறைவனைப் பிரார்த்தித்து, தனது மக்களது கோரிக்கையை நிறைவேற்ற வேண்டுமென வேண்டினான். இவனது கோரிக்கையையும் இறைவன் அங்கீகரித்து நீல் நதியில் தண்ணீர் பொங்குமாறு செய்தான். எனவே, காஃபிர்கள் கேட்கும் பிரார்த்தனைகளையுங் கூட இறைவன் இந்த உலகில் நிறைவேற்றுகிறான்.
ஆனால், அவர்களுடைய குஃப்ரான காரியங்களுக்குரிய தண்டனையை மறுமையில் அவர்கள் அடைவர் என்பது முஸ்லிம்களது கொள்கை.
இதற்கு உவமானமாக ஒரு கதை
முயற்சி இல்லாமல் எதுவும் கிடைப்பது இல்லை....
ஒரு காட்டில் மரப்பொந்தில் கழுகு ஒன்று வாழ்ந்து வந்தது.
அந்தக் கழுகுக்கு இறைவனிடம் கண்மூடித்தனமான நம்பிக்கை.
அதனால்அது அடிக்கடி ஒரு பாறை மீது அமர்ந்து தியானம் செய்துகொண்டிருக்கும்.
ஒருநாள் திடீரென்று "இறைவனுக்கு நாம் தியானம் செய்வது தெரியுமா?'' என்று சந்தேகம் வந்தது.பின்னர் தானாகவே இறைவனுக்கு எல்லாம் தெரியும் என்று சமாதானம் செய்து கொண்டது.

ஒருநாள் அந்தக் கழுகு "இன்று எனக்கு உணவு கிடைக்குமா?
இறைவன்தான் எல்லோருக்கும் படியளப்பவன் ஆயிற்றே..' என்று யோசித்தது.
உணவு கிடைக்குமா என்ற சந்தேகம் வந்ததும் அந்தக் கழுகு அமர்ந்து தியானம் செய்யும் பாறை மீது நின்று, "இறைவா, இன்று எனக்கு உணவு கிடைக்குமா?'' என்று பெரிய குரலெடுத்துக் கூவியது.
உடனே விண்ணிலிருந்து ஒரு குரல். "உனக்கு இன்று உணவு உண்டு'' என்று பதில் கூறியது.
மிக்க மகிழ்ச்சியுடன் "இன்று இரை தேடும் வேலை இல்லை, எப்படியும் உணவு கிடைத்துவிடும்'' என்ற நம்பிக்கையுடன் அந்தக் கழுகு பேசாமல் தியானம் செய்துகொண்டு அந்தப் பாறை மீது அமர்ந்திருந்தது.
நேரம் செல்லச்செல்ல கழுகுக்குப் பசி வரத் தொடங்கியது. ஆனாலும் கண்களைத் திறக்காமல் இறை தியானத்திலேயே அமர்ந்திருந்தது. மதியம் ஆயிற்று, மாலையும் போயிற்று. இரவு வந்துவிட்டது.
"நம்மை இறைவனே ஏமாற்றிவிட்டானே ' என்று மனம் வருந்தியபடி பாறையிலிருந்து புறப்படத் தயாரானது கழுகு.
அப்போது ஒரு குரல் கேட்டது. "என்ன குழந்தாய். சாப்பிட்டாயா?'' என்றதைக் கேட்டதும், கழுகுக்கு அழுகை அழுகை வந்துவிட்டது.
"குழந்தாய் சற்று திரும்பிப் பார். உன் பின்னாலேயே உனக்கான உணவு இருக்கிறது ''கழுகு பின்னால் சென்று பார்த்தது.
அங்கே ஒரு பெரிய எலி இறந்துகிடந்தது. கழுகு புன்னகை புரிந்தது. இறைவனிடம் ," ஏன் இதனைக் காலம் தாழ்த்தி உணவு கொடுத்தாய் இறைவா?'
இறைவன் பதிலளித்தான் "குழந்தாய், உனக்குரிய நேரத்தில் உணவு வந்துவிட்டது. நீ தான் அதைத் தேடி எடுக்காமல் காலம் தாழ்த்தி விட்டாய்.

திரும்பிப் பார்க்கும் முயற்சி கூடச் செய்யாமல் உணவு எப்படிக் கிடைக்கும். "கடுகளவேனும் முயற்சி வேண்டும். அந்த முயற்சியும் சரியானதாக வீண் விரயமான முயற்சியாக இல்லாமல் இருக்க வேண்டும். ஒரு வேளை உணவு கூட உழைக்காமல் உண்ணக்கூடாது. அப்போதுதான் இறைவனின் அருளையும் பெற முடியும்'' என்று கழுகுக்கு ஆசி கூறி மறைந்தார் இறைவன்.
அன்று முதல் கழுகு உழைப்பையே தியானமாக எண்ணிக் கடமையைச் செய்யத் தொடங்கியது.
தெய்வம் நம்பிக்கை எல்லோரிடமும் இருக்க வேண்டும். ஆனால் தெய்வத்தை நம்பியே ஒரே இடத்தில் இருந்து விடக்கூடாது என்பது இக்கதை சொல்லும் நீதி

**Rahmath Rajakumaran**

ஊரிலேயே பெரிய ஆலமரம்.அதற்கு கீழே ஒரு திண்ணை.அந்த திண்ணையிலே வெட்டியாக உட்கார்ந்து இருப்பதே பெரிய வேலையாக ஒருவன் செய்து வந்தான்.

அவன் வேலை அந்த திண்ணையில் உட்கார்ந்து கால் ஆட்டிகொண்டே இருப்பது.. வெட்டியாய் பேசி கொண்டு இருப்பது. சோறும் அப்படித்தான் கிடைச்சா சாப்பிடுவது என இருந்தான்.
இதுவே ரொம்ப நாளாய் நடந்து கொண்டு வந்தது. அவனை கொஞ்ச நாட்களாய் கவனித்து வந்த பெரியவர் அவனிடம் போய்,தம்பி, இப்படி இங்கே உட்கார்ந்து கொண்டு வெட்டியா கால் ஆட்டி கொண்டு இருப்பதைவிட, காஞ்சிபுரம் போய் கால் ஆட்டுனாலும் வேளா வேலைக்கு சோறு கிடைக்கும் என சொன்னார்.
அவன் உடனே அப்படியா? காஞ்சிபுரத்துல கால் ஆட்டுனாலே சோறா? என நடந்தே நாலு நாள் கழிந்து காஞ்சிபுரம் வந்து சேர்ந்தான்.
வந்த உடனே ஒரு நல்ல திண்ணையாக பார்த்து உட்கார்ந்து, தன் வேலையை தொடங்கினான்.
இரவு வரை காலை வெட்டியாக ஆட்டிக்கொண்டே இருந்தான்,யாரும் இவனை கண்டு கொள்வதாக இல்லை.
அப்போது அங்கே வந்த ஒருவரிடம் தன் ஊரில் நடந்ததை கூறி,சோறும் கிடைக்கும் என்றார்.ஒன்றும் கிடைக்க வில்லையே என்றான்.
உடனே,அவர் அவனிடம், "இது காஞ்சிபுரம் இங்கே பட்டு தொழில் மிக அதிகம். அதனால் நீ அந்த தொழில் செய்யும்போது காலை கொண்டு செய்ய வேண்டிய வேலை என்பதைத்தான் அந்த பெரியவர் அப்படி உனக்கு கூறி உள்ளார். நல்ல கால் இருந்தும் பிச்சை எடுக்க நினைக்கும் உன் எண்ணத்தை என்ன சொல்வது? என்றார்.
உழைக்காமல் வாழலாம் என நினைத்த அவன் எண்ணமே, அவனை செருப்பால் அடித்ததுபோல தோன்றியது..
பட்டு நெசவு தொழில் காலை ஆட்டிக்கொண்டே ஈடுபட்டான். சோறும் மனத் திருப்தியும், கையில் பணமும் கிடைத்தது.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 58
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 22




وَلِلّٰهِ يَسْجُدُ مَنْ فِى السَّمٰوٰتِ وَالْاَرْضِ طَوْعًا وَّكَرْهًا وَّظِلٰلُهُمْ بِالْغُدُوِّ وَالْاٰصَالِ ۩
வானங்களிலும், பூமியிலும் இருப்பவையெல்லாம், விரும்பியோ விரும்பாமலோ அல்லாஹ்வுக்கே ஸுஜூது செய்(து சிரம் பணி)கின்றன; அவற்றின் நிழல்களும் காலையிலும் மாலையிலும் (அவ்வாறே! ஸஜ்தா செய்கின்றன). (குர்ஆன் : 13:15)
அனைத்தும் அல்லாஹ்லின் உத்தரவுப்படியே நடக்கின்றன. அதனைச் சரியென்று ஒரு விசுவாசி எண்ணி அப்படியே ஏற்கிறான். ஒரு நிராகரிப்போனுக்கு அது பிடித்தமில்லா விட்டாலும் இறைவனின் உத்தரவுப்படிதான் நடக்கும் என்ற நிலையில் அவன் அதற்குப் பணிந்துநான் தீர வேண்டியதாகிறது.
பகல், இரவு மாறி மாறி வருகின்றன. மழை பொழிகிறது. வெயில் காய்கிறது. காற்று வீசுகிறது. வெள்ளம் பெருகுகிறது. குழந்தை பிறக்கிறது, மரணம் வருகிறது. இவை போன்று எத்தனை எத்தனையோ, எல்லாம் அல்லாஹ் விதித்தவை. அவனுடைய உத்தரவின்படியே அவை அனைத்தும் நடக்கும்.
இவற்றில் மனிதன் விரும்புவதும் இருக்கும். விரும்பாததுமிருக்கும்.
இரு நிலையிலும் அவன் அவற்றை ஏற்றுத்தான் தீர வேண்டும். அப்பொழுது அவன் அல்லாஹ்வின் கட்டளைக்கு விரும்பியோ விரும்பாமலோ தலை சாய்த்து தான் தீருகின்றான். இக்கருத்தைத்தான் இவ்வசனம் எடுத்துரைக்கிறது.

நிழல் காலையில் ஒரு பக்கமும் மாலையில் எதிர்பார்க்கமும் சாய்கிறது இதனை மனிதன் மாற்றி அமைத்துவிட முடியாது. காரணம் அதுவும் அல்லாஹ்வின் உத்தரவுக்கு பணிந்து தான் செய்கிறது
பூமியின் சுற்றளவை சொல்லும் நிழல் :
இன்றைய தேதிக்கு பூமியின் சுற்றளவு சராசரியாக 40,075 கி.மீ. என்று கணக்கிடப்பட்டுள்ளது. இந்தக் காலத் தொழில் நுட்பங்களைக் கொண்டு இதை அளந்து சொல்வது பெரிய காரியம் இல்லை.
ஆனால், சுமார் 2,250 வருடங்களுக்கு முன்னர், ஓர் அறிஞர் பூமியின் சுற்றளவை ஏறத்தாழ சரியாகக் கணித்துச் சொன்னார்! 40,000 கி.மீ என்று.

அவர் பெயர் எரொடொஸ்தேனஸ் (Eratosthenes) கிரேக்க மாமன்னர் அலெக்சாண்டர் உருவாக்கிய, அலெக்ஸாண்ட்ரியா நகரில் வாழ்ந்த அறிஞர் இவர். இவரால் எப்படி பூமியின் சுற்றளவைக் கணிக்க முடிந்தது ? சொல்றேன்.
ஒரு வருடத்தில் ஒரு நாளில் மட்டும் பகல் மிகவும் நீண்டதாக இருக்கும். ஆங்கிலத்தில் அந்த நாளை, சம்மர் சோல்ஸ்டைஸ் (Summer Solstice) என்பர். தமிழில் 'கோடை சந்தி' என்று சொல்லப்படுகிறது. ஜூன் 20, 21, 22 ஆகிய மூன்று நாட்களில், ஏதாவது ஒரு நாளில் இது நிகழும்.
சியேன் (Syene) என்ற எகிப்திய நகரம், அலெக்சாண்ட்ரியாவில் இருந்து சுமார் 800 கி.மீ. தொலைவில் இருக்கிறது. அந்த நகரில் கோடை சந்தி அன்று நிகழ்ந்த அதிசயத்தைப் பற்றி, சியேனில் இருந்து அலெக்சாண்ட்ரியா வந்த வணிகர்கள் பேசிக்கொண்டார்கள்.
அன்றைய தினத்தில் உச்சி வெயில் நேரத்தில், நிழல் தரையில் விழவில்லையாம்; மேலும் நகரத்தின் ஆழமான கிணற்றின் அடி ஆழத்தில் இருந்த நீர், சூரிய ஒளியால் ஜொலித்ததாம். இதுதான் அந்த அதிசயம். சூரிய ஒளி செங்குத்தாக விழும் போது அடி அழமான கிணற்றின் நீர் ஜொலிக்கத்தானே செய்யும்.

எரொடொஸ்தேனஸ், சியேனில் அன்று சூரியக் கதிர்கள் நேர் செங்குத்தாக விழுந்ததால், இது நிகழ்ந்தது என்பதைப் புரிந்துகொண்டார்.
அதே நாளில், அலெக்ஸாண்ட்ரியாவின் உயரமான தூண் ஒன்று, மிகவும் குட்டையான நிழலை ஏற்படுத்தியதைக் கண்டார். ஆக அலெக்ஸாண்ட்ரியாவில் சூரியனின் கதிர்கள் செங்குத்தாக விழவில்லை. தூணின் உயரத்தையும், அதன் நிழலின் உயரத்தையும் கணக்கிட்டு, அலெக்ஸாண்ட்ரியாவில் அன்று சூரியக் கதிர்கள் 7 டிகிரி சாய்வாக விழுந்ததைக் கணக்கிட்டார். அடேயப்பா.. எவ்வளவு அழகான உண்மை !
இதில் இருந்து அலெக்ஸாண்ட்ரியாவும், சியேனும் பூமியின் மையப்புள்ளியில் இருந்து 7 டிகிரி கோணத்தில் விலகி இருக்கிறது என்பதைக் கண்டறிந்தார்.
ஒரு வட்டத்தின் மொத்த கோணமான 360 டிகிரியில்,7 டிகிரி என்பது 50ல் ஒரு பங்கு சரியா ? பூமியின் வட்டவடிமான உருண்டை தானே ...இரண்டு நகரங்களுக்கும் இடைப்பட்ட தூரம் 800 கி.மீ எனில், பூமியின் மொத்த சுற்றளவு 800 கி.மீ x 50 = 40,000 கி.மீ. ஏறத்தாழ துல்லியமான மதிப்பீடு இது! உலகின் மிகச்சிறந்த கண்டுபிடிப்பாக இது இன்றளவிலும் குறிப்பிடப்படுகிறது.
اَوَلَمْ يَرَوْا اِلٰى مَا خَلَقَ اللّٰهُ مِنْ شَىْءٍ يَّتَفَيَّؤُا ظِلٰلُهٗ عَنِ الْيَمِيْنِ وَالشَّمَآٮِٕلِ سُجَّدًا لِّلّٰهِ وَهُمْ دٰخِرُوْنَ
அல்லாஹ் படைத்திருப்பவற்றில் ஒன்றையுமே இவர்கள் பார்க்கவில்லையா? அவற்றின் நிழல்கள் வலமும், இடமுமாக சாய்வதெல்லாம் அல்லாஹ்வை மிக்க தாழ்மையாகச் சிரம் பணிந்து வணங்குவதுதான். (அல்குர்ஆன் : 16:48)
அட , நம்மைச் சுற்றியும் தினமும் நிழல்கள் வலமும் , இடமுமாக சாய்ந்து வரத்தானே செய்கிறது..எரொடொஸ்தேனஸ் க்கு மட்டும் ஜூன் 21 நீண்ட பகல் என்பதை உணரமுடிகிறது
அன்றைய தினத்தில் சூரியன் நடுவானில் உச்சியில் இருக்கும்போது நிழல் தரையில் விழாது என்பதை இறைவன் அவருக்கு அந்த ஞானத்தைக் கொடுத்து,சியேன் என்ற நகரம் அலெக்சாண்டர் இருந்து 800 கிலோ மீட்டர் தூரம்.
உடனே அலெக்சாண்டரியாவின் உயரமான தூணின் நிழல் குட்டையாக விழ , இரண்டையும் அளந்து கணித்து, அந்த சின்ன நிழல் பூமியின் சுற்றளவை சொல்கிறது, 40 ஆயிரம் கிலோ மீட்டர் என்று !
நாம் நினைத்துக் கொண்டோம் ' நிழல்கள் வலமும், இடமும் சாய்வது இறைவனை மிக்க தாழ்மையாக வணங்குகிறது' என்று. அது சரிதான். இருந்தாலும் அந்த நிழல் தான் வணங்கும் வணக்கத்தின் மூலம் நமக்கு ஒரு சேதியையும் அது சேர்த்துக் சொல்லிக் கொண்டேயிருக்கிறது '' உங்களுடைய பூமியின் சுற்றளவு 40 ஆயிரம் கிலோ மீட்டர் என்று
நிழல்கள் பல சேதிகளை இன்னும் நம்மிடம் சொல்லிக் கொண்டேதான் இருக்கிறது ! நாம்தான் அதை கேட்கிற மூடில் இல்லை.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 59**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 23**

قُلْ مَنْ رَّبُّ السَّمٰوٰتِ وَالْاَرْضِ قُلِ اللّٰهُ قُلْ اَفَاتَّخَذْتُمْ مِّنْ دُوْنِهٖۤ اَوْلِيَآءَ لَا يَمْلِكُوْنَ لِاَنْفُسِهِمْ نَفْعًا وَّلَا ضَرًّا قُلْ هَلْ يَسْتَوِى الْاَعْمٰى وَالْبَصِيْرُ ۙ اَمْ هَلْ تَسْتَوِى الظُّلُمٰتُ وَالنُّوْرُ اَمْ جَعَلُوْا لِلّٰهِ شُرَكَآءَ خَلَقُوْا كَخَلْقِهٖ فَتَشَابَهَ الْخَلْقُ عَلَيْهِمْ قُلِ اللّٰهُ خَالِـقُ كُلِّ شَىْءٍ وَّهُوَ الْوَاحِدُ الْقَهَّارُ

(நபியே! அவர்களிடம்;) “வானங்களுக்கும் பூமிக்கும் இறைவன் யார்?” என்று நீர் கேளும். அவன் அல்லாஹ்தான் என்று நீரே கூறும்:
“(அவ்வாறிருக்க) நீங்கள் அவனையன்றி (வேறு தெய்வங்களை) இரட்சகர்களாக எடுத்துக் கொள்கிறீர்களா? அவர்கள் தங்களுக்கே யாதொரு நன்மையும் தீமையும் செய்து கொள்ளச் சக்தியற்றவர்களாய் இருக்கின்றனர்”;
மேலும், கூறும்: “குருடனும் பார்வை உடையவனும் சமமாவார்களா? அல்லது இருள்களும், ஒளியும் சமமாகுமா? அல்லது அவர்கள் இணையாக்கிக் கொண்டிருக்கும் (தெய்வங்கள்) அல்லாஹ் படைத்திருப்பதைப் போல் எதையும் படைத்திருக்கின்றனவா? (அப்படியிருந்தால் இது யார்) படைப்பு என்று அவர்களுக்குக் குழப்பம் ஏற்பட்டிருக்கலாம்!”
(அவ்வாறில்லையே எனவே நபியே! நீர் உறுதியாகக்) கூறும்: “அல்லாஹ்வே எல்லாப் பொருட்களையும் படைக்கிறவன்; அவன் ஒருவனே; (அனைத்தையும்) அடக்கி ஆள்பவன்” என்று.(குர்ஆன் : 13:16)
அல்லாஹ் அல்லாதவற்றை வணங்கிக் கொண்டிருப்பவரை நோக்கி, "வானங்கள் பூமி ஆகியவற்றைப் படைத்து இரட்சித்து காப்பாற்று வருகிற இரட்சகன் யார் என்று நபியே நீர் கேளும். அல்லாஹ் ஒருவன் தான் என்று அவர்கள் அறிந்தே இருக்கின்றனர். அதை அவர்கள் சொல்லாவிட்டாலும் நீர் அவ்வாறு கூறி உறுதிப்படுத்தி விடும்.

அங்ஙனம் இருக்க நீங்கள் அவனையன்றி சிலைகளை வணங்குவதுடன் அவற்றை உற்ற நேசர்களாகவும் ஆக்கிக் கொள்கிறீர்களே அவை தமக்கே எந்த நன்மையும் இடரையும் செய்வதற்கு சக்தி பெற மாட்டா. அவை வைக்கப்பட்ட இடங்களில் அப்படியே அமர்ந்திருக்கும். அவற்றை நீங்கள் வணங்குவது பொருத்தமானதுதானா சிந்தியுங்கள் என்று அவர்களுக்குக் கூறும்
அல்லாஹ்வுக்கு இணையாளர்கள் என்று சில சிலைகளை வைத்து வணங்குகின்றனரே அவைகள், அல்லாஹ் படைத்திருப்பது போல் எதையாவது படைத்திருக்கின்றனவா ?
வானங்கள், பூமி,சூரியன்,சந்திரன், மலைகள், கடல், மனித இனம், மிருக இனம் இப்படி கணக்கில் அடங்காதவை இறைவனால் படைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றில் ஒரு சிறிய படைப்பை இவை சிருஷ்டித்துண்டா ? அவைகள் படைத்திருப்பதாக ஒன்றைக் கொண்டு வரட்டும்.
அவ்வாறு படைக்கப்பட்டிருந்தால், அல்லாஹ்வினால் படைக்கப்பட்டிருப்பதற்கும் இதற்கும் வேறுபாடு தெரியாமல் அவர்கள் குழப்பம் ஏற்படலாம் அப்படியொரு குழப்பம் ஏற்படுமாறு எந்த படைப்பையும் அந்த இணையாளர்கள் படைக்கவில்லையே.

ஆன்மிக படித்தரங்களில் இவ்வுதாரணங்கள் மெஞ்ஞானத்தின் உச்சத்தை தொடுகிறது என்பதாக தாவீலாத்துன்னஜ்மிய்யா என்னும் கிரந்தத்தில் கூறப்பட்டு இருக்கிறது.
அல்லாஹுதஆலா அல்லாததை இந்த உஜூது என்னும் உண்மைக்கு எஜமானனாகவும், அதிகாரியாகவும் கருதுபவன்தான் குருடன்.

இந்த உஜூது என்னும் உண்மையில் அதிகாரியாகவும், எஜமானனாகவும் அல்லாஹுதஆலாவைத் தவிர உள்ளவற்றைக் காணாதவன்தான் பார்வையுள்ளவன்.
தவிர, நஃப்ஸுகள்தாம் குருடர்கள். ஏனெனில், நஃப்ஸுகள் அல்லாஹுதஆலா அல்லாததுடன் சம்பந்தப்படுகின்றன. அவன் அல்லாததை நேசிக்கின்றன. இருதயங்கள்தாம் பார்வையுள்ளவர்கள். ஏனெனில், அவைகள் அல்லாஹு தஆலாவுடன் சம்பந்தப்படுவது மல்லாமல், அவனையே நேசிக்கின்றன. ஆகவே, சத்தியத்தைக் காணாமல் அசத்தியத்தைக் காண்பவன்தான் குருடன்.
சத்தியத்தைக் காண்பதுடன் அசத்தியத்தைக் காணாதிருப்பவன்தான் பார்வையாளன்"
தவிர, கிறிஸ்துவர்கள், மஜூஸியர்கள், விக்கிரஹத் தொழும்பர்கள், பிறர் ஆகிய பல வகையினர் பல விதமான முறையில் இறைவனுக்கு இணை வைப்பதால் 'இருள்கள்' என்று பன்மையாகவும், ஏகஇறை வணக்கம் ஒரே விதமாக இருப்பதால் 'பிரகாசம்' என்று ஒருமையாகவும் கூறப்பட்டிருக்கிறது.

மேற்கண்ட திருக்குர்ஆன் வசனம் குருடர்கள் என்று கூறும்போது கவிஞர் கண்ணதாசன் எழுதிய ஒரு தத்துவப் பாடலின் வரிகள் ஞாபகத்திற்கு வருகிறது.
" உலகத்தில் திருடர்கள் சரிபாதி,
ஊமைகள் குருடர்கள் அதில் பாதி "
ஊமைகள்,குருடர்கள் என்பவர்கள் திருடர்களிடம் ஏமாறுபவர்கள். அதில் பாதி என்றால், உலகத்தில் பாதி பேர் என்று பொருள்.
ஆக உலகத்தில் பாதி பேர் திருடர்கள். மீதி பாதி பேர் திருடர்களிடம் ஏமாறும் ஏமாளிகள்.இந்த ஏமாளிகள் அறிவு குறைந்தவர்கள் என்பதைக் குறிக்கத்தான் ஊமைகள் குருடர்கள் என்று உருவகப்படுத்துகிறார் கவிஞர். சரிதான், இங்கே ஹக்கை விளங்காதவர்கள் குருடர்கள்தான். அப்படியே விளங்கி, பொய்யான தெய்வங்களை காட்டி அவர்களிடம் பணம் காசு பறிப்பவர்கள் திருடர்கள்தான் .

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 60
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 24




اَنْزَلَ مِنَ السَّمَآءِ مَآءً فَسَالَتْ اَوْدِيَةٌ بِقَدَرِهَا فَاحْتَمَلَ السَّيْلُ زَبَدًا رَّابِيًا وَمِمَّا يُوْقِدُوْنَ عَلَيْهِ فِى النَّارِ ابْتِغَآءَ حِلْيَةٍ اَوْ مَتَاع زَبَدٌ مِّثْلُهٗ كَذٰلِكَ يَضْرِبُ اللّٰهُ الْحَـقَّ وَالْبَاطِلَ فَاَمَّا الزَّبَدُ فَيَذْهَبُ جُفَآءً وَاَمَّا مَا يَنْفَعُ النَّاسَ فَيَمْكُثُ فِى الْاَرْضِ كَذٰلِكَ يَضْرِبُ اللّٰهُ الْاَمْثَالَ
அவன்தான் வானத்திலிருந்து மழையை இறக்கினான்; அப்பால் ஓடைகள் அவற்றின் அளவுக்குத் தக்கபடி (நீரைக் கொண்டு) ஓடுகின்றன; அவ்வெள்ளம் நுரையை மேலே சுமந்து செல்கிறது;
(இவ்வாறே) ஆபரணமோ அல்லது (வேறு) சாமான் செய்யவோ (உலோகங்களை) நெருப்பில் வைத்து உருக்கும் போதும் அதைப் போல் நுரை உண்டாகின்றது;
இவ்வாறு சத்தியத்திற்கும், அசத்தியத்திற்கும் அல்லாஹ் (உவமை) கூறுகிறான்; அழுக்கு நுரை அழிந்துபோய் விடுகிறது; ஆனால் மனிதர்களுக்குப் பலன் அளிக்கக் கூடியதோ, பூமியில் தங்கி விடுகிறது; இவ்வாறே அல்லாஹ் உவமைகளைக் கூறுகிறான். (குர்ஆன் : 13:17)

முதலாவது உதாரணம்: மழை பொழிகிறது ஓடைகளில் வெள்ளம் கரை புரண்டு ஓடுகிறது. ஓடைகளின் கொள்ளளவைப் பொறுத்து அவற்றில் ஓடும் தண்ணீரின் அளவும் இருக்கும். இவ்வுதாரணம் ஔவை பாடிய பாடலை ஞாபகமூட்டுகிறது

குலோத்துங்க சோழ மன்னன் முடிசூட்டும் நாள். அமைச்சர்களும் பல புலவர்களும் அரசரை வாயார வாழ்த்தி பாடல்களைப் பாடி மன்னரை மகிழ்வித்து தாங்களும் மகிழ்ந்து செண்டிருந்தார்கள்.
அப்போது ஔவையார் மன்னனை வாழ்த்திப்பாட எழுந்தார். மன்னரும் அவையோரும் ஔவையார் என்ன பாடப்போகிறார் என்று மிகவும் ஆவலுடன் பார்த்துக்கொண்டிருந்தனர். அப்போது ஔவையார் 'வரப்புயர' எனச் சொல்லி, அமர்ந்துவிட்டார்.
இதைனைக் கேட்டோர் யாருக்கும் என்னவென்று புரியவில்லை. பின்னர் ஔவையாரே இத்தொடரைப் பின்வருமாறு விளக்கியதாகக் கூறுவர்.
வரப்புயர நீர் உயரும்
நீர் உயர நெல் உயரும்
நெல் உயரக் குடி உயரும்
குடி உயரக் கோல் உயரும்
கோல் உயரக் கோன் உயர்வான்
என்று பாடி மன்னனை வாழ்த்தி முடித்தார் ஔவையார். மன்னரும் அவையோரும் பெரு மகிழ்ச்சியடைந்து ஔவையாரை பாராட்டினார்கள்.
சரி வேத வசன விளக்கத்திற்கு வருவோம்.
இப்பூமியில் உள்ள ஓடைகள் வாய்க்கால்கள் ஆகியவற்றில் அதனதன் அளவிற்குத் தக்கவாறு தண்ணீரைக் கொண்டு ஓடுகின்றன.
புதுத் தண்ணீரின் மேல் பாகத்தில் உயரமான நீர்க்குமிழிகளும் நுரைகளும் ததும்புவதுண்டு .
(நுரைகளின் அவசியம் பற்றி இப்பதிவின் நிறைவில் சொல்லியிருக்கிறேன் )
ஆனால், அந்த நுரைகள் கரைகளில் ஒதுங்கி காய்ந்து போய்விடுகின்றன. மனிதர்களுக்குப் பயனளிக்கக் கூடிய தண்ணீரானது பூமியில் தங்கி பலவித நன்மைகளைச் செய்து கொண்டே செல்கிறது.
இதன் கருத்தாவது, வானத்திலிருந்து அல்லாஹ் தண்ணீர் எனும் திருக்குர்ஆனை இறக்கினான். அது இதயங்கள் பெற்றிருக்கும் அந்தந்த ஈமான்களின் அளவிற்குள்ள நீரை எடுத்துக் கொண்டு ஓடைகளில் ஓடி அவற்றிலுள்ள அழுக்கு நுரைகளை அகற்றி, இல்லாமல் ஆக்கிவிட்டு பயனளிக்கக் கூடிய விசுவாசம், நேர்வழி ஆகியவற்றை அவற்றில் தங்கவைத்து விடுகிறது.
இரண்டாவது உதாரணம் : நகைகளைச் செய்வதற்காகவும் ஆயுதங்கள் இதர சாமான்கள் முதலியன செய்வதற்காகவும் உலோகங்களை நெருப்பிலிட்டு உருக்குகின்றனர். அந்த உலோகங்கள் நன்றாக உருகி வரும்போது அவற்றிலும் தண்ணீரைப் போன்று உலோகங்களின் அழுக்கு நுரை வடிவில் மேலே வருகின்றது. அந்த நுரையும் இறுதியில் இல்லாமல் போய், விரும்பிய நகையும், இதர சாமான்களும் உருவாகி மனிதர்களுக்குப் பயனளிக்கின்றன.
அழுக்கு நுரையை அசத்தியத்திற்கும், பயனளிப்பதைச் சத்தியத்திற்கும் ஒப்பிட்டு அல்லாஹ் உதாரணங்களை விவரித்துக் காட்டுகின்றான். சத்தியம் என்பது சுத்த நகை போன்றது. அசத்திய என்பது அழுக்கு நுரை போன்றது.
மேற்கண்ட இரண்டு உதாரணத்திலும் நுரையைப் பற்றி இறைவன் குறிப்பிடுவதால் நுரையின் அவசியம் தெரிந்தாக வேண்டும் .

நுரையின் அவசியம்.
குறைகுடம் கூத்தாடும், நிறைகுடம் தளும்பாது எனபது தமிழ் பழமொழி
அதே போன்றதுதான் " நுரை கொண்ட காபி சிந்தாது" என்பது விஞ்ஞானத்தின் புது மொழி. '
புத்தருக்குப் போதி மரத்தடியில் ஞானம் வந்தது மாதிரி காபிக் கடையில் எமிலி டிறேசெர் (Emilie Dressaire)க்கு தலையில் பல்பு எரிந்தது.
எமிலி டிறேசெர் தற்போது நியூயார்க் பல்கலைக் கழகத்தில் பொறியியல் பாலிடெக்னிக்கில் மெக்கனிகல் மற்றும் ஏரோஸ்பேஸ் துறையில் துணைப் பேராசிரியராக இருக்கும் அவர் அப்போது பிரின்ஸ்டன் பல்கலைக்கழகத்தில் ஆய்வாளராகப் பணியாற்றிக் கொண்டு இருந்தார்.
காலையில் வீட்டிலிருந்து அலுவலகம் செல்லும் வழியில் காபிக் கடைக்குப் போய்க் காபி வாங்கிக் கோப்பையைக் கையில் எடுத்துச் செல்வது அமெரிக்காவில் பழக்கம்.
அமெரிக்காவில் உள்ள பிரபலமான காபி விற்பனை செயின் கடை அது. பொதுவே எமிலி விரும்புவது காபுச்சினோ எனும் வகை காபி. அந்தக் காபி தரும் போது கையில் பிடித்தபடி செல்லும்போது கீழே சிந்தாமல் இருக்கக் குவளையை மூடித் தான் தருவார்கள். ஆனால் அன்று வித்தியாசமாகச் சற்றே மாற்றம் இருக்கட்டுமே என லாட்டே எனும் காபி வாங்கினார் எமிலி
அந்த லாட்டே காபியில் நுரை ததும்பும். கோப்பையின் மேல் பகுதி நுரை நிறைந்து இருக்கும். “லாட்டே வகை காபி கீழே சிந்தாது மேடம்” என்று கூறிய சிப்பந்தி அன்று அந்தக் குவளையை மூடித் தரவில்லை.

எமிலி டிறேசெர்றும் பல்கலைக்கழகம் செல்லும் அவசரத்தில் ஏதோ சிந்தனையில் மறுப்பு எதுவும் சொல்லாமல் சிப்பந்தி கூறியதைக் கேட்டுக் காபி குவளையை மூடி எதுவும் இல்லாமல் வங்கி நடையைக் கட்டினார். அலுவலகம் சென்றடையும் வரையில் அந்தக் கோப்பையிலிருந்து காபி சிந்தவே இல்லை.
நுரை கொண்ட காபி ஏன் சிந்தாது என்ற சிந்தனை, காபி அனுபவத்தை ஆய்வுச் சாலைக்கு எடுத்துச் செல்லுவது எனத் தீர்மானித்தார். நுரை இருந்தால் உள்ளபடியே தளும்பல் குறையுமா எனச் சோதனை செய்து பார்க்க முடிவு செய்தார். .
நுரை உள்ள அந்தக் கோப்பையையும், நுரை இல்லாமல் அதே நீர்மக் கலவை கொண்ட வேறு ஒரு கோப்பையையும் ஆய்வாளர்கள் ஆய்வுக்கு எடுத்தனர்.

இரண்டு கோப்பையையும் ஒரே மாதிரியாக வேக வேகமாக பக்கவாட்டில் குலுக்கியும், ஒரே சீர் வேகத்தில் முன்னும் பின்னும் ஆட்டியும் தளும்பும் பாணியை உற்றுநோக்கி ஆராய்ந்தனர்.
வெகுவேகமாகப் படம் எடுக்கும் கேமராவைக் கொண்டு கோப்பைகளை ஆட்டும்போது ஏற்படும் அலைகளைப் படம் பிடித்து ஆராய்ந்தனர். படங்களில் ஏற்பட்ட அலைகளைக் கொண்டு கணித ரீதியாக ஆராய்ந்து பார்த்தனர்.
நுரை அற்ற நிலை, ஆறு மி.மீ உயரம் உள்ள நுரை, சுமார் இருபது மி.மீ நுரை உள்ள நிலை என மூன்று நிலைகளில் கோப்பையைக் குலுக்கியும் ஆட்டியும் ஆராய்ந்து பார்த்தனர். வெறும் ஒரே ஒரு அடுக்கு நுரை கூடத் தளும்பலை குறைத்தாலும், நுரையின் அளவு பெருகப் பெருக தளும்பல் மிகவும் குறைந்தது.
அதிகபட்ச தளும்பல் குறைப்பை ஐந்து அடுக்கு நுரை தந்துவிடுகிறது எனவும், அதற்கு மேல் உயரமாக நுரை இருப்பதில் ஒன்றும் பயன் இல்லை எனவும் ஆய்வில் கண்டனர்.
குடுவையின் சுவற்றோடு நுரை உராயும்போது குலுக்குவது, ஆட்டுவது முதலியவற்றால் ஏற்படும் ஆற்றல் விரயமாகி தளும்பல் வெகுவாகக் குறைந்து போகிறது என விளக்கம் கூறுகின்றனர்.
இந்த ஆய்வைக் குறைத்து எடை போடவேண்டாம். ஏதோ காபிக் கடையிலும் டீக் கடையிலும் நுரை ததும்பக் கொடுத்தால் கீழே சிந்தாது என்பது மட்டும் இதன் பொருள் அல்ல.
டேங்கர்களில் பெட்ரோல் முதலிய திரவம் முதல் திரவமாகப்பட்ட வாயுக்களை எடுத்துச் செல்லும்போது பல விதமான சிக்கல்கள் உள்ளன.
ஓடும் டேங்கரில் திரவம் தளும்பித் தளும்பி டேங்கரின் சுவற்றில் தாக்கம் ஏற்படுத்தி விரிசல் செய்து விபத்தை ஏற்படுத்தும் அபாயம் உண்டு.
தளும்பலைக் குறைக்க கொஞ்சம் குறைவான திரவத்தோடு நுரையை ததும்ப ததும்ப எடுத்துச் செல்வது மூலம் ஆபத்து இன்றி பாதுகாப்பாகப் பலவகை திரவங்களை டேங்கர் போன்ற வாகனங்களில் எடுத்துச் செல்வது மேலும் எளிமையாகும் என்கின்றனர் ஆய்வாளர்கள்.
மேற்கண்ட குர்ஆன் வசனத்தில் ஓடைகளில் நீர் தளும்பி ஓடும்போது அந்நீரானது ஓடையை மீறி வெளியே சிந்தாமல் இருக்க நுரைகள் அவசியப்படுகிறது.
அதைப் போலவே உலோகங்களை நெருப்பிலிட்டு உருக்கும் போது திரவ உலோகம் கொதித்து சிந்தாமல் இருக்க திரவ உலோகத்தின் மீது அழுக்கான நுரை படிந்து அதன் தளும்பலை குறைக்கிறது
مَا خَلَقْنٰهُمَاۤ اِلَّا بِالْحَقِّ وَلٰكِنَّ اَكْثَرَهُمْ لَا يَعْلَمُوْنَ.
நிச்சயமாக தக்க காரணத்திற்காகவே அன்றி, இவைகளை நாம் (வீணுக்காக ) படைக்கவில்லை. எனினும், அவர்களில் பெரும்பாலானவர்கள் இதனை அறிந்து கொள்வதில்லை. (குர்ஆன் : 44:38,39)
எனவே நுரையும் வீணுக்காக அல்ல ; அதுவும் நீர்மங்கள் தளும்பாமல் இருக்க அவசியப்படுகிறது.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 61**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 25**



"எவர்கள் தங்களுடைய இரட்சகனை (அவனுடைய கட்டளையை) ஏற்றுக் கொள்கிறார்களோ அவர்களுக்கு (அது) நன்மையாகும்.
இன்னும் எவர்கள் அவனை ஏற்கவில்லையோ அவர்களுக்கு நிச்சயமாக இப்பூமியிலுள்ளவை அனைத்தும் இன்னும் அத்துடன் அதுபோன்று இன்னொரு மடங்கும் தமக்கு இருந்தாலும் அவைகளை ஈட்டுத் தொகையாகக் கொடு(த்து வேதனை யிலிருந்து தப்பி )க்க எண்ணுவார்கள்.
(அவர்கள் எண்ணம் நிறைவேறாது.) அவர்களுக்குக் கொடிய கேள்வி கணக்கு விசாரணையும் உண்டு. மேலும், அவர்கள் ஒதுங்கும் இடம் நரகமாகும்.தங்குமிடத்தில் அது மிகக் கெட்டதும் ஆகும்"(குர்ஆன் 13 :18)
(ஒரு மொடக்கு நீருக்கு உண்டான சிறு நீருக்கும் ஈடாகாத அரசாங்கம் )
ஷகீக் பல்கி (ரஹ்) 'ஹுஜ்ஜுச் செய்துவிட்டு பகுதாது திரும்பிய பொழுது கலீபா ஹாரூன் அல்ரஷீது இவர்களை அரண்மனைக்கு அழைத்துவரச் செய்தார்.
கலீபா ஹாரூன் அல்ரஷீதுவின் முன் வந்த பொழுது இவர்களை நோக்கி, "தாங்கள் தாமா துறவி ஷகீக்?"
"ஆம்; நான் தான் ஷகீக். ஆனால் நான் துறவியல்ல"
அதன்பின் தமக்கு அறிவுரை வழங்குமாறு கலீபா ஹாரூன் அல்ரஷீத் வேண்ட, "அப்படியா! அறிவுரை வழங்குகின்றேன். கேளுங்கள்.
"தாங்கள் பாலையின் நடுவே தாகவிடாயால் துன்புற்று இறக்கும் நிலையில் ஆகிவிட்டீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுது தங்களுக்கு ஒரு முடக்குத் தண்ணீர் கிடைப்பின் அதற்குத் தாங்கள் எவ்வளவு பணம் வழங்குவீர்கள் ?'' என்று வினவினர்.
''அம்முடக்குத் தண்ணீரை எனக்கு வழங்கும் மனிதன் என்னிடம் என்ன கேட்கிறானோ அதனை நான் அவனுக்கு வழங்குவேன்" என்று பதிலிறுத்தனர் கலீபா.
"அவன் அதற்கு ஈடாக தங்களின் அரசாங்கத்தில் பாதியை வேண்டின் தாங்கள் என்ன செய்வீர்கள் ?"
'அதனை நான் அவனுக்கு உடனே வழங்குவேன்'' ..
''நல்லது; தாங்கள் அத்தண்ணீரை அருந்துகின்றீர்கள். அது தங்களுக்கு ஒத்துக் கொள்ளாததால், தங்களுக்குச் சிறுநீர் வருவது நின்று
விடுகிறது. எனவே தாங்கள் இறக்கும் நிலையில் ஆகி விட்டீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள்.
அப்பொழுது ஒருவன் தங்களிடம் வந்து, "நான் தங்களுக்குச் சிகிச்சை அளிக்கின்றேன். அதற்கு ஈடாக தாங்கள் எனக்குத் தங்களின் அரசாங்கத்தில் பாதியைத் தரவேண்டும்' என்று கூறின் தாங்கள் என்ன செய்வீர்கள் ?"
"அதனை நான் அவனுக்கு உடனே வழங்குவேன்"
"அவ்விதமாயின் தாங்கள் அருந்தும் ஒரு முடக்குத் தண்ணீருக்கு நிகராகவும், ஈடாகவும் சிறுநீராக வெளிவராத ஒரு முடக்குத் தண்ணீருக்கு நிகராகவும் ஈடாகவும் உள்ள தங்களின் மாபெரும் அரசாங்கத்தைப் பற்றித் தாங்கள் ஏன் பெருமையுறுகிறீர்கள் ?"
இவ்வாறு ஷகீக் பல்கி (ரஹ்) அவர்கள் கூறியதும் கலீபாவின் கண்களிலிருந்து நீர் தாரைதாரையாக வழிந்தோடியது. அவ்வான்றோருக்கு அளவற்ற மரியாதை செய்து அவர்களை அன்போடு அனுப்பி வைத்தனர் கலீபா.



தங்களுடைய இரட்சகனின் கட்டளைக்குச் சிரம் பணிந்து அப்படியே ஏற்றுக் கொள்கிறவர்கள் உண்மை விசுவாசிகள். அவர்களுக்கு அவர்களுடைய இரட்சகனிடமிருந்து அளவற்ற நற்கூலிகள் கிடைக்கும். அவை என்றைக்கும் அழிந்து போகாது. அத்தனை பெரிய நன்மை அவர்களுக்கு உண்டு.
இவர்களுக்கு நேர்மாறானவர்கள் தங்களுடைய இரட்சகனை ஏற்காதவர்கள். அவனுடைய கட்டளைகளைப் புறக்கணிக்கிறவர்கள். அவர்களுக்கு மறுமையில் கொடிய தண்டனை உண்டு.

அதிலிருந்து தப்புவதற்கு இப்பூமியிலுள்ளவை அனைத்தும், அதைப் போன்று இன்னுமொரு பூமியின் பங்கும் இருந்தாலும் அவற்றை ஈட்டுத் தொகையாகக் கொடுக்க எண்ணுவார்கள். ஆனால் எந்தப் பயனும் இல்லை. அவர்களிடம் அப்பொழுது எந்தப் பொருளும் இருக்காது. ஈட்டுத் தொகை கொடுக்கும் பிரச்சினையும் எழாது. அவர்கள் மிகக் கடினமான முறையில் விசாரிக்கப்படுவார்கள். அதுதான் கொடிய கேள்வி கணக்கு. அதிலிருந்து அவர்கள் எந்தக் யுக்தியாலும் தப்ப முடியாது. அவர்கள் ஒதுங்குமிடம் நரகமேயாகும். அது சுகமான இடமல்ல. தங்குமிடத்தில் அது மிகக்கெட்டது. அதிலிருந்து எவ்வகையிலும் அவர்கள் தங்களை விடுவித்துக் கொள்ள முடியாது என்பது இவ்வசனத்தின் கருத்தாகும்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 62**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 26**




اَفَمَنْ يَّعْلَمُ اَنَّمَاۤ اُنْزِلَ اِلَيْكَ مِنْ رَّبِّكَ الْحَـقُّ كَمَنْ هُوَ اَعْمٰى اِنَّمَا يَتَذَكَّرُ اُولُوا الْاَلْبَابِۙ
உம் இறைவனால் உம் மீது நிச்சயமாக இறக்கப்பட்ட (வேதத்)தை உண்மையென அறிகிறவர் குருடராக இருப்பவரைப் போலாவாரா? நிச்சயமாக (இவ்வேதத்தின் மூலம்) அறிவுடையவர்கள் தாம் நல்லுபதேசம் பெறுவார்கள். (குர்ஆன் : 13:19)
இந்த வசனத்தில் உயர்ந்தோன் அல்லாஹ் வேதத்தின் உண்மையை அறிந்தவரும் அதை அறியாத கருத்துக் குருடரும் சமமாக முடியாது என்று தெரிவிக்கின்றான்.
"முஹம்மதே ! உம்முடைய இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பெற்ற வேதமானது உண்மைதான் என்று அறிகின்றவரும் அதை அறியாதவரும் சமமாகமாட்டர்" என்று இங்கு உயர்ந்தோன் அல்லாஹ் கூறுகின்றான். அந்த வேதத்தில் எந்தச் சந்தேகமோ ஐயமோ கிடையாது. அது முழுக்க முழுக்க உண்மையாகும். அதில் ஒரு பகுதி மற்றொரு பகுதியை மெய்ப்பிக்கிறது. அது எடுத்துரைக்கும் செய்திகள் அனைத்தும் சத்தியம் அதன் கட்டளைகளும் தடைகளும் நீதியானவை.
இந்த உண்மைகளை எல்லாம் உறுதியாக நம்பக்கூடியவரும், நல்வழி அடைய முடியாத. அதை விளங்கிக் கொள்ளாத, விளங்கினாலும் அதை ஏற்றுப் பின்பற்றி ஒழுகாத குருடரும் சமமாக முடியாது.

திருக்குர்ஆன் வேதத்தை அறிந்தவர் பார்வையுடையவராகவும், அதை அறியாதவர் குருடர் என்பதாக இறைவன் கூறும் இந்த இறை வசனத்தை திருவள்ளுவர் கல்வி கற்றோர், கல்லாதவர் இருவருக்கும் உவமானமாக கூறுகிறார் .
கண் உடையர் என்பவர் கற்றோர் முகத்து இரண்டு
புண் உடையர் கல்லாதவர். (குறள் எண்: 393)
"கல்லாதவர் - கண்ணிருந்தும் குருடர்கள்! கல்வி கற்பவனைக் கண் உடையவன் என்கிறார் வள்ளுவர் கல்லாதவன் முகத்தில் கண் உடையவனாக இருந்தாலும், அவைகள்
புண்கள். எனவே அவன் முகத்தில் புண் உடையவன் என்கிறார்.
கண்ணுக்கு ஒளி என்றும் ஒரு பொருள் உண்டு .
கண் உயிரின் ஒளி. கல்வி உணர்வின் ஒளி.
கல்வியாகிய கண் வாழ்க்கைக்கு ஒளிதரக் கூடியது.
ஆனால் புண் ? துன்பம் தரும். உரிய நேரத்தில் புண்ணைக் குணப்படுத்தாவிட்டால், கண்ணின் பார்வையையே இழந்து விடுவோம்.
கூகைக்குப் (Owl) பகலில் கண் தெரியாது. இரவில் தெரியும். காகத்திற்கு இரவில் கண் தெரியாது பகலில் தெரியும்.
ஆனால் முகத்தில் இரண்டு கண்களை உடைய கல்லாதவனுக்கு இரவிலும் பகலிலும் ஒன்றும் தெரியாது என்கிறார் வள்ளுவர்.

புண் நிரந்தரத் தன்மை உடையது அல்ல. குணப்படுத்தக் கூடியது. கல்லாமையும் தற்காலிகமானது. கல்வியைக் கற்று, கல்லாமையைப் போக்கலாம். எனவே, இனியும் கல்வி கற்காமல் நாள்களை வீணாக்காதீர்கள் என்று வேண்டுகிறார் வள்ளுவர்.
மேலும் கல்வி கற்பதற்கு, கால எல்லையோ, வயது வரம்போ கிடையாது. எந்த வயதிலும், எந்த நேரத்திலும் கல்வியைக கற்கலாம் என்பதையும் வள்ளுவர் உணர்த்துகிறார்.
கண்ணையும் புண்ணையும் கல்வியோடு ஒப்பிட்டுக் கூறியிருப்பது
மிகவும் யதார்த்தத் தன்மையுடன் அமைந்துள்ளது! இல்லையா? எவ்வளவு முக்கியமான கருத்து இது? கல்லாதவர் நிலையை இதை விட எளிமையாகக் கூற முடியுமா?"

**Rahmath Rajakumaran**

குருடர்கள் எவ்வளவு?
ஒரு நாள், மன்னர் அக்பர் ஒரு ஐயத்தை எழுப்பினார்."உலகத்தில் குருடர்கள் எவ்வளவு?"
இந்த குருடர்கள் தொகை வினாவுக்குச் சபையிலிருந்தவர்களுள் பெரும் பகுதியினர், உலத்தில் குருடர்களின் தொகை எவ்வளவு என்பதைத் துல்லியமாகக் கூறுவது கடினம். ஆனால், கண் பார்வை உள்ளவர்களை விட கண்பார்வையற்றவர்கள் தொகை மிகமிகக் குறைவாகத்தான் இருக்கும் என்னும் கருத்தைத் தெரிவித்தனர்.
அக்பர், "பீர்பால் ! உம் கருத்து என்ன?" எனக் கேட்டார்.
பீர்பல் எழுந்து, "மன்னர் பெருமானே ! இப்போது இங்கு சொல்லப்பட்ட கருத்தே குருட்டுத்தனமானதாகும். உலகத்தில் கண்பார்வையற்ற குருட்டுகளின் தொகைதான் மிகமிக அதிகம் குறிப்பாகச் சொல்வதானால், இந்த உலகத்தில் பெரும்பகுதியினர் குருடர்கள்தாம்" என்றார்.
"பீர்பால்! உமது கருத்து விநோதமாய் இருக்கிறதே ! உம் கருத்துப்படி இந்தச் சபையில் இருப்பவர்களுள் பெரும் பகுதியினர் குருடர்கள் தாம் என்று கூறுவீர் போலிருக்கிறதே?" என்றார் அக்பர்.
"அதிலென்ன சந்தேகம்?" என்றார் பீர்பால்"அப்படியானால் நானும் ஒரு குருடானா?" என்றார் அக்பர்.
அதற்கு, "பொதுவாக ஒரு மனிதனை குருடன் என்று என்ன காரணத்தைக் கொண்டு கூறுகிறோம்?" என்று வினா எழுப்பினார் பீர்பால்
"ஒரு பொருளை, அது இன்ன பொருள்தான் என்று சரியாக அடையாளம் கண்டு கொள்ள முடியாதவனைப் பொதுவாகக் குருடன் என்று கூறுகிறோம் என அக்பர் மறுமொழி சொன்னார்.
"இப்போது ஒரு சோதனை செய்து பார்ப்போம் "என்று கூறினார் பீர்பால்.
பிறகு ஒரு துணியை எடுத்து,"மன்னர் அவர்களே ! இது என்ன?" என்று கேட்டார்.
"அது ஒரு துண்டுத் துணி!" என்றார் மன்னர் பீர்பால்,
அதே துணியைத் தமது தலையில் ஒழுங்காகச் சுற்றிக் கட்டிக்கொண்டு, "இது என்ன ?" என்று கேட்டார்."அது ஒரு தலைப்பாகை !" என்றார் மன்னர்.
பீர்பால் அதே துணியைக் கழுத்தில் தொங்க விட்டுக்கொண்டு, இப்போது இது என்ன?" என்றார்."அது கழுத்துக்குட்டை அல்லது சவுக்கம்" என்றார் அக்பர்
பீர்பால், கழுத்துத் துணியை எடுத்து இடுப்பில் சுற்றிக் கட்டிக் கொண்டார். "இப்போது இது என்ன துணி" என்றார் பீர்பால்
"இப்போது அது லுங்கி அல்லது வேஷ்டி என்று கூறலாம்" என கூறினார்.
பீர்பால் அக்பரை நோக்கிப் பணிவான குரலில், " மன்னர் பெருமானே! என் கையில் இருக்கும் இந்தத் துண்டுத் துணியைப் பற்றி உங்களால் ஒரே மாதிரியான கருத்தைக் கூற முடியவில்லை. கண்களால் இதனை நன்றாகப் பார்த்துக் ஒரு பொருளைப் கொண்டிருக்கும் போதே, பலவிதமான கருத்துக்களைக் கூறினீர்கள். ஒரு குருடனின் நிலையும் இதுதானே. தனக்கு பார்வையில்லாத காரணத்தால், ஒரு பொருளைப் பற்றித் தெளிவான கருத்தை அவனால் கூற முடியவில்லை. இப்போது தங்கள் நிலையும் அதுவாகத்தானே இருக்கிறது ? பார்வையுள்ளவர்கள் என்று கர்வப்பட்டுக் கொண்டிருப்பவர்கள் என்னையும் சேர்த்துத்தான் கூறுகிறேன். கண் இருந்தும் குருடர்களாத்தான் இருக்கிறோம். இந்தக் கண்ணோட்டப்படி பார்த்தால், குருடர்களை விடக் கண் பார்வையுள்ள குருடர்களின் தொகை மிகவும் அதிகம் என்று நாம் கருதலாமல்லவா?" கூறினார்.
ஆழ்ந்த சிந்தனை வளத்துடன் கூடிய, உண்மைகள் நிறைந்த பீர்பாலின் அந்தச் சொற்களைக் கேட்டு, மன்னர் மிகவும் பாராட்டினார்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 63**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 27**




الَّذِيْنَ يُوْفُوْنَ بِعَهْدِ اللّٰهِ وَلَا يَنْقُضُوْنَ الْمِيْثَاقَ
( நற்பண்புகளையும் இறையச்சத்தையும் கொண்ட அறிவுள்ள ) அவர்கள் எத்தகையோரென்றால் அல்லாஹ்விடம் செய்த வாக்குறுதியை முழுமையாக நிறைவேற்றுவார்கள்; இன்னும் (தாம் செய்த) உடன்படிக்கையை முறித்து விடவும் மாட்டார்கள். (குர்ஆன் : 13:20)
மனிதன் வாக்குறுதிகளை வழங்கக்கூடியவனாவான். அந்த வாக்குறுதிகள் பல்வேறு விதமானவை. ஆனால் வாக்குறுதி வழங்கினால் அதனை நிறைவேற்ற வேண்டும். இது தொடர்பில் அல் குர்ஆன் தெளிவாக எடுத்துக்கூறியுள்ளது.

அதாவது நிறைவேற்ற முடியுமான விடயங்களை மாத்திரம் வாக்குறுதிகளாக வழங்குமாறு அல் குர்ஆன் வலியுறுத்தியுள்ளது. நிறைவேற்ற முடியாத வாக்குறுதியை பெருமைக்காக நிறைவேற்றுவதாக வழங்கக்கூடாது. அவ்வாறான வாக்குறுதிகள் அல்லாஹ்வை கோபமடையச் செய்யும் எனவும் அல் குர்ஆன் குறிப்பிட்டுள்ளது.
இஸ்லாம் மனிதன் நல்லொழுக்கங்களுடன் வாழத் தேவையான, ஒழுக்கம் சார்ந்த அம்சங்களை போதனை செய்யத் தவறியதில்லை. ஒரு மனிதன் நன்நடத்தைகளுக்குச் சொந்தமானவன்
என்பதற்குப் பல பண்புகள் சான்றுகளாக இருந்தாலும், அனைத்திற்கும் முதன்மையானது அளிக்கும் வாக்குறுதிகளை நிறைவேற்றுவதாகும்.
'கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றா மனிதன் நிறை மனிதனல்ல' என்பதுதான் இஸ்லாத்தின் நிலைப்பாடு.
வாக்குறுதிகளை முழுமைப்படுத்துவது இறை நம்பிக்கையாளரின் அடையாளங்களில் ஒன்றாக அல் குர்ஆன் எடுத்தியம்பியுள்ளது.
'முஃமின்களே! (நீங்கள் செய்து கொண்ட) உடன்படிக்கைகளை (முழுமையாக) நிறைவேற்றுங்கள். குர்ஆன் (5:1) என்று குறிப்பிட்டுள்ளது.
....உங்கள் வாக்குறுதியை நீங்கள் பரிபூரணமாக நிறைவேற்றுங்கள். ஏனென்றால், (மறுமையில்) வாக்குறுதியைப் பற்றி (உங்களிடம்) நிச்சயமாகக் கேட்கப்படும். (குர்அன் 17:34)
இன்றைய காலகட்டத்தில் பல முஸ்லிம்கள் செய்து கொண்டிருப்பது போல ஒப்பந்தம், வாக்குறுதி என்பது காற்றில் பறக்கவிடப்படும் வார்த்தையல்ல. அல்லாஹ்விடம் விசாரணை செய்யப்படும் மிகப்பெரிய பொறுப்பாகும்.
" நீங்கள் அல்லாஹ்வின் பெயரால் செய்யும் உடன்படிக்கையைப் பரிபூரணமாக நிறைவேற்றுங்கள்" (குர்அன் 16:91)

இவ்விடத்தில் மனிதர்களிடம் செய்யப்படும் உடன்படிக்கையை அல்லாஹ்வுடன் செய்யப்படும் உடன்படிக்கையைப் போன்று கூறப்பட்டுள்ளது. அதற்கு காரணம் உடன்படிக்கையின் முக்கியத்துவத்தையும், அதன் கண்ணியத்தையும், அது நிறைவேற்றப்பட வேண்டிய ஒன்று என்பதையும் வலியுறுத்துவதேயாகும்.
அதனால் வாக்குறுதிகளை வழங்கிவிட்டு அதனை அலட்சியம் செய்வது இறை நம்பிக்கைக்குச் சேதம் ஏற்படுத்தும் செயலாகவே இஸ்லாம் பார்க்கிறது.
ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள், "எவரிடம் நம்பி ஒப்படைக்கப்பட்டதை நிறைவேற்றும் தன்மை இல்லையோ, அவரிடம் இறை நம்பிக்கை இல்லை. எவரிடம் கொடுத்த வாக்கை நிறைவேற்றும் தன்மை இல்லையோ அவரிடம் இஸ்லாம் இல்லை' என்று கூறினார்கள்".
(நூல் ஆதாரம்: அஹ்மது)
அதேநேரம் கொடுத்த வாக்குறுதிகளை மீறுவது நயவஞ்சகனின் குணங்களில் ஒன்று எனவும் நபிமொழியொன்று சுட்டிக்காட்டியுள்ளது. நயவஞ்சகனிடம் மூன்று அடையாளங்கள் காணப்படும். அவற்றில்

ஒன்று ‘பேசினால் பொய்யுரைப்பான்’. மற்றையது ‘வாக்களித்தால் மாறு செய்வான்’. மூன்றாவது அடையாளம் ‘நம்பினால் மோசடி செய்வான்’ என்பனவாகும். (ஆதாரம்-: நபிமொழி)
நம்பிக்கையின் மறு பிரதிபலிப்பே வாக்குறுதிகள். அவற்றை நிறைவேற்றாமல் கடந்து செல்வது மனிதனுக்குச் செய்ய வேண்டிய உரிமைகளை மீறுவதாக அமையும். ஆனால் மறுமையில் இதற்கான கேள்விகளுக்குப் பதில் கூற வேண்டிய நிலை ஏற்படும். வாக்குறுதிகளை நிறைவேற்றாமல் இருப்பதும் அநியாயம் என்கிறது இஸ்லாம்.
தொழுகை, நோன்பு, ஸக்காத், ஹஜ் இவைகளை முறையாகச் செய்துவந்து, கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றத் தவறினால், செய்த நற்செயல்கள் அனைத்தும் வீணாகிவிடும். அதனால் தான் அல் குர்ஆன் நிறைவேற்ற இயலுமான காரியங்களை மாத்திரம் வாக்குறுதிகளாக வழங்குமாறு வலியுறுத்துகிறது.

‘ஈமான் கொண்டவர்களே! நீங்கள் செய்யாததை ஏன் சொல்கிறீர்கள்?. நீங்கள் செய்யாததை நீங்கள் கூறுவது அல்லாஹ்விடம் பெரிதும் வெறுப்புடையதாக இருக்கிறது. (குர்ஆன்- 61:2-3)
வாக்குறுதிகளை நிறைவேற்றுவது இறைவனின் பண்பாகும். அவனது இறைத்தூதர்களின் பண்புகளில் அதுவும் ஒன்று. இஸ்மாயீல் (அலை) அவர்களின் நற்பண்புகள் குறித்து இறைவன் பேசுகையில் ‘அவர் வாக்கை காப்பாற்றுபவர்’ என்றும் குறிப்பிடுகின்றான்.
‘(நபியே…) இஸ்மாயீலைப் பற்றியும் இவ்வேதத்தில் (உள்ளதைக்) குறிப்பிடுவீராக…. திண்ணமாக, அவர் வாக்குறுதியை முழுமையாக நிறைவேற்றுபவராகவும், தூதராகவும், நபியாகவும் இருந்தார்’.
(குர்ஆன் 19:54)
ஆகவே வாக்குறுதிகளை நிறைவேற்றுதல் என்பது மற்றவர்களுக்கு நம்மைப் பண்பாளர் என்பதை அறிமுகம் செய்கிறது. மேலும் நம் மீது நமக்கே தன்னம்பிக்கை ஏற்படுகிறது என்பதாக உளவியல் கூறுகிறது. இதனை கருத்தில் கொண்டு வாக்குறுதிகளை நிறைவேற்றும் பண்புகளை நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும். அது இஸ்லாம் விரும்பும் அறங்களில் ஒன்றாகும்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 64
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி - 28.



وَالَّذِيْنَ يَصِلُوْنَ مَاۤ اَمَرَ اللّٰهُ بِهٖۤ اَنْ يُّوْصَلَ وَيَخْشَوْنَ رَبَّهُمْ وَ يَخَافُوْنَ سُوْٓءَ الْحِسَابِ
மேலும், அவர்கள் எத்தகையோரென்றால் அல்லாஹ் எ(ந்த உறவு முறையான)து சேர்க்கப்பட வேண்டும் எனக் கட்டளையிட்டானோ, அதை அவர்கள் சேர்த்துக் கொள்வார்கள். இன்னும் அவர்கள் தம் இறைவனுக்கு அஞ்சுவார்கள்; மேலும் (மறுமை நாளின்) கடுமையான கேள்வி கணக்கைக் குறித்தும் பயப்படுவார்கள்.
(குர்ஆன் : 13:21)
وَالَّذِيْنَ يَصِلُوْنَ مَاۤ اَمَرَ اللّٰهُ بِهٖۤ اَنْ يُّوْصَلَ
"இன்னும் எது சேர்க்கப்பட வேண்டுமென அல்லாஹ் ஏவினானோ அதனைச் சேர்ப்பவர்கள்" - இவ்வசனம் "ஸிலா ரஹ்ம்" என்னும் உறவினர்களை அரவணைக்கப்படுதலைக் குறிக்கிறது.
உறவினர்களை ஆதரிக்காமல் முறித்து விடுவது ஹராமாகும். அவர்களை அரவணைத்துச் சேர்த்துக் கொள்வது வாஜிபாகும்.

உறவினர்களைச் சந்தித்தல், அவர்களுக்கு அன்பளிப்புக் கொடுத்தல், சொல்லாலும், செயலாலும் உதவி புரிதல், அவர்களை நன்மை தீமையான காரியங்களில் மறக்காதிருத்தல் முதலியவை அவசியமாகும்.

குறைந்த பட்சம் அவர்களுக்கு ஸலாமேனும் கூற வேண்டும். வெளியிடங்களில் இருந்தால், அவர்களை சந்திப்பவர்களிடம் ஸலாம் சொல்லி அவர்களுக்கு அனுப்ப வேண்டும். கடிதம் எழுத வேண்டும். இவை போன்ற நாட்டு வழக்கப்படி இதர காரியங்களையும் செய்ய வேண்டும்.
இவ்வாறான முறையில் உறவினர்களை ஆதரிப்பது செல்வம் அதிகமாகுவதற்கும், வயது நீளமாவதற்கும் காரணமாக இருக்கிறது. இது உளவியல் ரீதியில் நிரூபிக்கப்பட்ட உண்மை.
பெற்றோர்களை நோவினை செய்பவர்களுக்கு இவ்விரண்டும் குறைந்து விடும். அதிலும் இப்பயன் வெகு துரிதமாகவே ஏற்படும்.
இதுபோல உறவினர்களை ஆதரிப்பவர்களுக்குச் செல்வமும் வயதும் பெருகுவதும் வெகு துரிதம்.
உறவினர்களைத் துறந்தவர் இருக்கிற கூட்டத்தில் ரஹ்மத் என்னும் கருணையுள்ள மலக்குகள் வரமாட்டார்கள்.

மேலும் மூமின்களுடன ஒத்துழைத்தல் என்பதாக சிலர் கூறியிருக்கிறார்கள் சகோதர முஸ்லிம்களையும், ஸாலிஹான பெரியோர்களையும், அயலகத்தார்களையும், உறவினர்களையும் தரிசிப்பதும், மரியாதை செய்வதும், உதவி செய்வதும், அரவணைப்பது பலமான முஸ்தஹப்பாகும்.
அவரவரது நிலைக்குத் தக்கவாறு இவற்றை நிறைவேற்றல் வேண்டும். இவர்கள் அதிருப்தியடையாத முறையில் இவர்களைச் சந்திக்க வேண்டும்.
நோயாளிகளை விசாரிக்கச் சென்றால், நோயாளி விரும்பினாலன்றி அல்லாது அதிக நேரம் தாமதித் இருக்கலாகாது. இவர்களைச் சந்திக்கும் போது மலர்ந்த முகத்துடன் அவர்களிடம் கை கொடுத்து முஸாஃபஹா செய்ய வேண்டும். அவர்களுடைய பாவ மன்னிப்புக்காக இறைவனைப் பிரார்த்திக் வேண்டும்.
மேலும் பொது மக்களது உரிமைகளைப் பேணி நடந்து கொள்ளல். கோழியாக இருந்தாலும் சரி பூனையாக இருந்தாலும் சகல ஜீவராசிகளிடமும் காருண்யமாக நடந்து கொள்ளல் வேண்டும்.
ஹளரத் ஃபுளைலுப்னு இயாள் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் திருமக்காவிலிருந்த பொழுது ஒரு கூட்டத்தினர் அவரைச் சந்திக்க வந்தனர்.

“நீங்கள் எங்கு இருக்கிறவர்கள் ? " என அந்த மனிதர்களை ஹளரத் ஃபுளைலுப்னு இயாள் அவர்களிடம் விசாரித்த போது அவர்கள் குராஸானிலிருந்து வருவதாகக் கூறினார்கள்.
அவர்களுக்கு ஹளரத் ஃபுளைலுப்னு இயாள் அவர்கள் "அல்லாஹு தஆலாவை நீங்கள் பயப்பட வேண்டும். நீங்கள் விரும்பிய இடத்தில் தாமதியுங்கள். ஒரு அடியான் சகல விதமான உதவிகளைச் செய்த போதிலும், அவனுக்கு ஒரு கோழி இருந்து அதற்குத் தீமை செய்தால் அவன் முஹ்ஸின்களைச் சேர்ந்தவனல்ல என்பதை அறிந்து கொள்ளுங்கள்” என்பதாக உபதேசம் செய்தார்கள்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 65
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 29



وَالَّذِيْنَ صَبَرُوا ابْتِغَآءَ وَجْهِ رَبِّهِمْ وَاَقَامُوا الصَّلٰوةَ وَاَنْفَقُوْا مِمَّا رَزَقْنٰهُمْ سِرًّا وَّ عَلَانِيَةً وَّيَدْرَءُوْنَ بِالْحَسَنَةِ السَّيِّئَةَ اُولٰٓٮِٕكَ لَهُمْ عُقْبَى الدَّارِۙ
இன்னும், அவர்கள் எத்தகையோரென்றால் தங்கள் இறைவனின் திருமுகத்தைத் தேடி, பொறுமையைக் கடைப்பிடிப்பார்கள்; தொழுகையையும் நிலைநிறுத்துவார்கள்; நாம் அவர்களுக்கு அளித்ததிலிருந்து இரகசியமாகவும், பகிரங்கமாகவும் (நன்முறையில்) செலவு செய்வார்கள்; நன்மையைக் கொண்டே

தீமையைத் தடுத்துக் கொள்வார்கள். இத்தகையோருக்கே மறுமையில் (சுவனபதி யென்னும்) நல்ல வீடு இருக்கிறது.(குர்ஆன் : 13:22)
"பொறுமை (Patience) என்பது துன்பம் ஏற்படும்போது உணர்ச்சி வயப்படாமலும், கோபம் கொள்ளாமலும் இருக்கும் மனநிலை ஆகும்.
மற்றவர் இகழும் போதும், நீண்ட தாமதங்கள் ஏற்படும் போதும், பிரச்சனைகள் ஏற்படும் போதும், தொடர்துன்பங்கள் வரும் போதும், சில அசாதரண சூழ்நிலைகளிலும் அமைதியாக இருக்கும் குணம் ஆகும்.
இந்த குணம் பல்வேறு உடல் நோய்களில் இருந்தும், மன நோய்களில் இருந்தும் பாதுகாப்பதாக கருதப்படுகிறது.

பொறுமையைப் பற்றி அறிவியல் பார்வை :-
பரிணாம உளவியலிலும் அறிவாற்றல் நரம்பு அறிவியலிலும் பொறுமையைப் பற்றி ஆய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன.
மனிதனும் விலங்குகளும் கொண்டிருக்கும் முடிவு செய்யும் திறமையைப் பற்றி ஆராய்ந்த போது, சிறிது நேரம் காத்திருந்தால் சிறிய நன்மை அடையலாம் என்றும், நீண்ட காலம் காத்திருந்தால் பெரிய நன்மைகளை அடையலாம் என்றும் இரண்டு விருப்பத் தேர்வைக் கொடுக்கும் போது, சிறிது நேரம் காத்திருந்து சிறிய நன்மை என்பதையே பெரும்பாலும் தேர்வு செய்கிறார்கள்.
இதை ஆன்மிகத்தில் சிற்றின்பம் என்றும் பேரின்பம் என்றும் விளக்குகிறார்கள். "
மேற்கண்ட குர்ஆன் வசனத்தில் இறைவனின் திருமுகம் என்றால் திருவுளப் பொருத்தம் அல்லது "அவனுக்காக" என்பது கருத்தாகும்.
உங்களுடைய திருப்திக்காக அல்லது உங்களுடைய முகத்திற்காக எனக்கூறுவது உண்டு.
அக்கருத்தின்படியே இறைவனின் (வஜ்ஹு) முகம் என இங்கு கூறப்படுகிறது
அறிந்து கொள்:- பொறுமைக்குரிய காரியங்கள் ஏராளமாக இருக்கின்றன. பார்வையை இழந்து விட்டாலும் பொறுமையாகவே இருக்க வேண்டும்.

அல்ஹதீஸுல் குத்ஸிய்யி:- "என்னுடைய அடியானை அவனது இரு பிரியமானவற்றைக் கொண்டு நான் சோதித்து அல்லாஹுதஆலாவின் கற்பனையைப் பொருந்தி, அச்சோதனையில் அவன் பொறுமையுடன் இருப்பானாயின் அவ்விரண்டுக்கும் சுவர்க்கத்தை நான் பகரமாக்குவேன்" என்று ஹதீஸ் குதுஸியில் கூறப்பட்டிருக்கிறது.
மனிதனுக்கு மிகப் பிரியமானது அவனது இரு கண்கள்தான், ஆதலால், கண்களுக்கு அரபியர் 'பிரியமானது' என்ற அழைக்கிறார்கள், கியாமத்து நாளில் அல்லாஹு தஆலாவை: பார்ப்பவர்களில் குருடர்கள்தாம் முதன்மையானவர்கள்.
ஹளரத் அப்துல்லாஹிப்னுல் முபாரக் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடம், ஹளரத் ஷக்கீக்குப்னு இப்ராஹீமில் பல்கீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கேட்டார்கள்.
"எங்கிருந்து வருகிறீர்கள்?"
"பலக் நகரிலிருந்து"
அப்பொழுதவர் "ஷக்கீக்கை நீர் அறிவீரா?"
"ஆம், அறிவேன்" என்றார்.
"அவரது தோழர்களது தரீகத் என்னும் வழி என்ன?"
"அவர்கள் தரித்திரம் அடையும்போது பொறுமையுடன் இருப்பார்கள் சுபிட்சமடையும் போது நன்றி செலுத்துவார்கள்"
அதற்கவர் "எங்களது நாய்களும் கூட அப்படித்தான்"
“அவ்வாறாயின் காரியம் எவ்வாறு இருக்க வேண்டும்?"
"பரிபூரணநிலையை அடைந்தவர்களான காமில்கள் தரித்திரப்படும் போது நன்றி செலுத்துவார்கள். சுபிட்சத்தை அடையும் போது தியாகம் செய்வார்கள்" என்று கூறினார்.
இந்த ஆயத்தில் இறைவன் "நாம் அளித்தோம்" என்று, அடியார்களுக்குக் கிடைக்கும் செல்வத்தை தானே அளிப்பதாகவும், "அவர்கள் செலவு செய்தார்கள்" என்று செலவு செய்வதை அடியார்கள்பால் சேர்த்தும் கூறியுள்ளான்.

இதிலிருந்து அடியார்களிலுள்ள செல்வந்தர்கள் தங்கள் சொத்துக்கு சுயமான எஜமானர்களல்ல என்றும், அல்லாஹுதஆலாதான் சுயமான எஜமான் என்றும், அடியார்கள் அதனைச் செலவு செய்வதற்கு அவனது பிரதிநிதிகள் என்றும் தெரிய வருகிறது.
எனவே, செல்வத்தைச் செலவு செய்ய செல்வந்தர்கள், இறைவனது பிரதிநிதிகளாக இருக்கின்றனர். ஆதலின், இறைவனது உத்தரவுப்படி அவற்றை செவ்வையாக செலவு செய்ய அவர்கள் கடமைப்பட்டவர்களே தவிர, தங்கள் சுய விருப்பத்திற்கு அவற்றைச் செலவு செய்ய அவர்கள் உரிமை பெறவுமில்லை, மற்றைய சிருஷ்டிகளாகிய மனிதர்களைக் கவனிக்கவும் வேண்டியதுமில்லை.
ஆகவே, செல்வந்தர்கள் ஏழைகளுக்குச் செய்யும் உதவிக்கு அவர்கள் தங்களுக்கு நன்றி செலுத்த வேண்டுமென்றோ அல்லது தங்களை அவர்கள் புகழ வேண்டுமென்றோ விரும்பினால், அவர்கள் விபாபாரிகளே யன்றி,தர்மம் செய்பவர்களல்லர்.
ஏனெனில், ஏழைகளுக்குக் கொடுப்பதற்காக தங்களிடம் இறைவன் கொடுத்த செல்வங்களை புகழ் போன்றவற்றிற்குப் பதிலாக விற்பனை செய்பவர்களாகிறார்கள். எவ்விதப் பிரதிபலனையும் எதிர்பார்க்காமல் பொருளைக் கொடுப்பதுதான் தர்மமாகும்.

"நன்மையைக் கொண்டு, தீமையை விலக்குவார்கள் " என்பதற்கு தனக்குத் தீமை செய்தவருக்கும் நன்மையே செய்வார்கள். தனக்கு இல்லை என்றவர்களுக்கும் கொடுப்பார்கள். தனக்குத் துன்பம் இழைத்தவர்களை மன்னிப்பார்கள் என்பது கருத்து. தீமை செய்தவுடன் ஒரு நன்மையும் செய்து, அத்தீமையை அழித்து விடுவர் என்றும் கருத்துரைக்கப்படுகிறது.

'عُقْبَى الدَّارِ'

உக்பத் தார் (வீட்டின் முடிவு) என்பதற்கு சுவர்க்கம் என்பது கருத்து. நரகம் காஃபிர்களின் முடிவாகும்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 66**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 30**




جَنّٰتُ عَدْنٍ يَّدْخُلُوْنَهَا وَمَنْ صَلَحَ مِنْ اٰبَآٮِٕهِمْ وَاَزْوَاجِهِمْ وَذُرِّيّٰتِهِمْ وَالْمَلٰٓٮِٕكَةُ يَدْخُلُوْنَ عَلَيْهِمْ مِّنْ كُلِّ بَابٍ

நிலையான (அந்த) சுவனபதிகளில் இவர்களும், இவர்களுடைய தந்தையரில், இவர்களுடைய மனைவிமார்களில், இவர்கள் சந்ததியினரில் (சன்மார்க்கத்திற்கு) இசைந்து யார் நடந்தார்களோ அவர்களும் நுழைவார்கள்; மலக்குகள் ஒவ்வொரு வாயில் வழியாகவும் இவர்களிடம் வருவார்கள். (குர்ஆன் : 13:23)

سَلٰمٌ عَلَيْكُمْ بِمَا صَبَرْتُمْ فَنِعْمَ عُقْبَى الدَّارِ

“நீங்கள் பொறுமையைக் கடைப்பிடித்ததற்காக “ஸலாமுன் அலைக்கும்” (உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக!) உங்களுடைய இறுதி வீடு மிகவும் நல்லதாயிற்று!” (என்று கூறுவார்கள்.) (குர்ஆன் : 13:24)

عَدْنٍ

"அத்ன்" என்பதற்கு நிலைத்திருத்தல் என்பது பொருள். இங்கு நுழைபவர்கள் பின்னர் அதனைவிட்டு வெளியேற மாட்டார்கள். அங்கேயே நிலைத்திருப்பார்கள்.

சுரங்கங்களில் வெள்ளி, தங்கம், இரும்பு ஆகியவைகள் உறைந்திருப்பதால் இச்சுரங்கங்களுக்கு "மஃதன்" என்ற பெயர்.

எனவே, சுவர்க்கத்தில் உன்னதமானதும் இறைவனது தஜல்லி தோன்றுவதுமான இடத்திற்கு " அத்ன் " என்று பெயர்.

எஹ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறிய தாவது: 'அத்ன்' என்பது, சொர்க்கத்தில் உள்ள ஒரு நகரமாகும். அதில் இறைத் தூதர்களும் உயிர்த்தியாகிகளும் (ஷுஹதா) நல்வழி பெற்ற தலைவர்களும் இருப்பார்கள்.

அவர்களைச் சுற்றி சிறிது தொலைவில் மற்ற மனிதர்கள் இருப்பார்கள். அந்த நகரைச் சுற்றிலும் சோலைகள் நிறைந்திருக்கும்.
“நீங்கள் பொறுமையைக் கடைப்பிடித்ததற்காக “ஸலாமுன் அலைக்கும்”(உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக!) உங்களுடைய இறுதி வீடு மிகவும் நல்லதாயிற்று!”(என்று கூறுவார்கள்) (குர்ஆன் : 13:24)
நீங்கள் பொறுமையுடன் ஏற்றுக் கொண்டிருந்ததற்குப் பலனாக இருக்கு நீங்கள் ஈடேற்றம் பெறுவீர்களாக" என்று கூறப்படும்.
ஃபக்கீர்களான ஏழைகள், நபி ஸல் அலைஹி வஸல்லம் அவர்களிடம் தங்கள் பிரதிநிதியை அனுப்பி வைத்தனர்.

அப்பிரதிநிதி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து "அல்லாஹு தஆலாவின் தூதரே! நான் தங்களிடம் ஏழைகளது பிரதிநிதியாக வந்திருக்கிறேன்" என்றார்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "எனக்கு மிகவும் பிரியமான வர்க்கத்தினரிடமிருந்து வந்துள்ள உமக்கு வாழ்த்துக்கள்" என்று கூறி அவரை வரவேற்றார்கள்.
பின்னர் அத்தூதுவர் "அல்லாஹுதஆலாவின் தூதரே! செல்வந்தர்கள் எல்லா நன்மைகளையும் கொண்டு செல்கின்றனர். அவர்கள் ஹஜ்ஜு செய்கின்றனர்.எங்களால் அதற்கு இயலுவதில்லை. அவர்கள் தான தர்மஞ் செய்கின்றனர். எங்களால் அதற்கும் இயலுவதில்லை. அவர்கள் அடிமைகளை விடுதலை செய்கின்றனர். எங்களால் அதற்கும் இயலுவதில்லை. அவர்கள் நோயாளிகளானால் தங்களிலுள்ள சிறந்த சொத்தை அதற்காக அனுப்பி வைக்கின்றனர்" என்று ஏழைகள் தங்களிடம் தெரிவிக்குமாறு கூறுகிறார்கள்" என்றார்.
அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "அவர்களில் பொறுமையுடன் இருந்து இறைவனுக்காக அந்தரங்க சுத்தியாக இருந்தவர்களுக்கு செல்வந்தர்களுக்கு இல்லாத மூன்று கண்ணியங்கள் இருக்கின்றன" என்று என் சார்பாக ஏழைகளுக்குக் கூறுவீராக.

1. முதலாவது கண்ணியம்: சுவர்க்கத்தில் சிவந்த மாணிக்கத்தால் ஒரு மாளிகை இருக்கிறது. இவ்வுலகவாசிகள் விண்ணில் நட்சத்திரத்தைப் பார்ப்பதுபோல அம்மாளிகையை சுவர்க்கத்துவாசிகள் பார்ப்பார்கள், அம்மாளிகையில் ஃபக்கீரான நபி. ஃபக்கீரான ஷஹீது, ஃபக்கீரான மூமின் ஆகியவர்களைத் தவிர வேறு யாரும் நுழைய மாட்டார்கள்.

2. இரண்டாவது கண்ணியம்: பாதி நாளுக்கு அதாவது இவ்வுலகத்து ஐநூறு வருடங்களுக்கு முன்னதாகவே சுவர்க்கத்தில் செல்வந்தர்களுக்கு முந்தி ஏழைகள் நுழைந்து விடுவர்.

3. மூன்றாவது கண்ணியம்: ஏழை அந்தரங்க சுத்தியுடன் "சுப்ஹானல்லாஹி வல்ஹம்துலில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் (அல்லாஹ் தூயவன். இன்னும் எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே தகும். இன்னும் அல்லாஹ்வைத் தவிர (வேறு) நாயனில்லை. இன்னும் அல்லாஹ் மிகப் பெரியவன்) என்று கூறினால்,
இன்னும் இதைப் போன்றே செல்வந்தனும் கூறினால், இதனால் ஏழைக்குக் கிடைக்கும் சிறப்பை செல்வந்தன் அடைய மாட்டான். நன்மையும் இரட்டிக்கப்படும். அதனுடன் பத்தாயிரம் திர்ஹம்களை அச்செல்வந்தன் செலவு செய்த போதினும் சரியே. இவ்வாறுதான் நன்மையான காரியங்கள் யாவும்" என்றார்கள்.

அப்பிரதிநிதி திரும்பச் சென்று, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அளித்த பதிலை அவர்களுக்குத் தெரிவித்தார். அவர்கள் "நாயனே! இதனை நாங்கள் பொருந்திக் கொண்டோம்'' என்று கூறினார்கள் என்பதாக ஹளரத் அனஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் ரிவாயத்து செய்திருக்கிறார்கள்.
'இவர்களுக்குள்ள சுவர்க்கம் நல்லதாகி விட்டது என்பது கருத்து. அதாவது இவர்களுக்கு இறைவன் சுவர்க்கத்தை நிரந்தரமாக அளிப்பதாக வாக்களித்துள்ளான்.
இவர்களது மூதாதையரும், சந்ததியினரும், ஜோடிகளுமான இவர்களது குடும்பத்தாரில் மூமின்களாக இருப்பவர்கள் இவர்களைப் போல் சமமாக நற்செயல்களைப் புரியாமலிருந்தாலும், அவர்களையும் இவர்களுடன் சேர்த்து வைத்தல், இவர்களுக்கு நிரந்தரமான சுவர்க்கமிருப்பதாக இவர்களிடம் மலக்குகள் வந்து நற்செய்தி கூறல் ஆக காரியங்கள் இருப்பதால் இவர்களுக்குள்ள சுவர்க்கம் நல்லதாகி விட்டது.
"மலக்குகள் ஸலாம் சொல்வதை செவியேற்பதும் அவர்களைப் பார்ப்பதும் இவ்வுலகில் ஒலிமார்களுக்கு மட்டுந்தான்.
இதனைக் குறித்து இமாம் கஸ்ஸாலீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தங்களது அல்முகின்து மினல் ளளால் என்ற கிரந்தத்தில் சூஃபிகளது அகங்கள் சுத்தமாகவும், இருதயம் களங்கமற்ற தாகவும், இவ்வுலக சம்பவங்களை அவர்கள் அறுத்தும், பெருமை செல்வம் ஆகிய இவ்வுலக இன்பங்களை ஒதுக்கியும், அல்லாஹு தஆலாவின்பால் சொல்லாலும் செயலாலும், அறிவாலும் முன்னோக்கிச் செல்லல் ஆகிய காரணங்களால் மலக்குகளைத் தங்கள் விழிப்பிலேயே நேருக்கு நேராகப் பார்க்கின்றனர்.
ஆனால் மற்றவர்கள் ஆலமுல் மிதாலில் அதாவது கனவுலகில் அல்லது மறுமையில்தான் காண்பார்கள்" என்று எழுதியிருக்கிறார்கள்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 67**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 31**




بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

وَٱلَّذِينَ يَنقُضُونَ عَهْدَ ٱللَّهِ مِنۢ بَعْدِ مِيثَٰقِهِۦ وَيَقْطَعُونَ
مَآ أَمَرَ ٱللَّهُ بِهِۦٓ أَن يُوصَلَ وَيُفْسِدُونَ فِى ٱلْأَرْضِ أُو۟لَٰٓئِكَ لَهُمُ
ٱللَّعْنَةُ وَلَهُمْ سُوٓءُ ٱلدَّارِ ﴿٢٥﴾

وَالَّذِيْنَ يَنْقُضُوْنَ عَهْدَ اللّٰهِ مِنْ بَعْدِ مِيْثَاقِهٖ وَيَقْطَعُوْنَ مَاۤ اَمَرَ اللّٰهُ بِهٖۤ اَنْ يُّوْصَلَ وَيُفْسِدُوْنَ فِى الْاَرْضِ‌ ۙ اُولٰۤـئِكَ لَهُمُ اللَّعْنَةُ وَلَهُمْ سُوْٓءُ الدَّارِ
எவர்கள் அல்லாஹ்விடம் அளித்த வாக்குறுதியை உறுதிப்படுத்திய பின்னர் முறித்து விடுகிறார்களோ; இன்னும், அல்லாஹ் சேர்த்து வைக்க வேண்டுமென ஏவியதைப் பிரித்து விடுகிறார்களோ; பூமியில் ஃபஸாது (விஷமம்) செய்கிறார்களோ - அத்தகையோருக்குச் சாபந்தான்; அவர்களுக்கு மிகக்கெட்ட வீடும் இருக்கிறது. (குர்ஆன் : 13:25)
"எவர்கள் அல்லாஹ்விடம் அளித்த வாக்குறுதியை உறுதிப்படுத்திய பின்னர் முறித்து விடுகிறார்களோ " - அது பற்றிய விபரம் முதலில் பார்ப்போம்.
عَهْدَ اللّٰهِ
"அஹ்தல்லாஹி" என்பது ரோஸே மீதாக் என்னும் தலை நாளில் சகல மனிதர்களும் இறைவனிடத்தில் செய்து கொடுத்த வாக்குறுதியை குறிக்கிறது.
" நான் உங்கள் றப்பு இல்லையா?"என்று இறைவன் கேட்ட உறுதிமொழி இரகசியத்தை குறித்து,
"அதனை தாங்கள் ஞாபகத்தில் வைத்து இருக்கிறீர்களா ? என்று துன்னூனில் மிஸ்ரி (ரஹ்) அவர்களிடம் விவைப்பட்ட போது,
"ஆம்' ஞாபகத்தில் வைத்திருக்கிறேன் அது இந்த கணத்தில் தான் நிகழ்ந்ததுபோல என் செவியில் இன்னும் ஒலித்துக்கொண்டிருக்கிறது என்று பதில் அளித்தார்கள்.
வேறு சிலர் நேற்றுதான் நிகழ்ந்தது போல இருக்கிறது என்று சமீப காலத்தில் நிகழ்ந்தது போல அதனை எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் எனவே தான் அவர்கள் மறக்கவில்லை.
ஹிஜாப் என்னும் திரை உள்ளவர்களான மற்றவர்கள் அது வெகு தூரத்தில் உள்ளதாகப் பாவிக்கிறார்கள். அதனால் அவர்களுக்கு நினைவுக்கு வர முடியாமல் மறந்து விட்டார்கள் என்பதாக தஃப்ஸீர் ஹமீத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது.

இறைநம்பிக்கையாளர்களோ அல்லாஹ்வின் ஒப்பந்தத்தைக் காப்பாற்றுவார்கள்; உறவுகளைப் பேணி வாழ்வார்கள். ஆனால், கெட்டவர்கள் நேர் மாறாக நடந்துகொள்வார்கள்.
அவர்கள் அல்லாஹ்வின் ஒப்பந்தத்தை உறுதிப்படுத்திய பின்னர் அதை முறித்துவிடுவார்கள். எந்த உறவுமுறையானது அரவணைக்கப்பட வேண்டும் என அல்லாஹ் ஆணையிட்டுள்ளானோ அதை அவர்கள் அரவணைக்க மாட்டார்கள். மேலும், அவர்கள் பூமியில் குழப்பம் விளைவிப்பார்கள்.
அபுல் ஆலியா (ரஹ்) அவர்கள் கூறியதாவது : நயவஞ்சகர்களுக்கு ஆறு குணங்கள் உண்டு மக்களிடம் அவர்களுக்குச் செல்வாக்கு ஏற்படும்போது அந்தக் குணங்களை அவர்கள் வெளிப்படுத்துவார்கள். 1) அவர்கள் பேசினால் பொய் சொல்வார்கள்; 2) வாக்களித்தால் மாறு செய்வார்கள்; 3) அவர்களை நம்பி எதையும் ஒப்படைத்தால் (அதில்) மோசடி செய்வார்கள்; 4) அல்லாஹ்வின் ஒப்பந்தத்தை உறுதிப்படுத்திய பின்னர் அதை முறித்துவிடுவார்கள்;
5) அரவணைக்கப் பட வேண்டுமென்று அல்லாஹ் உத்தரவிட்ட உறவுகளைத் துண்டித்துவிடுவார்கள்: 6) பூமியில் குழப்பம் விளைவிப்பார்கள்.
அவர்கள்மீது பிறர் ஆதிக்கம் செலுத்தும்போது. அவற்றில் மூன்று குணங்களை வெளிப்படுத்துவார்கள். 1) பேசினால் பொய் சொல்வார்கள்; 2) வாக்களித்தால் மாறு செய்வார்கள்; 3) அவர்களை நம்பி எதையும் ஒப்படைத்தால் (அதில்) மோசடி செய்வார்கள்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 68**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 32**
**.**



ٱللَّهُ يَبۡسُطُ ٱلرِّزۡقَ لِمَن يَشَآءُ وَيَقۡدِرُ وَفَرِحُواْ بِٱلۡحَيَوٰةِ ٱلدُّنۡيَا وَمَا ٱلۡحَيَوٰةُ ٱلدُّنۡيَا فِى ٱلۡأٓخِرَةِ إِلَّا مَتَاعٌ
அல்லாஹ் தான் விரும்பியவர்களுக்கு ஏராளமாகக் கொடுக்கிறான் ; (தான் விரும்பியவர்களுக்கு) குறைத்தும் கொடுக்கின்றான்; எனினும் (நிராகரிப்பவர்கள்) இவ்வுலக வாழ்க்கையில் மகிழ்ச்சியடைகிறார்கள் - இவ்வுலக வாழ்க்கையோ மறுமைக்கு ஒப்பிட்டால் மிகவும் அற்பமேயன்றி வேறில்லை. (குர்ஆன் : 13:26)
இவ்வுலகமும், மறுவுலகமும்
அல்லாஹ்வின் மீது ஆணையாக! மறுமையை ஒப்பிடும் போது இவ்வுலகம் என்பது உங்களில் ஒருவர் தம் ஆட்காட்டி விரலை கடலில் நுழைப்பதைப் போன்றதாகும். பின்னர் அதில் எவை திரும்புகிறது என்பதை கவனிக்கட்டும் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர்: முஸ்தவரித் ரளியல்லாஹு அன்ஹு, நூல்கள்: முஸ்லிம் 5101, திர்மிதீ 2245, இப்னுமாஜா 4098),
மறு உலகத்தில் கிடைக்கும் இன்பங்கள் கடலளவு நிறைந்தவை. இவ்வுலக இன்பங்கள் ஒருவர் கடலில் தனது ஆட்காட்டி விரலை நுழைத்து வெளியே எடுக்கும் போது அந்த விரலில் கடல் நீர் எவ்வளவு திரும்பவும் வந்து சேரும்? இந்த விரலில் ஒட்டிக் கொண்டிருப்பதுதான் இவ்வுல இன்பம். இதுதான் இவ்வுலக மறுவுலக இன்பங்களுக்கு உதாரணம்.
நம்பிக்கை கொண்டோரே! உங்களுக்கு என்ன நேர்ந்தது? "அல்லாஹ்வின் பாதையில் புறப்படுங்கள்!" என்று உங்களிடம் கூறப்படும் போது இவ்வுலகை நோக்கிச் சாய்ந்து விடுகிறீர்கள்! மறுமையை விட இவ்வுலக வாழ்வில் திருப்தி அடைகிறீர்களா? மறுமைக்கு முன்னால் இவ்வுலக வசதி மிக அற்பமானது.(குர்ஆன் 9:38)
இவ்வுலக இன்பத்தை விரும்பிய ஒருவர் நடந்தாலும் அதை தருபவனும் அல்லாஹ்தான், அவன் நாடாமல் ஒருபோதும் இவ்வுலக இன்பத்தை நீங்கள் அடையமுடியாது.
"யாரேனும் இவ்வுலகின் பயனை விரும்பினால் இவ்வுலகின் பயனும், மறுமையின் பயனும் அல்லாஹ்விடமே உள்ளன. அல்லாஹ் கேட்பவனாகவும், பார்ப்பவனாகவும் இருக்கிறான்". (அல்குர்ஆன் 4:134)

அல்லாஹ்வை நம்பாதவர்கள், நம்பியும் அவன் கட்டளைபடி நடக்காமல் பொருட் செல்வங்கள் அதிகம் பெற்றவர்களைப் பார்த்து நீங்களும், அவர்களைப் போன்று நடந்து கொள்ள வேண்டும் என்று ஏமாந்து விடவேண்டும். இவ்வாறு அவர்களுக்கு பொருட் செல்வம் வழங்கப்பட்டிருப்பது அவர்களுக்கு தண்டனை வழங்குவதற்குதான என்பதை மறந்துவிட வேண்டாம்!
அவர்களின் மக்கட் செல்வமும், பொருட் செல்வமும் உம்மை ஆச்சரியப்படுத்த வேண்டாம். அவற்றின் மூலம் இவ்வுலக வாழ்க்கை யில் அவர்களைத் தண்டிப்பதையும், அவர்கள் (ஏக இறைவனை) மறுத்துக் கொண்டிருக்கும் நிலையில் அவர்களது உயிர்கள் பிரிவதையுமே அல்லாஹ் நாடுகிறான். (அல்குர்ஆன் 9:55)
"அறிந்து கொள்ளுங்கள்: "நிச்சயமாக இவ்வுலக வாழ்க்கை விளையாட்டும், வேடிக்கையும், அலங்காரமுமேயாகும்; மேலும் (அது) உங்களிடையே பெருமையடித்துக் கொள்வதும்; பொருள்களையும், சந்ததிகளையும் பெருக்குவதுமேயாகும்;
(இது) மழையின் உதாரணத்துக்கு ஒப்பாகும்; (அதாவது:) அது முளைப்பிக்கும் பயிர் விவசாயிகளை ஆனந்தப் படுத்துகிறது; ஆனால், சீக்கிரமே அது உலர்ந்து மஞ்சள் நிறம் ஆவதை நீர் காண்கின்றீர்; பின்னர் அது கூளமாகி விடுகிறது; (உலக வாழ்வும் இத்தகையதே;
எனவே உலக வாழ்வில் மயங்கியோருக்கு) மறுமையில் கடுமையான வேதனையுண்டு; (முஃமின்களுக்கு) அல்லாஹ்வின் மன்னிப்பும், அவன் பொருத்தமும் உண்டு - ஆகவே, இவ்வுலக வாழ்க்கை ஏமாற்றும் சொற்ப சுகமே தவிர (வேறு) இல்லை.
(அல்குர்ஆன் : 57:20)

"இவ்வுலகத்தை பயந்து கொள்ளுங்கள்!, பெண்களையும் பயந்து கொள்ளுங்கள்!" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர்: அபூஸயீத் ரளியல்லாஹு அன்ஹு, நூல்: முஸ்லிம் 4925)

'மனிதன் (வளர்ந்து) பெரியவனாக ஆக அவனுடன் இரண்டு ஆசைகளும் வளர்கின்றன. 1. பொருளாசை 2. நீண்டநாள் வாழ வேண்டும் என்ற ஆசை' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர்: அனஸ் ரளியல்லாஹு அன்ஹு, நூல்: புகாரீ 6421)
இறுதியாக இவ்வுலக வாழ்க்கையில் இறைக்கட்டளைபடியும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காட்டிய வழியின்படியும் நடப்பவர்களுக்கு இந்த உலகம் ஒரு சிறைச்சாலைப் போன்றே தோற்றமளிக்கும். இறைக்கட்டளை மதிக்காதவர்களுக்கு இந்த உலகம் சொர்க்கப் பூஞ்சோலையாக காட்சியளிக்கும்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் இந்த உலக இன்பத்தைப்பற்றி எடுத்துரைத்த போதுகூட அவர்கள் மறுவுலகத்தில் இதைவிட சிறந்த இன்பத்திற்கு காத்திருப்பதாக கூறியுள்ளார்கள்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஓர் ஈச்சம் பாயில் (அமர்ந்து) இருந்தார்கள். அவர்களுக்கும் அந்த பாய்க்குமிடையே (விரிப்பு) எதுவும் இருக்கவில்லை. அவர்களுடைய தலைக்குக் கீழே ஈச்சம் நார்கள் நிரப்பப்பட்ட தோல் தலையணை ஒன்றிருந்தது.
அவர்களின் கால்களுக்கருகில கருவேலை இலைகள் குவிக்கப்பட்டிருந்தன. அவர்களின் தலைமாட்டில் பதனிடப்படாத தோல் தொங்கிக் கொண்டிருந்தது. அப்போது அவர்களின் விலாப்புறத்தில் ஈச்சம்பாயின் சுவடு (பதிந்து) இருப்பதைக் கண்டு அழுதுவிட்டேன்.
அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஏன் அழுகிறீர்கள்? என்றார்கள்.
அதற்கு நான் அல்லாஹ்வின் தூதரே (பைளாந்திய மற்றும் பாரசீக மன்னர்களான) சீசரும் குஸ்ரூவும் (தாரளமான உலகச் செல்வங்களைப் பெற்று) வளமுடன் இருந்து வருகின்றனர். தாங்களோ அல்லாஹ்வின் தூதராயிற்றே என்றேன்.
அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அ(ம்மன்ன)வர்களுக்கு இம்மையும் நமக்கு மறுமையும் இருப்பதை நீங்கள் விரும்பவில்லையா? என்று கேட்டார்கள். (நூல்: புகாரீ 4913)

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 69**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 33**




وَيَقُوْلُ الَّذِيْنَ كَفَرُوْا لَوْلَاۤ اُنْزِلَ عَلَيْهِ اٰيَةٌ مِّنْ رَّبِّهٖ قُلْ اِنَّ اللّٰهَ يُضِلُّ مَنْ يَّشَآءُ وَيَهْدِىْۤ اِلَيْهِ مَنْ اَنَابَ

“இவருக்கு இவருடைய இறைவனிடமிருந்து ஓர் அத்தாட்சி இறக்கி வைக்கப்படக் கூடாதா” என்று நிராகரிப்போர் கூறுகிறார்கள்,
(நபியே!) நீர் கூறும்: “நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவரை வழிகெடச்செய்கிறான்; தன் பால் எவர் திரும்புகிறாரோ அத்தகையோருக்கு நேர் வழிகாட்டுகிறான்” என்று (குர்ஆன் : 13:27)
நிராகரித்துக் கொண்டிருக்கும் மக்கா வாசிகளில் சிலர், முஹம்மது (ஸல்) உண்மையாள நபிதான் என்பதை அறிவிக்கிற ஓர் அத்தாட்சியை அவருடைய இறைவன் அவர்மீது இறக்க வைக்கக் கூடாதா? எனக் கூறினர். பெருமானார் (ஸல்) அவர்கள் உண்மையான நபிதாம் என அவர்கள் அறியாமலில்லை. ஆயினும், அவர்களை ஏற்கக்கூடாது என்ற பிடிவாதக் குணமும், பரிகாசமுமே இவ்வாறு அவர்கள் கேட்பதற்குக் காரணம், இவர்களுக்கு எத்தனையோ ஆதாரங்களும் அற்புதங்களும் காட்டப்பட்டு விட்டன. ஆயினும் அவர்கள் விசுவாசங் கொள்ளவில்லை. ஆதலால் நபியே, அவர்களை நோக்கி, அல்லாஹ் தான் நாடியவரை வழிதவறச் செய்து விடுகின்றான். அவன் வழி காட்டாவிட்டால் எத்தனை அற்புதங்களையும் ஆதாரங்களையும் அவர்களுக்கு நீர் காட்டிய போதிலும் அவர்களுக்கு அவையொன்றும் பயனளிக்கா.
விசுவாசம், நேர்மையான நடத்தை ஆகியவற்றின் மூலம் அவனிடம் திரும்புகிறவருக்கு நிச்சயமாக அவன் மென்மேலும் நேர்வழி காட்டுகின்றான் எனக் கூறிவிடும்.

அற்புதங்கள் இஸ்லாமிய வளர்ச்சியின் அளவுகோலா?
உலகின் பெரும்பாலான மதங்களின் கட்டமைப்பு அற்புதங்களைக் கொண்டே கட்டப்பட்டிருப்பதால் இஸ்லாமிய மார்க்கம் அற்புதங்கள் குறித்து என்ன சொல்கிறது?
அரபியில் முஃஜிஸா - அற்புதம் என்று பொருள்
Ø சாத்தியம் இல்லாத ஒன்றை செய்து காட்டுவது
Ø இயற்கை விதிகளுக்கு அப்பாற்பட்ட, அதற்கான காரண காரியங்களை விளக்கிக் கூறிட முடியாத அல்லது மனித அறிவாற்றலால் விளங்கிட முடியாத சம்பவம் அல்லது காட்சி
Ø மனித குல சக்திக்கு அப்பாற்பட்ட செயல் என்றும் விரிவான பொருள் கொள்ளலாம்.
ஆக,அற்புதங்களை கண்களை மூடிக்கொண்டு நிராகரிப்பதும், இஸ்லாமிய மார்க்கத்தின் உயர்வுக்கு அற்புதம் தான் அளவுகோல் என்று நம்புவதும் இஸ்லாமிய மார்க்க அடிப்படையில் தவறானவைகளாகவே கருதப்படுகின்றது.
அப்படியென்றால், குர்ஆனில் பல்வேறு வசனங்களில், பல இறைத் தூதர்கள் நிகழ்த்திக்காட்டிய அற்புதங்கள் பற்றி கூறப்படுபவைகளை “அந்த இறைத்தூதர்கள் தங்களின் தூதுத்துவத்தை - நபித்துவத்தை மக்களிடையே நிலை நாட்டவே அற்புதங்களை மேற்கொண்டனர்” என்று நம்ப வேண்டுமென இமாம் முல்லா அலீ காரீ (ரஹ்) அவர்கள் தங்களின் ஷரஹ்ஃபிக்ஹுல் அக்பர் எனும் நூலில் தெளிவு படுத்துகின்றார்கள்.
அண்ணல் நபி (ஸல்) அவர்கள் செய்த அற்புதங்கள்
Ø சந்திரனை இரண்டாகப் பிளக்கச் செய்தார்கள்
Ø அவர்களுடைய கையிலிருந்த கற்கள் தஸ்பீஹ் செய்தன.
Ø ஒரு மரத்தை நடந்து வரச் செய்தார்கள்

Ø அகழ் யுத்தத்தின் போது ஒரு சிலருக்கு கூட போதாத உணவை நூற்றுக்கணக்காணோர் உண்ண அவ்வுணவு சற்றும் குறையவே இல்லை.
Ø வெளியே தொங்கிக் கொண்டிருந்த அபூபக்ர் (ரலி) அவர்களின் கண்களை தமது கரத்தால் எடுத்து அதற்குறிய இடத்தில் வைத்து துஆ செய்தார்கள்.
Ø முஹம்மது பின் மஸ்லமா (ரலி) எனும் நபித்தோழரின் இரண்டாக முறிந்து போன காலை மீண்டும் இணைத்து விட்டார்கள்.
Ø கைபர் யுத்தத்தின் போது ஒரு சிறு தோல்பையிலிருந்த தண்ணீரை மூவாயிரம் படை வீரர்கள் பருகச் செய்தார்கள்.
Ø அபு ஹுரைரா (ரலி) அவர்களுக்கு பசிக்கும் போது எடுக்க எடுக்க குறையாத பேரீத்தம் பழ பையை கொடுத்தார்கள்
Ø ஹூதைபிய்யா உடன் படிக்கையின் போது தங்களது திருக்கரத்தின் விரல்களிலிருந்து தண்ணீர் ஊற்று சுரந்து 1400 பேர் பருகிடச் செய்தார்கள்,.
Ø ஜாபிர் (ரலி) அவர்கள் ஒரு யூதனிடம் 30 குவியல் பேரீத்தம் பழம் கடன் பட்டிருந்து அதை திருப்பிக்கொடுக்க முடியாமல் திணறிய போது சிறு குவியல் பேரீத்தம் பழத்தின் மீது தமது புனித கால்களால் நடந்து சென்றுவிட்டு அதிலிருந்து யூதனுக்கு 30 குவியல் அளந்து கொடுக்குமாறு ஜாபிர் (ரலி) யிடம் கட்டளையிட, இதுபோன்று 30 குவியலை யூதனிடம் வழங்கிய பின்பு 17 குவியல்கள் மீதமிருக்க வைத்தார்கள்.
....இது போன்று ஆயிரத்திற்கும் மேற்பட்ட அற்புதங்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து நிகழ்ந்துள்ளன.
அதில் ஒன்றுதான் மிஃராஜிம், மிஃராஜுக்கு சென்ற இரவில் பைத்துல் முகத்தஸை பற்றி மக்கா குறைஷிகள் கேட்ட கேள்விகளுக்குச் சரியான பதிலைக் கூறினார்கள்.
இன்னும் ஒரு படி மேலாக,நடந்தவை, இனிமேல் நடப்பவற்றை அல்லாஹ்வின் அனுமதிப்படி மக்களுக்கு அறிவித்தார்கள்.
நபி (ஸல்) அவர்களிடம் " உங்களுக்கு அல்லாஹ் கொடுத்த அற்புதம் எது ? என்றபோது "அற்புதத்திற்கெல்லாம் மிகப்பெரிய அற்புதமான திருக்குர் ஆனை கொண்டு வந்ததை தான் சொன்னார்கள்.
எனவே,நபிமார்கள் நிகழ்த்துகின்ற முஃஜிஸா எனும் அற்புதங்கள் ஓர் இறை நம்பிக்கையாளனின் ஈமான் - இறை நம்பிக்கையின் ஓர் அம்சம்தான். இஸ்லாத்தின் ஓர் பகுதிதான்.
ஈமானின் முழுமைத்துவமாகவோ இஸ்லாத்தின் வளர்ச்சிக்கு அளவுகோலாகவோ அற்புதங்களை எடுத்துக் கொள்ளக்கூடாது.

அல்லாஹ்வின் தூதர் சுலைமான் (அலை) அவர்கள் தமது அவையோரை ஒன்று கூட்டி, "அவையோரே! அவர்கள் கீழ்ப்படிந்தவர்களாய் என்னிடம் வரும்முன் அவளுடைய அரியணையை உங்களில் யார் என்னிடம் கொண்டுவர முடியும்? " என்று கேட்டார்கள்.
பலம் பொருந்திய ஒரு ஜின் கூறியது “நீங்கள் உங்களுடைய இடத்தைவிட்டு எழுவதற்கு முன் அதை நான் உங்களிடம் நான் கொண்டு வந்து விடுகிறேன். நான் அதற்கு வலிமை பெற்றவனாகவும், நம்பிக்கைக்குறியவனாகவும் இருக்கின்றேன்”என்றது.
அவர்களுள் ஓரளவு வேத ஞானம் பெற்றிருந்த ஒருவர் “நீங்கள் கண்மூடித் திறப்பதற்குள் அதை உங்களிடம் நான் கொண்டுவந்து வருகிறேன் என்று கூறினார். அவ்வாறே அவ்வரியவனை தம்மிடத்தில் வைக்கப்பட்டிருப்பதை சுலைமான் கண்டார். ( குர்ஆன் : 27: 38-40 )
இறைவனிடம் ஒரு பிரார்த்தனை மூலம் நடைபெற்றிருக்க வேண்டிய ஒரு காரியத்தை இறைத்தூதர் சுலைமான் (அலை) அவர்கள் அவ்வாறு செய்யவில்லை. தம்மிடம் காற்றை அல்லாஹ் வசப்படுத்திக் கொடுத்திருந்தும் அதன் மூலமும் சுலைமான் (அலை) அவர்கள் அவ்வரியணையை கொண்டு வர முயற்சிக்கவில்லை.
ஏனெனில், இஸ்லாமிய எழுச்சியின் அளவு கோலாக அற்புதங்கள் நிகழ்த்தப்படுவதில்லை என்பதை உணர்த்தவே அல்லாஹ் இச்சம்பவத்தை நபி சுலைமான் (அலை) அவர்கள் மூலம் நிகழ்த்திக் காட்டுகின்றான்.
மேலும், எப்படி அற்புதங்கள் நபிமார்கள் மூலம் நிகழ்த்தப்படும் என்பதை குர்ஆன் எடுத்துக் கூறுகின்றதோ அதேபோன்று இறை நேசர்களும் அற்புதங்கள் பல நிகழ்த்துவார்கள் என அல்குர்ஆன் மேற்கூறிய இறை வசனங்கள் சுட்டிக்காட்டுகின்றன.
இன்னும் சொல்லப்போனால், இறை நிராகரிப்பாளர்களால் கூட அற்புதங்கள் நிகழ்த்த முடியும் என்பதை அத்தியாயம் ( குர்ஆன் 20: 83 முதல் 99 வரை ) - ஸாமிரி என்பவன் மூஸா (அலை) அவர்களின் சமூகத்தாரை அற்புதத்தை நிகழ்த்திக்காட்டி வழிகெடுத்ததை குர்ஆன் கூறுவதை மறுக்க முடியாது.
இவ்வாறே, நபி (ஸல்) அவர்கள் காலத்தில் வாழ்ந்த இப்னு ஸய்யாத் என்பவன் ஷைத்தானுடைய தீண்டுதலுக்கு உள்ளாகி, அதன் காரணமாக அவன் பிறர் மனதில் நினைப்பதை சில சமயங்களில் சரியாக சொல்லக்கூடியவனாக இருந்தான். அவன் நிகழ்த்திக்காட்டும் அற்புதங்கள் ஒரு எல்லைக்குட்பட்டவையே, பலஹீனமானவையே என்பதை பின்னர் நபி (ஸல்) அவர்கள் தெளிவு படுத்தினார்கள் என்பதை புகாரியின் இரு வேறு அறிவிப்புகளின் மூலம் உணர முடிகிறது. (பார்க்க: புகாரி தமிழாக்கம்: 1354, 1355)

நபிமார்கள், இறை நேசர்கள் செய்தவை உண்மையான அற்புதங்கள். அவற்றை அல்லாஹ்விடமிருந்தே பெற்றார்கள். ஆனாலும் நபிமார்களின் அற்புதங்களுக்கும் இறைநேசர்களின் அற்புதங்களுக்கும் சில வித்தியாசங்கள் உண்டு என்பதையும் ஓர் மூஃமின் நம்ப வேண்டும்.

மேலும், வலிமார்கள் இறைநேசர்கள் என்றாலே அவர்கள் அற்புதங்கள் நிகழ்த்துவதை பிரதானமாகக் கொண்டிருந்தார்கள் என்றதோர் தோற்றத்தை முஸ்லிம் உம்மத்தில் பலர் நம்பிக்கொண்டிருக்கின்றனர். ஆனால், வலிமார்கள் -இறைநேசர்கள் என்றால் அல்லாஹ்வின் நெருக்கத்தை பெற்றுத் தருகிற நல்லறங்களில் தொடர்ந்து ஈடுபட்டுக் கொண்டிருப்பார்கள். அல்லாஹ்வின் வெறுப்பைப் பெற்றுத்தருகிற தீய செயல்களில் ஈடுபடாமல் தொடர்ந்து தங்களை தற்காத்துக் கொண்டிருப்பார்கள் என்று இமாம் முல்லா அலிகாரீ (ரஹ்) அவர்கள் தங்களின் ஷரஹ்ஃபிக்ஹூல் அக்பர் எனும் நூலில் குறிப்பிடுகிறார்கள்.
நூல்: ஷரஹ்ஃபிக்ஹூல் அக்பர் பக்கம் 95

ஒட்டு மொத்ததில் அற்புதங்களை நபிமார்களின் தூதுத்துவத்திற்கு ஓர் சான்றாக மட்டுமே பார்க்க வேண்டும் என்பதுதான் ஐயமற விளங்குகின்றது.
இதையே அறிவுலக மாமேதை, இறைமையியல் விற்பன்னர் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் பின்வருமாறுகுறிப்பிடுகின்றார்கள்.
“துவக்கத்தில் பைத்துல் முகத்தஸ், அதன்பின் ஏழு வானங்கள், இறைவன் சன்னிதானம், நபிமார்களுடன் உரையாடுதல், சுவர்க்க நரக காட்சிகள் என்று ஓரிரவின் சிறு பகுதிக்குள் நிகழ்ந்த விண்ணேற்றம் – மிஃராஜ் என்பது ஒரு பெரும் அற்புதமாகும்.
இறைதூதர்கள் காட்டும் அற்புதங்கள் அவர்கள் இறைவனின் தூதர்கள்தாம் என்னும் உண்மைக்குச் சான்று பகர்கின்றன. இவ்வாறாக, மிஃராஜ் என்பது முஹம்மது நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் என்பதற்கு சான்று பகர்கிறது”
நூல்: இஹ்யா
ஆகவே,மிஃராஜ் - விண்ணேற்றப் பயணம் என்பது மனித குலத்தின் முன்னேற்றத்திற்காக இறைவனால் வழங்கப்பட்ட ஓர் அற்புதப் பயணம் என்பதை ஏற்றுகொள்வோம்.
இஸ்லாமிய எழுச்சிக்கும், வளர்ச்சிக்கும்மான அடையாளமும், அளவுகோலும் அற்புதங்கள் அல்ல என்பதை விளங்கிக் கொள்வோம்.அல்லாஹ் விளக்கத்தை தருவானாக! ஆமின்

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 70**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 34**




اَلَّذِيْنَ اٰمَنُوْا وَتَطْمَٮِٕنُّ قُلُوْبُهُمْ بِذِكْرِ اللّٰهِ‌ ؕ اَلَا بِذِكْرِ اللّٰهِ تَطْمَٮِٕنُّ الْقُلُوْبُ
(நேர் வழி பெறும்) அவர்கள் எத்தகையோரென்றால், அவர்கள் தாம் (முற்றிலும்) ஈமான் கொண்டவர்கள்; மேலும், அல்லாஹ்வை நினைவு கூர்வதால் அவர்களுடைய இதயங்கள் அமைதி பெறுகின்றன; அல்லாஹ்வை நினைவு கூர்வது கொண்டு தான் இதயங்கள் அமைதி பெறுகின்றன என்பதை அறிந்து கொள்க! (குர்ஆன் : 13:28)
"ஒருவரின் மனம், நொடிக்கு நொடி மாறும் என்பதை அனுபவப் பூர்வமாக உணரக்கூடியதுதான்.அதைக் கட்டுக்கோப்புக்குள் கொண்டு வர சில பயிற்சிகள் தேவை.
“மனம்” என்பதன் கருத்தாக்கம் பிடிபடாததாக இருக்கிறது, பல்வேறு மொழிகள் இதனை பலவிதங்களில் கருத்தாக்கம் செய்கின்றன.
சமஸ்கிருத மொழியில் மனம் என்பற்கு சிட்டா என்று பொருள், இதற்கு பரந்துபட்ட அர்த்தம் இருக்கிறது. புலனுணர்வு, உணர்வுகள், சொல்லார்ந்த மற்றும் புலனாகாத சிந்தனை, உணர்வுகள், இன்ப துன்ப உணர்வுகள், கவனம், செறிவு, நுண்ணறிவு இன்னும் பலவற்றை இவை உள்ளடக்கியுள்ளது.
பௌத்தம் கூறும் மனம் என்பது, எல்லாவிதமான மனநிலைகளையும் குறிப்பிட்டுச் சொல்கிறது."

விஞ்ஞான புரிதலின்படி, ஒளிக்கதிர்கள் கருவிழிகள் மூலமாக கண்களுக்குள் நுழைந்து விழித்திரையின் படப்பதிவு செல்களை அடைகின்றன. அப்போது தூண்டப்படும் உந்துவிசையானது மூளைக்கு ஒளியியல் தகவலைத் தருகிறது, அங்கு அது உருப்பெருகிறது. ஒரு பொருள் பற்றிய இந்த அனுபவமே "இது ஆப்பிள்" என்ற முப்பரிமாண படிவத்தை உருவாக்கி அதற்கு அர்த்தத்தைத் தருகிறது.

மனம் வெற்று இடமல்ல, மூளையின் ஏதோ ஒரு இடத்தில் ஆப்பிளின் முப்பரிமாணப் படிவம் பதிவாகியிருக்கும், அதுவே "மனதில் ஏதோ இருக்கிறது" என்பதை வெளிப்படுத்துகிறது.
தியானம் என்பது சில நன்மைகளை உணர அல்லது மனதின் உள்ளடக்கத்தை அறியாமல் அதனை ஒப்புக் கொள்ள, அல்லது தியானத்தையே ஒரு முடிவாக நினைத்து ஒரு நபர் மனதை இயக்குதல் அல்லது பயிற்றுவித்தல், அல்லது உணர்வு நிலையைத் தூண்டுதல் மூலம் செய்யப்படும் நடைமுறையாகும்.
தியானம் என்பது தளர்வு, உள் சக்தி அல்லது உயிர் சக்தியைஉருவாக்குதல் மற்றும் இரக்கத்தை வளர்த்துக் கொள்ளுதல்,அன்பு, பொறுமை, தாராள குணம் மற்றும் மன்னிப்பு ஆகியவற்றை ஊக்குவிக்க வடிவமைக்கப்பட்டுள்ள நுட்பங்கள் போன்ற பரந்த பல்வேறு நடைமுறைகளை குறிக்கிறது.
தியானம் என்பது இடையறாது இறைவனின் நினைவில் மூழ்கியிருப்பது. திளைத்திருப்பது, திருவாய் மொழிவது.
ஒரு சொல்லை திரும்ப திரும்ப சொல்லும்போது அது புலன் கடந்து, மனம் கடந்து , வெட்ட வெளியில் அது தடையின்றி பிரவேசிக்கிறது.
குறிப்பாக ஒரு இலட்சிய வடிவம் தியானம் ஒற்றை-குறியிடப்பட்ட செறிவை (திக்ருவை ) சிரமமின்றி தொடர்ந்து நோக்குகிறது.
மற்ற மதங்கள் , விஞ்ஞானம் கூட தடம்பிடித்து திணறும் மனம் பற்றிய விஷயத்தை இஸ்லாம் மிகத்தெளிவாக தனித்தனி கூறுகளாக மிக அழகாக அலசுகிறது. மனம் அமைதி பெறுவது திக்ரு யைக் கொண்டது என்பதை இஸ்லாம் ஆழமாக அழுத்தமாக பதிவு செய்கிறது.

இருதயங்கள் நான்கு வகை.
1) கல்புன் தாஸுன் :- என்பது நிராகரிப்பாளர்கள், முனாஃபிக்குகள் என்னும் கள்ள விசுவாசிகளது இருதயம். இவ்வுலகத்தையும் இவ்வுலகத்து மாயைகளையும் கொண்டுதான் இவர்களது இருதயங்கள் நிம்மதி அடையும். இதனைக் குறித்து இறைவன் தனது திருமறையில், "அற்பமாகிய (இவ்வுலக) வாழ்வைக் கொண்டு அவர்கள் திருப்தியடைந்து, அதனைக் கொண்டே அவர்கள் சாந்தியடைந்து கொண்டார்கள்'' என்று கூறியுள்ளான்.
2) கல்புன் நாஸின் :- என்பது பாவியான முஸ்லிமின் இருதயம். இதனைக் குறித்து 'அவன் மறந்து விட்டான். இன்னும் உறுதி இருப்பதை நாம் காணவில்லை" 20:115 என்று இறைவன் கூறியுள்ளான். இத்தகைய இருதயமுள்ளவர்களுக்கு சாந்தியளிப்பது. தவ்பாவும் சுவர்க்கத்தின் பாக்கியமும்தான்.
3) கல்புன் முஷ்தாக்குன் :- என்பது வழிபாடுள்ள மூமின்களது இருதயம், அல்லாஹுு தஆலாவை நினைவு கூர்வதால் இவர்களுக்குச் சாந்தி ஏற்படுகிறது. இதனைக் குறித்துதான் இறைவன் மேற்கண்ட ஆயத்தில் "விசுவாசங் கொண்டு, அல்லாஹ்வை நினைவு கூர்வதால் தங்களது இருதயங்கள் சாந்தியடைபவர்கள்" என்று கூறியுள்ளான்.
4) கல்புன் வஹ்தானியுன் :- என்பது நபிமார்கள் காமிலான ஒலிமார்களில் முக்கியமானவர்களது இருதயங்கள், அல்லாஹுு தஆலாவையும் அவனது ஸிஃபத்துகள் என்னும் தன்மைகளையும் கொண்டுதான் இவர்கள் சாந்தியடைவார்கள்.
இதனைக் குறித்து இறைவன் "தனது கலீலாகிய இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் "எவ்வாறு மரணித்தவர்களை நீ உயிர்ப்பிப்பாய்?" என்ற கேள்விக்கு பதில் கூறும் முறையில்
"நீர் விசுவாசம் கொள்ள வில்லையா?" என்று கூறினான். அதற்கவர் "உண்மைதான் (விசுவாசங் கொண்டேன்) என்றாலும் என் இருதயம் சாந்தியடைவதற்காக என்றார்" குர்ஆன் 2:260 என்று கூறியுள்ளான்.
திக்ரு (நினைவு கூர்தல் - தஸ்பீஹ் செய்தல்) தான் இருதயத்தைப் பளபளப்பாகச் செய்வது. அதுவே மஹ்பூபாகிய இறைவன் மகிழ்ச்சியடைவதற்குக் காரணமாயுள்ளது.
எவர் அல்லாஹுுதஆலாவை நினைவு கொள்கிறாரோ அவரை அவனும் நினைவு கொள்கிறான். இதனைக் குறித்து இறைவன் "என்னை நீங்கள் நினைவில் கொள்ளுங்கள். உங்களை நான் நினைவில் கொள்கின்றேன்" 2:156 என்று கூறியுள்ளான்.
ஆகவே, திரையிடப்பட்டி ருக்கிறவர்களது இருதயங்கள் இறைவனை நினைவு கூர்வதால் சாந்தியடையாது. வாஸில்களான இறைவனை அடைந்தவர்களது இருதயங்கள் இறைவனை நினைவு கூர்வதால்தான் சாந்தியடையும்.
மிகச் சிறந்தவர்களும் திரும்புதலில் மிகத் துரிதமானவர்களுமான ஒரு கூட்டத்தை உங்களுக்கு அறிவிக்கட்டுமா? சுபுஹு தொழுகைக்கு வந்து அதனை நிறைவேற்றி, சூரியன் உதயமாகும் வரை அல்லாஹுு தஆலாவை திக்ருச் செய்து கொண்டு அமர்ந்திருப்பவர்கள்தாம் அவர்கள்" என்று கூறினார்கள்.

வட்டமாக உட்கார்ந்து கொண்டிருந்த தங்களது ஸஹாபிகளிடம் நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் சென்றார்கள். அங்கு நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் "உங்களை அமரச் செய்தது எது?" என்றார்கள்.
அல்லாஹுு தஆலாவை நாங்கள் திக்ரு செய்து, அவனைப் புகழ்கிறோம். அவன் எங்களை இஸ்லாம் மார்க்கத்தில் சேரும்படி வழி காட்டியதற்காக" என்று பதில் கூறினார்கள்.
"அதற்காகவே உங்களை அவன் அமரச் செய்தான் என்று சத்தியமாகக் கூறுவீர்களா?" என்று நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் வினவினார்கள்.
"அதற்காகத்தான் நாங்கள் அமர்ந்தோம்" என்று அவர்கள் சத்தியமாகக் கூறினார்கள்.

அப்பொழுது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் : "அறிந்து கொள்ளுங்கள்! உங்கள் மீது நம்பிக்கை இல்லாமல் நான் உங்களை சத்தியம் செய்யச் சொல்லவில்லை. எனினும் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் என்னிடம் வந்து,
''உங்களைக் கொண்டு மலக்குகளிடம் அல்லாஹு தஆலா பெருமை பேசுகிறான் என்று அறிவித்தார்" என்றார்கள் என்பதாக ஹளரத் அபூஸயூத் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் ரிவாயத்து செய்திருக்கிறார்கள்.
இஸ்லாத்தில் ஐந்து கடமைகளான ஈமான், தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ் கட்டாயம் கடைபிடிக்க வேண்டியவை. அடுத்து அதிகமான வணக்க வழிபாட்டில் சிறப்புடையது திக்ரு. திக்ரு என்பது இறைவனின் திருப்பெயர்களை, பெயர்களின் சிறப்புகளை சிந்தையில் பதித்து வந்தனை செய்வது.
திக்ரினால் பெறும் பயன்கள் பல. "அல்லாஹ்வை அதிகமாக திக்ரு செய்யும் ஆண்- பெண் இரு பாலருக்கும் அல்லாஹ் மன்னிப்பையும் மகத்தான நற்கூலியையும் சித்தப்படுத்தியுள்ளான்'' குர்ஆன் (33.35). ""எவரின் நாவு திக்ரில் திளைத்துள்ளதோ அவர் சிரித்துக்கொண்டே சொர்க்கம் புகுவார்'' அறிவிப்பவர் - ஹழ்ரத் அபூதர்தா (ரலி) அவர்கள். நூல் - அஹ்மத்.
மற்ற மதங்கள் , விஞ்ஞானம் கூட தடம்பிடித்து திணறும் மனம் பற்றிய விஷயத்தை இஸ்லாம் மிகத்தெளிவாக தனித்தனி கூறுகளாக மிக அழகாக அலசுகிறது. மனம் அமைதி பெறுவது திக்ரு யைக் கொண்டு என்பதை இஸ்லாம் ஆழமாக அழுத்தமாக பதிவு செய்கிறது.
ஒரு சொல்லை திரும்பத் திரும்ப சொல்லும்போது அது புலன் கடந்து, மனம் கடந்து , வெட்ட வெளியில் பிரவேசிக்கிறது !

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 71
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 35




اَلَّذِيْنَ اٰمَنُوْا وَعَمِلُوا الصّٰلِحٰتِ طُوْبٰى لَهُمْ وَحُسْنُ مَاٰبٍ
எவர்கள் ஈமான் கொண்டு நற்கருமங்கள் புரிகின்றார்களோ, அவர்களுக்கு (எல்லா) நற்பாக்கியங்களும் உண்டு; இன்னும் அழகிய இருப்பிடமும் உண்டு. (குர்ஆன் : 13:29)
طُوْبٰى لَهُمْ
' தூபா லஹும் 'என்பதற்கு மகிழ்ச்சியான வாழ்வு அவர்களுக்கு உண்டு என்பது கருத்து.
حُسْنُ مَاٰبٍ
'ஹுஸ்னு மஆப்' என்பதற்கு சுவர்க்கம் என்பது கருத்து.
ஷஹ்ர் பின் ஹவ்ஷப் (ரஹ்) அவர்கள் : "தூபா என்பது சொர்க்கத்தில் உள்ள ஒரு மரமாகும். சொர்க்கத்தின் அனைத்து மரங்களும் அதன் கிளைகளே .
கஃபுல் அஹ்பார் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் ரிவாயத்து செய்வது வருமாறு: சுவர்க்கத்திலுள்ள மரங்களைக் குறித்து நான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் விசாரித்தேன்.
அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதினுள்ள மரங்களில் மிகப் பெரியது 'தூபா ' என்னும் மரம். எனது கூடாரம் அம்மரத்தின் கீழிருக்கும். அதன் அடிமரம் முத்தாலும், அதன் கிளைகள் பச்சை மரகதத்தாலும், அதன் இலைகள் ஸுன்துஸ் பட்டினாலுமிருக்கின்றன.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: சொர்க்கத்தில் ஒரு மரம் உள்ளது. அதன் நிழலில் (மிக வேகமாகப்) பயணிப்பவர் (அதில்) நூறாண்டுகள் (பயணித்தபடி) சென்றுகொண்டேயிருப்பார். ஆனால், அவரால் அதைக்

கடக்க முடியாது. (அந்த அளவுக்கு அது பெரிய மரமாகும்.) நீங்கள் விரும்பினால் ,وَّظِلٍّ مَّمْدُوْدٍ (குர்ஆன் : 56:30) "(படர்ந்து விரிந்த) நீண்ட நிழலிலும் அவர்கள் இருப்பார்கள்" எனும் வசனத்தை ஓதிக் கொள்ளுங்கள் எழுபதாயிரம் கிளைகள் அந்த மரத்தில் இருக்கின்றன. அதன் மேற்கொப்பின் நுனி அர்ஷின் அடியைத் தொட்டுக் கொண்டிருக்கிறது. அதன் அடிக்கொப்பு இப்பூமண்டலத்தின் வானத்திலிருக்கிறது.

சுவர்க்கத்திலுள்ள எந்த வீடும், மாளிகையும், குப்பாவும், ஆசனங்களும், கட்டில்களும் அதன் கிளையின் கீழ் இருக்கின்றன. அவற்றிற்கு அக்கிளை நிழலிடுகிறது. ஜனங்கள் விரும்பும் கனிகள் யாவும் அதில் உண்டு என்பதாகக் கூறினார்கள்.
இம்மரத்தின் அஸ்திபாரம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது வீட்டிலிருக்கிறது. அதன் கிளைகள் சுவர்க்கவாசிகளது வீடுகள் யாவற்றினும் பிரிந்து பரவி இருக்கின்றன.
இதனை அல்லாஹு தஆலா தன் குத்ரத் என்னும் கரத்தால் நட்டு வைத்திருக்கிறான். இதன் அஸ்திபாரத்திலிருந்து கற்பூரம், ஸல்ஸபீல் ஆகிய இரு ஊற்றுகளிருக்கின்றன. அதில் சகலவிதமான கனிகளும் பூக்களும், கருப்பைத் தவிரவுள்ள வர்ணங்களுமிருக்கின்றன.
உயர்ந்தோனும் வளமிக்கோனுமான அருளாளன் அல்லாஹ், முத்தாலான ஒரு வித்தைச் சொர்க்கத்தில் தனது கரத்தால் ஊன்றி. உயர்ந்து வளருமாறு அதற்கு உத்தரவிட்டான். உயர்ந்தோனும் வளமிக்கோனுமான அல்லாஹ் நாடிய இடம்வரை அது நீண்டு வளர்ந்தது. அதன் வேரிலிருந்துதான் தேன், மது, நீர், பால் ஆகியவற்றால் ஆன அ சொர்க்க நதிகளின் ஊற்றுகள் வெளிப்பட்டன.
( நூல் தஃப்சீர் தபரீ )

ஒவ்வொரு இலையும் ஒரு உம்மத்துக்கு நிழலிடுகிறது. ஒவ்வொரு இலையிலும் ஒரு மலக்கிருந்து, அல்லாஹு தஆலாவைப் பலவித தஸ்பீஹுகளால் திக்ருச் செய்கிறார் என்பதாக ஃபத்ஹுல் கரீம் என்ற கிரந்தத்தில் இம்மரத்தைக் குறித்து எழுதப்பட்டிருக்கிறது.
(சன்மார்க்கத்துக்கு) இணக்கமான கிரியைகள் என்பதற்கு தஜ்கியத்துல் கல்பு அதாவது அக சுத்தம் செய்தல் என்பது கருத்து. பித்ரத்துல் அஸ்லிய்யா என்னும் இயற்கை அமைப்பையும், ஸிஃபத்துகள் என்னும் தன்மைகளில் பரிபூரணத்தையும் அடைவதுதான் அவர்களுக்குள்ள சோபனம். "இருதயம் என்ற சுவர்க்கத்தில் அதாவது ஸிஃபத்துகள் என்னும் சுவர்க்கத்தில் பிரவேசிப்பது ஒதுங்குமிடத்தில் அழகு என்றும் சில பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள்.
தன் வயதில் ஒருகண நேரமாவது அல்லாஹு தஆலாவுடைய தியானத்தில் அவரது இருதயம் மணம் பெற்றும், தன் இதயத்துடன் ஒரு நேரமாவது தன் றப்பின்பால் மீளுகிறவருக்குத்தான் சோபனம் என்பதாக ஹரீரீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறியிருக்கிறார்கள்.
ர.ரா
தகவலுக்காக : "கின்னஸ் உலக சாதனை ரெகார்ட்ஸ் படி, ஆந்திரபிரதேசத்தில், கதிரி, அனந்தபூர் என்ற இடத்தில் உள்ள ஆலமரம் தான் உலகிலேயே மிகப் பெரியது. திம்மம்மா மாரிமனு என அழைக்கப்படுகிறது இந்த ஆல மரம். 19107 சதுர மீட்டர் (4721 ஏக்கர்) நிலப்பரப்பில் இந்த ஆலமரம் பரவியுள்ளது.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 72
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 36




كَذٰلِكَ اَرْسَلْنٰكَ فِىْۤ اُمَّةٍ قَدْ خَلَتْ مِنْ قَبْلِهَاۤ اُمَمٌ لِّـتَتْلُوَا۟ عَلَيْهِمُ الَّذِىْۤ اَوْحَيْنَاۤ اِلَيْكَ وَ هُمْ يَكْفُرُوْنَ بِالرَّحْمٰنِ قُلْ هُوَ رَبِّىْ لَاۤ اِلٰهَ اِلَّا هُوَ عَلَيْهِ تَوَكَّلْتُ وَاِلَيْهِ مَتَابِ
(நபியே!) நாம் உம்மை இவ்வாறே ஒரு கூட்டத்தாரிடம் அனுப்பி வைத்தோம்; இவர்களுக்கு முன்னரும் பல கூட்டத்தினர் நிச்சயமாகச் சென்றிருக்கிறார்கள்; நாம் உம் மீது எதை வஹீயாக அறிவித்தோமோ அதை இவர்களுக்கு ஓதிக்காண்பிப்பதற்காக (உம்மை அனுப்பினோம்);
ஆனால் இவர்களோ அர்ரஹ்மா(ன் எனும் அருள் மிக்க இறைவ)னையே நிராகரிக்கின்றனர். அவர்களிடம்: “அவனே என் இறைவன்; அவனைத் தவிர வேறு நாயன் எவனுமில்லை; அவன் மீதே நான் முழுமையாக நம்பிக்கை வைத்திருக்கிறேன். அவனிடமே (என்னுடைய) மீட்சியும் இருக்கிறது” என்று நீர் கூறுவீராக!
(குர்ஆன் : 13:30)
அவர்களுக்கு முன்னர் நாம் எத்தனையோ தலைமுறையினரை அழித்திருக்கிறோம் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா? பூமியில் நாம் உங்களுக்கு செய்து தராத வசதிகளையெல்லாம் அவர்களுக்குச் செய்து கொடுத்திருந்தோம்; (குர்ஆன் : 6:6)
இன்னும், இவர்களைவிட மிக்க அழகான தளவாடங்களையும், தோற்றத்தையும் பெற்றிருந்த எத்தனையோ தலைமுறைகளை இவர்களுக்கு முன் நாம் அழித்திருக்கிறோம். (குர்ஆன் : 19:74)
அநியாயம் செய்த எத்தனையோ ஊ(ரா)ர்களை நாம் அழித்திருக்கிறோம். அவற்றின் முகடுகள் மீது அவை விழுந்து கிடக்கின்றன; எத்தனையோ கிணறுகள் பாழடைந்து கிடக்கின்றன; எத்தனையோ வலுவான மாளிகைகள் (பாழ்பட்டுக் கிடக்கின்றன).
(குர்ஆன் : 22:45)

இது மாதிரி பல வரலாற்றை பாடமாக திருக்குர்ஆனில் சொல்லிவிட்டு
நபி (ஸல்) அவர்களை மக்காவிலுள்ள முஷ்ரிக்குகளிடம் அனுப்பிவைத்தான்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரு என்னுமிடத்தில் யா அல்லாஹ் யா ரஹ்மான் என்று இறைவனது திருப்பெயர்களை கூறி பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்கள்.
இதையறிந்த அபூஜஹில் அதனை செவியேற்று, அந்த முஷ்ரிக்குகளிடம் வந்து, - "முஹம்மது, 'அல்லாஹ்'- 'ரஹ்மான்' ஆகிய இரண்டு நாயனை பிரார்த்திக்கிறார். நமக்கு தெரிந்த 'ரஹ்மான்' யமாமாவிலுள்ள முஸைலமத்துல் கத்தாபு என்பவர் பிரார்த்திக்கும் 'ரஹ்மான் 'யைத்தான் தெரியும் "என்று கூறினான்.
قُلْ هُوَ رَبِّىْ
"அவன் என்னுடைய நாயன் என்று நீர் கூறுவீராக "என்பதிலிருந்து கடைசி வரை உள்ள வசனத்தை இறைவன் அருளினான்.
முஸைலமத்துல் கத்தாபு என்பவன் ரஹ்மான் என்று பிரார்த்திப்பது வழக்கம், அப்பொழுது இறைவன் இந்த ஆயத்தின் பிற்பகுதியாகிய قُلْ هُوَرَبي அவன் என்னுடைய நாயன் என்று நீர் கூறுவீராக என்பதிலிருந்து கடைசி வரையுள்ள வசனத்தை அருளினான்.
உம்மத்துகள் அல்லாஹ்வை நிராகரிக்கும் போது "ரஹ்மான்" என்ற பதத்தையும் நிராகரித்து வந்திருக்கிறார்கள். ஏனெனில்,
ரஹ்மானிய்யத் - யா ரஹ்மான் - அளவிலா அருளாளன் (அதாவது இம்மையில் நல்லவர் பொல்லாதவர் ஆகிய யாவருக்கும் சமமாக கிருபை செய்தலானது) அந்த கிருபை அருள் சிருஷ்டிப் பொருள்களை உண்டு பண்ணுவதைத் தேடுகிறது.
கஹ்ஹாரிய்யத்- யா கஹ்ஹார் - (அதாவது அடக்கியாளும் தன்மை),
வாஹிதிய்யத் - யா வாஹிது (அதாவது தன்னுடன் ஒருவரும் துணை இருக்கலாகாது என்பதைத் தேடுகிறது) .
ஆகவே, சிருஷ்டிப் பொருள்களை உண்டு பண்ணும் விஷயத்தில் கஹ்ஹாரிய்யத் என்னும் ஆளும் தன்மையை ரஹ்மானிய்யத் என்னும் கிருபை தன்மை மிகைத்து விட்டது. இவ்விரகசியத்தினால்தான் வானங்களிலும் பூமியிலுமுள்ள யாவரும் ரஹ்மானிடத்தில் அடியாராக அல்லாமல் வருவதில்லை" என்று இறைவன் கூறியுள்ளான்.

அப்பால், ரசூல்மார்களையும், அவர்களுடன் வேதத்தையும், - அவர்களுக்கு அவர்கள் ஓதிக் காண்பித்து, அல்லாஹு தஆலா மாத்திரம் (தனியாக) ஏகாந்தமாக இருந்த நாட்களையும், அப்புறம் அவர்களை உற்பத்தி செய்து, இம்மையிலிருந்து உண்மையின்பால் அவர்களை வெளிப்படுத்திய நாட்களையும் அவர்களுக்கு நினைவூட்டவும் அல்லாஹு தஆலா அனுப்பினான்.
அவன்தான் ஒவ்வொரு வஸ்துவுக்கும் றப்பாகவும். சிருஷ்டிக் கர்த்தாவாகவும் இருக்கிறான். அவனைத் தவிர வணக்கத்துக்கு உரியவன் வேறு யாருமில்லை. அவனிடமேதான் சிருஷ்டிப் பொருள்களது திரும்புகையும் சேருகையும் இருக்கிறது என்பதாக தாவீலாத்து ன்னஜ்மிய்யா என்னும் கிரந்தத்தில் எழுதப்பட்டிருக்கிறது.
அல்லாஹ் அன்பை நூறாகப் பங்கிட்டான். அதில் தொண்ணூற்று ஒன்பது பங்கைத் தன்னிடம் வைத்துக்கொண்டான். (மீதிமிருக்கும்) ஒன்றையே பூமியில் இறக்கினான்.
இந்த ஒரு பங்கினால் தான் படைப்பினங்கள் பரஸ்பரம் பாசம் காட்டுகின்றன. எந்த அளவிற்கென்றால், மிதித்து விடுவோமோ என்ற அச்சத்தினால் குதிரை தன்னுடைய குட்டியை விட்டுக் கால் குளம்பைத் தூக்கிக் கொள்கிறது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.புஹாரி : 3194 அபூஹுரைரா (ரலி).

►அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா அறிவித்தார்: அல்லாஹ்வுக்கு நூறு (பாகங்கள்) கருணை உள்ளது, மேலும் அவர் இந்த ஒரு கருணையிலிருந்து ஜின்கள் மற்றும் மனிதர்கள் மற்றும் பூச்சிகள் மற்றும் அதன் மீது இறக்கியுள்ளார். அதனால்தான் அவர்கள் ஒருவரையொருவர் நேசிப்பதும், ஒருவருக்கொருவர் கருணை காட்டுவதும், மிருகம் கூட தன் குட்டியை பாசத்துடன் நடத்துவதும், அல்லாஹ் தொண்ணூற்றொன்பது பங்கு கருணையை ஒதுக்கி வைத்துள்ளான்.
{ஸாஹிஹ் முஸ்லிம்:புத்தகம்:37, ஹதீஸ்:6631}

►அபு ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறுவதை நான் கேட்டேன், 'அல்லாஹ் கருணையை நூற்றுக்கணக்கான பகுதிகளாகப் பிரித்து, தொண்ணூற்றொன்பது பாகங்களைத் தன்னிடம் வைத்து, ஒரு பகுதியை பூமியில் இறக்கினான். . அதனாலேயே, அதன் ஒரு தனிப் பகுதி, அவனுடைய படைப்புகள் ஒன்றுக்கொன்று கருணையுள்ளவையாகும், அதனால் கழுதை கூட தன் குட்டி மிருகத்தை மிதித்து விடாதபடி தன் குளம்புகளை உயர்த்துகிறது.'' [ஸஹீஹ் புகாரி:புத்தகம்:73 ஹதீஸ் :29]
மற்ற தொண்ணூற்றொன்பது பாகங்களை அல்லாஹ் நியாயத்தீர்ப்பு நாளுக்காக ஒதுக்கினான். அவர் இறக்கியருளிய கருணையின் ஒரு பகுதியே, உயிரினங்கள் முதன்முதலில் தோன்றியதிலிருந்து, காலத்தின் முடிவில் அவற்றின் இருப்பு முடிவடையும் வரை, பூமியில் எந்த மற்றும் அனைத்து உயிரினங்களாலும் பார்க்கப்படும் அனைத்து அன்புக்கும் அக்கறைக்கும் காரணமாகும். இந்த கருணையின் ஒரு பகுதியே, தன் குட்டியை மிதிக்காமல், ஒரு பூனை தன் குட்டிகளைக் கீறாமல், ஒரு தாய் தன் குழந்தையை நேசிப்பதால், தன் கால்களை கவனமாக தூக்குகிறது.
இன்று பூமியில் 10-100 வெவ்வேறு வகையான உயிரினங்கள் உயிருடன் இருப்பதாக மதிப்பிடப்பட்டுள்ளது, மேலும் ஒவ்வொரு இனத்திலும் எண்ணற்ற எண்ணிக்கையிலான உயிரினங்கள் உள்ளன. இந்த அன்பின் கூட்டுத்தொகை கற்பனை செய்வது கடினம். இன்னும் இது அல்லாஹ்வின் கருணையில் நூறில் ஒரு பங்கு கூட இல்லை.

►"அல்லாஹ் தஆலாவின் கருணை வரம்பற்றது என்பதன் காரணமாக இந்த நூறு பகுதிகள் அல்லாஹ்வின் அடிமைகளின் கருணையுடன் தொடர்புடையவை என்று ஹாபிஸ் இப்னு ஹஜர் (ரலி அல்லாஹு அன்ஹு) விளக்குகிறார்."
பறவைகள் கண்டம் விட்டு கண்டம் தாண்டும் பாதையை அதனுள் நுண்ணறிவாக புகட்டியதும் , தேனீக்களுக்கு தேன் இருக்குமிடத்தை 'வஹி'யாக அறிவித்ததும் வல்ல ரஹ்மானியத் என்னும் கிருபை கடாச்சாரம் ஆகும்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 73**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 37**

وَلَوْ اَنَّ قُرْاٰنًا سُيِّرَتْ بِهِ الْجِبَالُ اَوْ قُطِّعَتْ بِهِ الْاَرْضُ اَوْ كُلِّمَ بِهِ الْمَوْتٰى بَلْ لِّلّٰهِ الْاَمْرُ جَمِيْعًا اَفَلَمْ يَايْـئَـسِ الَّذِيْنَ اٰمَنُوْۤا اَنْ لَّوْ يَشَآءُ اللّٰهُ لَهَدَى النَّاسَ جَمِيْعًا وَلَا يَزَالُ الَّذِيْنَ كَفَرُوْا تُصِيْبُهُمْ بِمَا صَنَعُوْا قَارِعَةٌ اَوْ تَحُلُّ قَرِيْبًا مِّنْ دَارِهِمْ حَتّٰى يَاْتِىَ وَعْدُ اللّٰهِ اِنَّ اللّٰهَ لَا يُخْلِفُ الْمِيْعَادَ
நிச்சயமாக குர்ஆன் - அதனைக் கொண்டு மலைகளை நகரும்படிச் செய்தாலும், அல்லது அதனைக் கொண்டு பூமியைத் துண்டு துண்டாக்கினாலும், அல்லது அதனைக் கொண்டு இறந்தவர்கள் பேசும்படிச் செய்யப்பட்டாலும் (காஃபிர்கள் விசுவாசங்கொள்ளவே மாட்டார்கள்),
ஆயினும் எல்லாக்காரியங்களும் அல்லாஹ்வுக்கே உரியன; ஆகவே, அல்லாஹ் நாடியிருந்தால் மனிதர்கள் அனைவருக்கும் நேர்வழி காட்டியிருப்பான் என்பதை ஈமான் கொண்டவர்கள் அறியவில்லையா?
நிராகரிப்போரை, அவர்கள் செய்து கொண்டிருக்கும் (தீச்) செயல்கள் காரணமாக ஏதேனும் ஒரு கேடு வந்தடைந்து கொண்டேயிருக்கும், அல்லது அவர்களுடைய இருப்பிடங்களுக்குச் சமீபமாகவேனும், (அக்கேடு) சம்பவித்து, (உங்கள் வெற்றி குறித்து) அல்லாஹ்வின் வாக்குறுதி நிறைவேறியே தீரும் - நிச்சயமாக அல்லாஹ் (தன்) வாக்குறுதியில் மாறுசெய்யமாட்டான். (குர்ஆன் : 13:31)

இந்த வசனம் இறக்கப்பட்ட வரலாறு:--
ஒருநாள் திருக் கஃபாவின் பின்னால் குறைஷிகளின் தலைவர்களான அபூஜஹ்லும், அப்துல்லாஹ் பின் உமய்யாவும் உட்கார்ந்து கொண்டிருந்தனர்.
அந்த இடத்திற்குப் பெருமானார் (ஸல்) அவர்கள் வந்து வழக்கப்படி அவர்களை இஸ்லாத்தின்பால் அழைத்தார்கள். அப்பொழுது அவ்விருவரில் அப்துல்லாஹ் பின் உமய்யா பெருமானாரை நோக்கி,
''உம்மை நாங்கள் பின்பற்ற வேண்டுமென்றால், அந்த குர்ஆனைக் கொண்டு மக்காவின் மலைகளையெல்லாம் நடத்திச் செல்லும். அவைகளால் நமக்கு பூமியில் நெருக்கடியே இருந்து வருகிறது. அவை அகன்று விட்டால் விரிவான விவசாயம் செய்யலாம்."
''அத்துடன் ஆறுகளையும், ஊற்றுக்களையும் ஓடுமாறு செய்யும். மரங்களை நடலாம். பலவிதத் தோட்டங்களை உற்பத்தி செய்யலாம்.
"நீர் கூறுவதுபோல் தாவூது (நபி) க்கு உமது இறைவன் மலைகளை வயப்படுத்திக் கொடுத்திருக்கின்றான். அவைகள் அவர் பின்னால் சென்றிருக்கின்றன. ஆகையால், உமக்கு உமது இறைவன் இவ்வாறு செய்து கொடுப்பது கடினமல்ல."
"அல்லது காற்றை எங்களுக்கு வசப்படுத்திக் கொடுக்குமாறு செய்யும். அதன்மூலம் எங்களது வர்த்தகப் பொருட்களுடன் ஷாமுக்குச் சென்று எங்களது தேவைகளை நிறைவேற்றிக் கொண்டு அன்றே திரும்பி விடுவோம். நீர் கூறுவது போல் ஸுலைமான் நபிக்கு இவ்வாறு செய்து கொடுத்திருக்கிற உமது இறைவனுக்கு இது எளிதேயாகும்.
"அல்லது நமது மூதாதையரான 'குஸைய்யு' அல்லது மரித்தவர்களில் நீர் விரும்புகிற யாரையாவது குர்ஆனைக் கொண்டு உயிர்பெறச் செய்து எங்களிடம் கொண்டு வந்தால், நீர் சொல்லிக் கொண்டு வருவது சரியா, தப்பா என அவர்களிடம் கேட்டு நாங்கள் தெரிந்து கொள்ளலாம். உமது எண்ணப்படி ஈஸா நபிக்கு இவ்வாறு உமது இறைவன் செய்து கொடுத்திருக்கும்போது உமக்கும் செய்து கொடுப்பது எளிதல்லவா?" எனக் கூறினார். அப்பொழுதுதான் இவ்வசனம் இறக்கப்பட்டிருக்கிறது.
அறிவித்தவர் : ஹளரத் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி)
(ஆதார நூல்கள்: காஜின், தன்தாவி, அஹ்ஸனுத் தஃபாஸீர், இப்னு அபீஹாதீம் ஆகியவை.

நிராகரித்துக் கொண்டிருப்போர் மூன்று அடையாளங்களைக் கேட்டனர்.

(1) திருக்குர்ஆனைக் கொண்டு மலைகள் அவற்றின் இடங்களிலிருந்து அகற்றப்பட்டும் விடவேண்டும். அதாவது குர்ஆனை ஓதியதும் மலைகளெல்லாம் பிடுங்கிக் கொண்டு நடந்து எங்காவது சென்றுவிட வேண்டும்.
(2) பூமி சிதறிவிட வேண்டும்
(3) இறந்தோர் உயிர்பெற்று எழுந்து வந்து பேச வேண்டும்.
மேற்கண்ட வசனத்தின் நிறைவில் "நிராகரிப்போரை, அவர்கள் செய்து கொண்டிருக்கும் (தீச்) செயல்கள் காரணமாக ஏதேனும் ஒரு கேடு வந்தடைந்து கொண்டேயிருக்கும், அல்லது அவர்களுடைய இருப்பிடங்களுக்குச் சமீபமாகவேனும், (அக்கேடு) சம்பவித்து, (உங்கள் வெற்றி குறித்து) அல்லாஹ்வின் வாக்குறுதி நிறைவேறியே தீரும் - நிச்சயமாக அல்லாஹ் (தன்) வாக்குறுதியில் மாறுசெய்யமாட்டான். (குர்ஆன் : 13:31)
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள். திருமக்காவை ஹிஜ்ரத்து செய்து மதீனாவில் குடியேறிய பிறகு. முஸ்லிம்களுக்கும் மக்கத்து குறைஷிகளுக்கும் பல சண்டைகள் நிகழ்ந்தன. இதன் பயனாக குறைஷிக் காஃபிர்கள், தங்கள் பகைவர்களான முஸ்லிம்கள் தங்கள் மீது படையெடுத்து வந்து விடுவார்களோ என்ற பீதியில் இருந்து கொண்டிருந்தனர். அவர்களிலுள்ள பிரபலமானவர்களில் பெரும்பாலர் கைது செய்யப்பட்டும் கொல்லப்பட்டும் போயினர்.
பின்னர் ஹிஜ்ரீ 6ம் வருடத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், தங்கள் தோழர்களுடன் திருமக்காவுக்குப் பக்கத்திலுள்ள ஹுதைபிய்யா என்ற இடம் வந்து தங்கியிருந்தார்கள். இதனாலும் காஃபிர்களுக்குத் திடுக்கம் இருந்தது.

இறுதியாக திருமக்கா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் கைப்பற்றப் பட்டு, காஃபிர்கள் இனி என்றென்றைக்கும் தலையெடுக்கா வண்ணம் ஒடுக்கப்பட்டனர்.
திருக்குர்ஆனைக் கொண்டு
(1) மலைகள் அவற்றின் இடங்களிலிருந்து அகற்றப்பட்டும் விடவேண்டும். அதாவது குர்ஆனை ஓதியதும் மலைகளெல்லாம் பிடுங்கிக் கொண்டு நடந்து எங்காவது சென்றுவிட வேண்டும்.
(2) பூமி சிதறிவிட வேண்டும்
(3) இறந்தோர் உயிர்பெற்று எழுந்து வந்து பேச வேண்டும்.
முடியுமா ? ஆய்வு செய்வோம்.
"அணு" என்கிற இம்மி பொருள் தன் பிறப்பில் சூரிய மண்டலமாகத் திகழ்கிறது. அணுவின் நடுவில் ஓர் இறுகிய உட்கரு .அதற்கு ' நியூக்கிளியஸ் என்று பெயர்.இந்த உட்கருவைக் சுற்றி கோள்களைப் போல எலக்ட்ரான்கள் சதா சுழன்று கொண்டிருக்கிறது.
கொஞ்சம் கற்பனையில் சிந்தியுங்கள் சூரிய மண்டலத்தில் நட்ட நடு மையமாக திகழும் சூரியனை தகர்த்தால் என்ன நடக்கும் ?
மொத்த சூரியனின் அத்தனை சக்தியும் கணக்கில்லாமல் அளப்பரிக்கும் .அந்த சக்தியை எப்படி கட்டுப்படுத்த முடியும் ?
அதே மாதிரி அணுவின் நடுவில் உள்ள உட்கருவான நியூக்கிளியசை தகர்த்தால் ...?
அணுவின் உள்ளே பூட்டி வைத்திருக்கும் சக்தியின் அளவு கிட்டத்தட்ட நம்பவே முடியாதபடி அவ்வளவு அதிகமானது . அந்த அணுவின் எடையைப் போல் #ஒன்பது- கோடி மடங்காக வெளிப்படும் .
இரண்டு பவுண்ட் எடையுள்ள பொருள் முழுவதும் சக்தியாக மாற்றப்படக் கூடுமானால் அது 2200 கோடி கிலோ வாட் சக்தியை அளிக்கும் . மொத்த அமெரிக்காவிற்கு இரண்டு மாதத்திற்குரிய மின்சாரத்தை அளிக்கும்
இது என்ன கணக்கு ஒன்பது கோடி ?
ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் என்கிற விஞ்ஞானிக்கு " பொருள் எப்படி அழிவு பெறக் கூடும் ? புதிதாகச் சக்தி எப்படி தோன்றக் கூடும் " என்ற எண்ணம் வந்தது . இதை ஆய்வு செய்த போது , உலகமே வியக்கும் ஒரு அதிசயமான சமன்பாட்டைக் கண்டார் . அதுதான்
E = MC 2 இதில் E = அளப்பரிக்கும் ஆற்றல் ; M = mass பொருளின் எடை
C = ஒளியின் வேகம் velocity of light
பொருளும் சக்தியும் பின்னிப் பிணைந்தவைகள் . அதாவது பொருள் அழியும் போது சக்தி வெளிப்படும் . மொத்த சக்தியும் ஒன்றாக பரிணமிக்கும் போது பொருள் திரளலாம் ; பொருள் சக்தியாக , சக்தி பொருளாக மாறும் இதனிடையே ஒளியின் வேகம் இதில் ஏன் புகுந்தது ?
பொருளை அழித்து சக்தியாக மாறும் போது , பெறப்படும் சக்தியின் வேகம் ஒளியின் வேகம் அதாவது 1 நொடிக்கு 3 லட்சம் கி.மீ வேகம் . மேலும் ஒளியின் வேகம் எதன் பொருட்டும் மாறாதத் தன்மையுடையது. இதன் பெருக்கம் அணுவின் எடையைப் போல் ஒன்பது கோடி மடங்காக உள்ளது.
E = MC 2 என்பது அணுவிற்கு மட்டுமல்லாது ஒட்டுமொத்த பிரபஞ்சத்தின இந்த சூத்திரம் சூட்சம ஒழுங்கு என்கிறார்கள் .
இவ்வளவு அதீதமான இந்த மூன்று எழுத்தையும் வல்ல ரஹ்மான் நிச்சயமாக குர்ஆனில் சொல்லி இருக்க வேண்டும் .
الٓمٓ
அலிஃப்; லாம்; மீம்.- "அலிஃப்" E (அல்லாஹுதஆலா, வழங்கிய குர்ஆனின் ஆற்றல் )
" லாம் " M (வானவர் ஜிப்ரீல் ) - அலைஹிஸ்ஸலாம் - அவர்கள் மூலமாக,
"மீம் " C (நபி முஹம்மது அவர்களுக்கு) அருட்செய்த திருக்குர்ஆனாகிய)
(அல்குர்ஆன் : 2:1)
திருக்குர்ஆனின் அளப்பெரும் சக்தி :-

பூமியிலுள்ள மரங்கள் (செடிகள்) அனைத்தும் எழுது கோல்களாகவும், கடல் நீரை மையாகவும் வைத்து (அது தீர்ந்து) பின்னும் ஏழு கடல் நீரையும் மையாக வைத்து எழுதியபோதிலும் அல்லாஹ்வுடைய வசனங்கள் (எழுதி) முடிவு பெறாது. நிச்சயமாக அல்லாஹ் (அனைத்தையும்) மிகைத்தவனும் ஞானமுடைய வனாகவும் இருக்கின்றான். (குர்ஆன் : 31:27)
முடிவு பெறாது என்பது அளவிடமுடியாது ( infinity ) மேற்சொன்ன அணுவின் சக்தியைப் போல் அளவிட முடியாது .
அலிஃப் ; லாம் ; மீம் என்று தொடங்கும் குர்ஆன் அத்தியாயங்கள் 8 அதாவது ( சூரா 2 , 3 , 7 , 13 , 29 , 30 , 31 , 32 )

நபி (ஸல்) அவர்களுக்கு குர்ஆன் முழுமையாக இறக்கப்பட்டு நபித்தோழர்களும் போட்டிப் போட்டுக் கொண்டு மனனம் செய்து கொண்டிருக்கிறார்கள் .
அந்த சமயம் நபியவர்கள் , தோழர்களிடம் யாரெல்லாம் மொத்த முழு குர்ஆனையும் நன்கு விளங்கி மனனம் செய்திருக்கிறார்கள் என்பதைச் சோதிக்க எண்ணி , ஒரு போட்டி வைக்கிறார்கள் .
நபித்தோழர்களின் முன்னிலையில் மிக அழகான ஒரு குதிரை கொண்டு வரப்படுகிறது "தோழர்களே ! இந்த குதிரையின் லகானை பிடித்து ஏறி அதன் மீது அமர்வதற்குள் குர்ஆனை யார் ஓதி முடிக்கிறார்களோ அவர்களுக்கு இந்தக் குதிரை பரிசாக அளிக்கப்படும்".
அபூபக்கர் (ரலி) , உமர் (ரலி) , உஸ்மான் (ரலி) இன்னும் பிற தோழர்கள் தீவிரமாக சிந்தித்து . யாரும் போட்டிக்கு முன் வராத போது , அலீ (ரலி) அவர்கள் நபிகளாரிடம் இருந்து வாங்கி, குதிரையின் லகானில் மிதித்து ஏறி அமர்வதற்குள் "அலிஃப் லாம் மீம் " என்று உரக்க சொல்லி புன்முறுவல் பூத்தவர்களாக குதிரையில் ஏறி வட்டமிடுகிறார்கள் .
நபிகளார் , அலீ (ரலி) அவர்களை வெற்றியாளர்களாக அறிவிக்கிறார்கள்.
மொத்த முழு குர்ஆனும் இந்த மூன்று எழுத்துக்குள் அடங்கி விட்டதாக ஞானத்தின் தலைவாயிலான அலீ (ரலி) கருதினார்கள் .
அப்படி என்றால் இந்த பிரபஞ்சத்தின் சூட்சம ஒழுங்காக அலிஃப் .லாம் .மீம் ஏன் இருக்க முடியாது ? இருக்கலாம் அல்லவா ?
சரி E = MC 2 ல் C (square ) இரு மடங்கு என்பதாக சூத்திரம் சொல்கிறதே அப்படியென்றால் , மீம் க்கு மேலே ஏதாவது குறியீடு இருக்க வேண்டுமே ..
ஓஹோ .. .... அதுவா 3 வது சூராவான "ஆல இம்ரான் அத்தியாயத்தின் தொடக்க வசனமான
الٓمّٓ
அலிஃப்; லாம்; மீம். (அல்குர்ஆன் : 3:1)
இந்த அத்தியாயத்தின் முதல் வசனமான மீமுக்கு மட்டுமே " ஜபர் " என்னும் அகரக் குறியீடு வழங்கப்பட்டுள்ளது .மற்ற சூராக்களின் மீம் களுக்கு ஜபர் குறி வழங்கப்படவில்லை. இந்த ஜபர் குறி தான் இரு மடங்கான square ஆக இருக்குமோ ? வல்ல ரஹ்மானே அறிவான் .
முடிவு பெறாது என்பது அளவிடமுடியாது ( infinity ) மேற்சொன்ன அணுவின் சக்தியைப் போல் அளவிட முடியாத சக்தி பொதிந்த இத்திருக்குர்ஆனைக் கொண்டு ,
(1) மலைகள் அவற்றின் இடங்களிலிருந்து அகற்றப்பட்டும் விடவேண்டும். அதாவது குர்ஆனை ஓதியதும் மலைகளெல்லாம் பிடுங்கிக் கொண்டு நடந்து எங்காவது சென்றுவிட வேண்டும்.
(2) பூமி சிதறிவிட வேண்டும்
(3) இறந்தோர் உயிர்பெற்று எழுந்து வந்து பேச வேண்டும்.
( இத்திருக்குர்ஆனைக் கொண்டு முடியுமா ? முடியும். அளவிட முடியாத சக்தி பொதிந்த இத்திருக்குர்ஆனைக் கொண்டு முடியும் )

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 74**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 38**




وَلَـقَدِ اسْتُهْزِئَ بِرُسُلٍ مِّنْ قَبْلِكَ فَاَمْلَيْتُ لِلَّذِيْنَ كَفَرُوْا ثُمَّ اَخَذْتُهُمْ فَكَيْفَ كَانَ عِقَابِ
(நபியே!) நிச்சயமாக உமக்கு முன்னர் (வந்து சென்ற நம்) தூதர்களும் (இவ்வாறே) பரிகசிக்கப் பட்டனர்; ஆகவே, நிராகரித்துக் கொண்டிருந்தோருக்கு நான் தவணையளித்துப் பின்னர் அவர்களைப் பிடித்துக் கொண்டேன்; ஆகவே, (அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட) என் தண்டனை எவ்வாறு இருந்தது? (தெரியுமா ? ) (குர்ஆன் : 13:32)
உமது சமூகத்தினர் உம்மை நிராகரித்தது, பரிகாசம் செய்து, அற்பமாக நினைப்பது போன்று உமக்கு முன்னர் வந்த என்னுடைய தூதர்கள் அனைவரையும் அவர்கள் சமூகத்தினர் நிராகரித்து, தொந்தரவு செய்து, அற்பமாக மதித்தனர். ஆனால் உடனே வேதனையை நான் அனுப்பாமல் அவர்களை விட்டு வைத்து பின்னர் அவர்களை நான் வேதனை செய்தேன் என்னுடைய வேதனை அவர்களுக்கு எவ்வாறு இருந்தது தெரியுமா ?

"இஸ்லாம் மனித வாழ்வின் எல்லாத்துறைகளிலும் வழி காட்டும் ஒரு மார்க்கமாக விளங்குவதால், சமூகத்தில் ஒருவருக்கொருவர் எவ்வாறு பழகிக் கொள்ள வேண்டும் என்பதை தெளிவாகக் கூறுகின்றது. அவற்றுள் ஒருவரை யொருவர் பரிகாசம் செய்து,கேலி பண்ணி கோபமூட்டும் பழக்கத்தை முற்றும் கண்டிக்கின்றது.
"மக்கள் தொந்தரவு செய்யப்படுவது ஒரு விஷயத்தால் அல்ல, ஆனால் ஒரு விஷயத்தைப் பற்றிய அவர்களின் உணர்வால்" - எபிக்டெட்டஸ் (கிரேக்க தத்துவஞானி)
இந்த உணர்வு பரிகாசம் செய்யப்பட்டவருக்கு எவ்வளவு பெரிய மன அழுத்தத்தை கொடுக்கும் என்பதை அறிய மாட்டார்.
பின்வரும் குர்ஆன் வசனம் இதனை விபரிக்கின்றது. “நம்பிக்கை கொண்டோரை “அவர்கள் சந்திக்கும் போது, “நம்பிக்கை கொண்டுள்ளோம்” எனக் கூறுகின்றனர். தமது ஷைத்தான்களுடன் தனித்திருக்கும் போது “நாங்கள் உங்களைச் சேர்ந்தவர்களே. நாங்கள் (அவர்களை) கேலி செய்வோரே எனக் கூறுகின்றனர்” (குர்ஆன் 2:14)
இதே விடயத்தை அல்லாஹ் 9:64 ம் குர்ஆன் வசனத்திலும் விபரிக்கின்றான்.
எவ்வாறாயினும் கேலி செய்தல் நயவஞ்சகர்களின் பண்பு என்பது தெளிவாகின்றன. எனவே, நாம் மற்றவர்களை கேலி செய்யும் போது அல்லாஹ்வுக்கு வெறுப்பூட்டக் கூடிய ஒரு செயலையே செய்கின்றோம் என்பதை உணர்ந்து அதனை முற்றும் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.
மேலும் மற்றவர்களைக் கேலி செய்வது புத்தியற்றவர்களின் குணம் என்பதை 2:67, 5:58 குர்ஆன் வசனங்கள் சுட்டிக்காட்டுகின்றன.
“ஒரு மாட்டை நீங்கள் அறுக்க வேண்டும் என அல்லாஹ் உங்களுக்கு கட்டளையிடுகின்றான்” என்று மூஸா, தமது சமுதாயத்திடம் கூறிய போது “எங்களைக் கேலிப் பொருளாகக் கருதுகிறாரா?” என்று கேட்டனர். அதற்கு அவர், “அறிவீனனாக நான் ஆவதை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறேன்” என்றார். (குர்ஆன்: 2:67)
இந்தக் குர்ஆன் வசனத்திலிருந்து கேலி செய்வோர் மூடர்கள் என்பதை நன்கு அறிந்து கொள்கின்றோம்."
(இதற்குமுன்) அநீதி இழைத்துக் கொண்டிருந்த எத்தனையோ ஊர்களுக்கு நான் அவகாசம் கொடுத்தேன்; பின்னர் அவற்றைப் பிடித்துக் கொண்டேன்; மேலும் (யாவும்) என்னிடமே மீண்டும் வரவேண்டும். (குர்ஆன் : 22:48)
அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "அநீதியிழைப்பவனுக்கு அல்லாஹ் (இவ்வுலகில் விட்டுக்கொடுத்து) அவகாசமளிப்பான். இறுதியில் அவனைப் பிடித்(துத் தண்டித்)தால் அவனைத் தப்பவிடமாட்டான்" என்று கூறிவிட்டு,
"(நபியே!) அநீதியிழைக்கும் ஊர்(க்காரர்) களைத் தண்டிக்கும்போது, உம்முடைய இறைவனின் பிடி அவ்வாறே இருக்கும். நிச்சயமாக அவனது தண்டணை கடுமையானதும் வதைக்கக்கூடியதும் ஆகும்" (11:102) எனும் வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.
( புகாரி 4686 முஸ்லிம் 5039)

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 74**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 38**

اَفَمَنْ هُوَ قَآىِٕمٌ عَلٰى كُلِّ نَفْسٍ بِمَا كَسَبَتْ وَجَعَلُوْا لِلّٰهِ شُرَكَآءَ قُلْ سَمُّوْهُمْ اَمْ تُنَـبِّـئُــوْنَهٗ بِمَا لَا يَعْلَمُ فِى الْاَرْضِ اَمْ بِظَاهِرٍ مِّنَ الْقَوْلِ بَلْ زُيِّنَ لِلَّذِيْنَ كَفَرُوْا مَكْرُهُمْ وَصُدُّوْا عَنِ السَّبِيْلِ وَمَنْ يُّضْلِلِ اللّٰهُ فَمَا لَهٗ مِنْ هَادٍ

ஒவ்வோர் ஆத்மா சம்பாதிக்கும் ஒவ்வொன்றையும் கண்காணிப்பவன் அவனல்லவா? அப்படியிருந்தும்; அவர்கள் அல்லாஹ்வுக்கு இணைகளை ஏற்படுத்துகின்றார்கள்.
(நபியே!) நீர் கூறும்: "அவர்களின் பெயர்களைக் கூறுங்கள்; அல்லது பூமியிலுள்ள அவன் அறியாதவற்றை நீங்கள் அவனுக்கு அறிவிக்கின்றீர்களா? அல்லது (நீங்கள் கூறுவது) வெறும் வார்த்தைகள் தானா?" என்று. அப்படியல்ல! நிராகரிப்பவர்களுக்கு அவர்களுடைய சூழ்ச்சிகள் அழகாகக் காண்பிக்கப் பட்டுள்ளன; நேர்வழியிலிருந்து அவர்கள் தடுக்கப்பட்டும் விட்டனர். எவரை அல்லாஹ் வழிகெடுக்கிறானோ அவரை நேர் வழியில் செலுத்துபவர் எவருமில்லை. (குர்ஆன் : 13:33)
இங்கு உயர்ந்தோன் அல்லாஹ். ஏக இறைவனான தனக்கு இணை கற்பிப்போரிடம் அடுக்கடுக்கான கேள்விகளை அறிவுபூர்வமாகத் தொடுக்கின்றான்.
எல்லாரையும் படைத்து, கண்காணிக்கின்ற ஆற்றல் மிக்க
அல்லாஹ்வும் அந்த ஆற்றலே இல்லாத பொய்த் தெய்வங்களும் சமமா? அல்லாஹ்வுக்கு இணைகளாக நீங்கள் கருதுகின்றவர்களைக் கொஞ்சம் அறிமுகப்படுத்துங்கள் பார்க்கலாம்! அல்லது அல்லாஹ்வுக்கே தெரியாத ஒன்றை அவனுக்குத் தெரிவிக்கப் போகிறீர்களா? அல்லது உங்கள் வாதம் வெற்றுப் பேச்சா? சொல்லுங்கள். உங்களால் சொல்ல முடியாது. ஷைத்தானின் சூழ்ச்சியில் நீங்கள் சிக்கிவிட்டீர்கள் என்பதுதான் உண்மை
கண்காணிப்பவனும் கண்ணே இல்லாதவையும் ஒன்றா?
"ஒவ்வோர் உயிரும் தேடிக்கொள்கின்றவற்றைக் கண்காணிக்கும் அவனா அவ்வாறு இல்லாத பொய்த்தெய்வங்களுக்குச் சமமானவன் ?" என்று உயர்ந்தோன் அல்லாஹ் இங்கு கேள்வி எழுப்புகின்றான்.
அதாவது உயிருள்ள ஒவ்வொரு வரையும் அல்லாஹ் பாதுகாக்கின்றான். அறிகின்றான்; கண்காணிக்கின்றான். ஒவ்வொருவரும் செய்கின்ற நன்மை அல்லது தீமைகளை அவன் அறிவான். அவனுக்குத் தெரியாதது ஒன்று மில்லை.
வேறு வசனங்களில் அல்லாஹ் கூறுகின்றான்:
நீங்கள் (அனைவரும்) எந்தச் செயலைச் செய்தாலும் அதில் நீங்கள் ஈடுபடும்போது உங்களை நாம் கண்காணிக்காமல் இருப்பதில்லை. ( குர்ஆன் 10:61)
அவன் அறியாமல் ஓர் இலைகூட உதிர்வதில்லை. (6:59)
உங்களில் இரகசியமாகப் பேசுபவரும் உரக்கப் பேசுபவரும், இரவில் (இருட்டில்) மறைந்திருப்பவரும் பகலில் வெளிப்படையாகச் செல்பவரும் (அல்லாஹ்வைப் பொறுத்த வரை) சமமானவர்களே. ( குர்ஆன் 13:10)

அவன் இரகசிய உரையாடலையும், அதைவிட மறைவானவற்றையும் அறிகின்றான். ( குர்ஆன் 20:7 )
நீங்கள் எங்கிருந்தபோதும் அவன் உங்களுடன் இருக்கின்றான். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்வதை உற்று நோக்குபவன் ஆவான் ( குர்ஆன் 57:4)
ஆக, இத்தன்மைகள் உடைய அல்லாஹ். இணைவைப்பாளர்கள் வழிபடுகின்ற சிலைகளைப் போன்றவனா? அச்சிலைகளால் எதையும் கேட்கவோ பார்க்கவோ விளங்கிக்கொள்ளவோ இயலாது. அவை தமக்கோ தம்மை வழிபடுவோருக்கோ ஏற்படும் எந்த இடரையும் அகற்றா
இங்கு ஒவ்வோர் உயிரும் தேடிக் கொள்கின்றவற்றைக் கண்காணிக்கும் அவனா?" என்ற வினா மட்டுமே வசனத்தில் இடம்பெறுகிறது.
இதன் விடையை அடுத்த தொடரின் ஓட்டத்தை வைத்து அறிய முடியும் என்பதால் வசனத்தில் அல்லாஹ் வெளிப்படையாகக் குறிப்பிடவில்லை. அதாவது "அவனா இச்சிலைகளைப் போன்றவன்?" என விடை அமையும்.
அத்தொடர். "அவர்கள் அல்லாஹ்வுக்கு இணைகளைக் கற்பிக்கின்றனர்" என்று சொல்கின்றது. அதாவது இணைகளாக அவர்கள் கருதுகின்ற சிலைகளையும் உருவங்களையும் அல்லாஹ்வுடன் சேர்த்து அவர்கள் வழிபடுகின்றனர்.
நீங்கள் தெரிவிக்கப்போகிறீர்களா?
அடுத்த தொடரில் ( நபியே ! அவர்களிடம்) அவர்களை எங்களுக்கு அறிமுகப்படுத்துங்கள்' என்று சொல்லிவீராக" என அல்லாஹ் கட்டளையிடுகின்றான்.
அதாவது அந்த இணைகளைப் பற்றி எங்களுக்குத் தெரிவியுங்கள். அவற்றின் உண்மை நிலையைத் தெளிவுபடுத்துங்கள். ஏனெனில், அவற்றுக்கு எந்த எதார்த்தமும் இல்லை.
இதனால்தான் அடுத்த தொடர். "அல்லது பூமியில் அவனுக்கே தெரியாத ஒன்றை அவனுக்கு நீங்கள் தெரிவிக்கப்போகிறீர்களா?" என்று கேட்கின்றது.
அதாவது அவனுக்கு இணை என்று ஒன்று கிடையாது. அப்படி ஏதேனும் பூமியில் இருந்திருந்தால் அதை அல்லாஹ் நிச்சயமாக அறிந்தி ருப்பான். ஏனெனில், எந்தப் பொருளும் அவனுக்கு மறைவானதன்று.
அடுத்த தொடர், "அல்லது வெற்றுப் பேச்சுதானா?
(பி ழாஹிரிம் மினல் கவ்ல்)" என்று வினவுகின்றது.
அதாவது இச்சிலைகள் பயனளிக்கும், இடரளிக்கும் என்று நீங்களே எண்ணிக்கொண்டு, 'தெய்வங்கள்' எனப் பெயர் சூட்டி வழிபடுகிறீர்கள்.
மற்றொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான்: அவை நீங்களும் உங்கள் மூதாதையார்களும் சூட்டிக் கொண்ட வெறும் பெயர்களேயன்றி வேறில்லை. அதற்கு அல்லாஹ் எந்தச் சான்றையும் அருளவில்லை (53:23)

அடுத்த தொடரில், "மாறாக, (ஏக இறையை) மறுப்போருக்கு, அவர்களின் சூழ்ச்சி அழகானதாகக் காட்டப்பட்டுள்ளது" என்று அல்லாஹ் தெரிவிக்கின்றான்.
இங்கு 'சூழ்ச்சி' (மக்ர்) என்பது, அவர்களின் வாதத்தைக் குறிக்கும் என்று கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். அதாவது அவர்களிடம் இருக்கும் தவறான கோட்பாடும். அக்கோட்பாட்டுக்கு இரவு பகலாக அவர்கள் செய்யும் பிரசாரமும் அவர்களுக்கு அழகானதாகக் காட்டப்பட்டுள்ளது.
மற்றொரு வசனத்தில் உயர்ந்தோன் அல்லாஹ் கூறுகின்றான்;
அவர்களுக்கு (கெட்ட) நண்பர்கள் சிலரை நாம் நியமித்துள்ளோம். அவர்களுக்கு முன்பும் பின்பும் உள்ளவற்றை அவர்கள் அழகுபடுத்திக் காட்டுகின்றனர். குர்ஆன் (41:25)
"அவர்கள் (இறைவழியிலிருந்து தடுக்கப்பட்டுள்ளனர். அதாவது தங்களது கோட்பாடு சரியானதுதான் என்று அவர்களுக்குக் காட்டப்பட்டதால், இறைவழியிலிருந்து அவர்கள் தடுக்கப்பட்டுவிட்டனர்.
இதையே அடுத்த தொடர் "யாரை அல்லாஹ் வழி தவறச் செய்கின்றானோ அவருக்கு நல்வழி காட்டுபவர் யாரும் இல்லை" என்று கூறுகின்றது.
மற்றொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான்: "யாரை அல்லாஹ் சோதிக்க நாடுகிறானோ அவரை அல்லாஹ்விடமிருந்து காக்க எந்த உபாயத்தையும் (நபியே!) நீர் ஒருபோதும் பெறவே முடியாது. (5:41)
இன்னொரு வசனத்தில், அவர்கள் நல்வழி பெற வேண்டுமென்று நீர் ஆசைப்பட்டாலும், அல்லாஹ் யாரைத் தவறான வழியில் விட்டுவிடுகின்றானோ அவரை நல்வழியில் செலுத்த மாட்டான், அவர்களுக்கு எந்த உதவியாளனும் இல்லை" (16:37) என்று அல்லாஹ் கூறுகின்றான்.
மேற்கண்ட பதிவில் உயர்ந்தோன் அல்லாஹ் கேள்விகளாக கேட்பதன் நுண்ணறிவை கற்றுத் தருகிறான். ஏக இறைவனான தனக்கு இணை கற்பிப்போரிடம் அடுக்கடுக்கான கேள்விகளை அறிவுபூர்வமாகத் தொடுத்து, அதற்குரிய பதிலை அவனுக்குரிய வல்லமையாக நம்மிடம் பதிவு செய்கிறான்.

கேள்விகள் பற்றி உளவியல் வல்லுநர்கள் நிறைய ஆய்வுகள் செய்துள்ளனர். வாழ்க்கைப் பாதைகளில் கேள்வி கேட்கும் திறன் அவசியம். என்ன கேள்விகளைக் கேட்க வேண்டும், எப்போது, எப்படிக் கேட்க வேண்டும் என்பதை அறிவதில் அவை அடங்கும்.
வெவ்வேறு கேள்வி உத்திகளைக் கற்றுக்கொள்வது உங்கள் வாழ்க்கையின் பல அம்சங்களை மேம்படுத்த உதவும்.
கேள்வி கேட்கும் திறன்கள் என்பது கருத்துகள் அல்லது சூழ்நிலைகளை பகுப்பாய்வு செய்வதற்கும் அவற்றைப் பற்றிய தொடர்புடைய கேள்விகளைக் கேட்கவும் உங்களை அனுமதிக்கும் திறன்களாகும். கேட்க வேண்டிய சரியான கேள்விகளைத் தெரிந்துகொள்வதன் மூலம் உங்கள் வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களைப் புரிந்துகொள்ள இந்தத் திறன்கள் உங்களை அனுமதிக்கும்.
தகவலைப் பெறுதல், தெளிவு பெறுதல்,அறிவைச் சோதித்தல் , ஆர்வத்தை வெளிப்படுத்துதல், ஊக்கமளிக்கும் சிந்தனை போன்ற விஷயங்களை கேள்வி கேட்பதில் இருந்து உங்கள் திறனை வளர்த்துக் கொள்ளமுடியும்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 75**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 39**




لَهُمْ عَذَابٌ فِى الْحَيٰوةِ الدُّنْيَا وَلَعَذَابُ الْاٰخِرَةِ اَشَقُّ وَمَا لَهُمْ مِّنَ اللّٰهِ مِنْ وَّاقٍ
அவர்களுக்கு இவ்வுலக வாழ்க்கையிலும் வேதனையுண்டு, மறுமையின் வேதனை மிகக் கடுமையானது - அல்லாஹ்விடமிருந்து அவர்களைக் காப்பாற்றுவோர் எவருமில்லை. (குர்ஆன் : 13:34)
இம்மையின் எதிர்காலம் எப்படி என்று தெரியாதபோது, மறுமையின் காலம் பற்றி எப்படி சிந்திப்பது ?
பொருள் என்றால் (matter) கண்ணால் காணமுடியும். அபொருள் என்றால் (Anti matter ) அபொருளை கண்ணால் காணமுடியாது. ஆனால் அகத்தில் (மனதில்) அதனைக் காணமுடியும். இதைப் பற்றி குவாண்ட இயற்பியல் அழகாக சொல்கிறது, "பொருள் உருவானதே நம் மனதில்தானே " என்று கூறி நிரூபிக்கிறது.
குவாண்டம் விஞ்ஞானம் வரும் வரை நம்மைச் சுற்றிலும் உள்ள பிரபஞ்சமும் அதைப்பற்றிய நம் எண்ணங்களும் வேறு வேறு என்று எண்ணிக்கொண்டிருந்தோம்.
ஆனால் குவாண்டம் விஞ்ஞானம் பொருள்களைப் பற்றிய நம் எண்ணங்களுக்கும் அவைகளின் தோற்றங்களுக்கும் அடிப்படையில் உறவு இருக்கிறது என்று அடித்து சொல்கிறது.
புரியவில்லையா ? சொல்றேன். உங்களிடம் ஒரு கேள்வி வானம் பூமி இத்தனை பொருட்களும் அல்லாஹ் "குன்" என்ற ஒற்றை வார்த்தையைக் கொண்டு படைத்தான் என்கிறது திருக்குர்ஆன்
"அந்த ' குன்' ஒற்றை வார்த்தைக்கு முன் இத்தனை பிரபஞ்சமும் அதன் பொருட்களும் எங்கே இருந்தது ? "
பதில்: "அல்லாஹ்வின் மனதில் இருந்தது"- இந்த பதிலைத்தான் குவாண்டம் சொல்கிறது. அதை அபொருள் Anti mattar என்கிறது.
பொருளுக்கு உதாரணம் : பூமியின் பரப்பு ,அபொருளுக்கு உதாரணம் : பூமியின் பரப்பை தொடும் தொடுவானம். தொடுவானத்தில் வெட்டவெளியும் உண்டு, கோடான கோடி சூரியன்களும், நட்சத்திரங்களும் உண்டு.
மேற்கண்ட வசனத்தில் "அவர்களுக்கு இவ்வுலக வாழ்க்கையில் வேதனை உண்டு" எனத் தெரிவிக்கின்றான்.

அதாவது இறைநம்பிக்கையாளர்களின் கரத்தால் கொல்லப்பட்டும் சிறைபிடிக்கப்பட்டும் அவர்கள் இவ்வுலகில் வேதனை செய்யப்படுவார்கள்.
இவ்வுலகில் கிடைக்கும் இந்த இழிவுடன், அவர்களுக்கென தயார் செய்யப்பட்டுள்ள "மறுமையின் வேதனை (அதைவிடக்) கடுமையானதாகும்." அதாவது இதைவிட அதிகமாகும்.
சாப அழைப்புப் பிரமாணம் செய்துகொண்ட இருவரிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இம்மையின் தண்டனை மறுமையின் தண்டனையைவிட மிக எளிதானதாகும்" என்று கூறினார்கள். இப்னு உமர்(ரலி) முஸ்லிம் 2988
இது உண்மைதான். ஏனெனில், இவ்வுலகத் தண்டனை முடிந்துவிடும். மறுவுலகின் நரக தண்டனை நிரந்தரமானதும் நிலையானதும் ஆகும். நரக நெருப்பானது . இவ்வுலகத்தின் நெருப்பைவிட எழுபது மடங்கு வெப்பமுடையதாகும். நரகத்திலுள்ள (கை, கால்) விலங்குகளின் கனமும் கடினமும் கற்பனைக்கு அப்பாற்பட்டவை ஆகும்.
மற்றொரு வசனத்தில் உயர்ந்தோன் அல்லாஹ் கூறுகின்றான். அந்நாளில் அல்லாஹ் வழங்கும் தண்டனையைப் போன்று வேறு யாராலும் வழங்க முடியாது; அவன் விலங்கிடுவதைப் போன்று வேறு யாராலும் விலங்கிடவும் முடியாது. குர்ஆன் (89:25,26)
மற்றோர் இடத்தில் அல்லாஹ் குறிப்பிடுகின்றான்; மறுமையை மறுத்தோருக்குக் கொழுந்துவிட்டெரியும் (நரக) நெருப்பை நாம் தயார் செய்துள்ளோம். நரகம் அவர்களைத் தூரத்திலிருந்து காணும்போதே அதன் கொதிப்பையும் இரைச்சலையும் அவர்கள் செவியுறுவார்கள். குர்ஆன் (25:11,12)

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 76
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 40

مَثَلُ الْجَنَّةِ الَّتِىْ وُعِدَ الْمُتَّقُوْنَ تَجْرِىْ مِنْ تَحْتِهَا الْاَنْهٰرُ اُكُلُهَا دَآٮِٕمٌ وَّظِلُّهَا تِلْكَ عُقْبَى الَّذِيْنَ اتَّقَوْا وَّعُقْبَى الْكٰفِرِيْنَ النَّارُ
பயபக்தியுடையவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட சுவனபதியின் தன்மையானது - அதன் கீழே நீர் அருவிகள் (என்றென்றும்) ஓடிக் கொண்டிருக்கும்; அதன் ஆகாரமும், அதன் நிழலும் நிலையானவை; இது தான் பயபக்தியுடையோரின் முடிவாகும்; காஃபிர்களின் முடிவோ (நரக) நெருப்பேயாகும். (குர்ஆன் : 13:35)
இம்மையின் எதிர்காலம் எப்படி என்று தெரியாதபோது, மறுமையின் காலம் பற்றி எப்படி சிந்திப்பது ?
பொருள் என்றால் (matter) கண்ணால் காணமுடியும். அபொருள் என்றால் (Anti matter ) அபொருளை கண்ணால் காணமுடியாது. ஆனால் அகத்தில் (மனதில்) அதனைக் காணமுடியும். இதைப் பற்றி குவாண்ட இயற்பியல் அழகாக சொல்கிறது, "பொருள் உருவானதே நம் மனதில்தானே " என்று கூறி நிரூபிக்கிறது.

குவாண்டம் விஞ்ஞானம் வரும் வரை நம்மைச் சுற்றிலும் உள்ள பிரபஞ்சமும் அதைப்பற்றிய நம் எண்ணங்களும் வேறு வேறு என்று எண்ணிக்கொண்டிருந்தோம்.
ஆனால் குவாண்டம் விஞ்ஞானம் பொருள்களைப் பற்றிய நம் எண்ணங்களுக்கும் அவைகளின் தோற்றங்களுக்கும் அடிப்படையில் உறவு இருக்கிறது என்று அடித்து சொல்கிறது.
புரியவில்லையா ? சொல்றேன். உங்களிடம் ஒரு கேள்வி வானம் பூமி இத்தனை பொருட்களும் அல்லாஹ் "குன்" என்ற ஒற்றை வார்த்தையைக் கொண்டு படைத்தான் என்கிறது திருக்குர்ஆன்
"அந்த ' குன்' ஒற்றை வார்த்தைக்கு முன் இத்தனை பிரபஞ்சமும் அதன் பொருட்களும் எங்கே இருந்தது ? "
பதில்: "அல்லாஹ்வின் மனதில் இருந்தது"- இந்த பதிலைத்தான் குவாண்டம் சொல்கிறது. அதை அபொருள் Anti mattar என்கிறது.
மேற்கண்ட வசனத்தில் "இறையச்சம் உடையோருக்கு வாக்களிக்கப்பட்டுள்ள சொர்க்கத்தின் நிலை - அதாவது அதன் தன்மை- (இதுதான்): அவற்றுக்கிடையே ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும்" என்று அல்லாஹ் குறிப்பிடுகின்றான்.
மற்றொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான்: இறையச்சம் உடையோருக்கு வாக்களிக்கப்பட்டுள்ள சொர்க்கத்தின் நிலை (இதுதான்) அதில் மாற்ற மடையாத நீர் ஆறுகளும், சுவை மாறாத பால் ஆறுகளும், அருந்துவோருக்கு இன்பம் தரும் மது ஆறுகளும். சுத்தமான தேன் ஆறுகளும் ஓடிக் கொண்டு இருக்கும் (குர்ஆன் 47:15)
அடுத்த தொடரில்,"அங்கு (கிடைக்கும்) உணவும் நிழலும் நிரந்தரமானவை ஆகும்" என்று அல்லாஹ் கூறுகின்றான். அதாவது சொர்க்கத்தில் கனிகளும் பலவகை உணவுகளும் வித விதமான பானங்களும் கிடைக்கும். அவை தடைபடாது; தீர்ந்தும்போகாது.
சூரிய கிரகணத் தொழுகை தொடர்பான நீண்ட ஹதீஸ் ஒன்றில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

அப்போது மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் (தொழுதுகொண்டிருக்கையில்) இதோ இந்த இடத்தில் எதையோ பிடிக்க முயன்றதைக் கண்டோமே (அது ஏன் ?) என்று கேட்டார்கள்
அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'நான் (தொழுதுகொண்டிருக்கையில்) சொர்க்கத்தைக் கண்டேன். அல்லது சொர்க்கம் எனக்குக் காட்டப்பட்டது. அதிலிருந்து (பழக்) குலையொன்றை எடுக்க முயன்றேன். அதை நான் எடுத்திருந்தால், இந்த உலகம் உள்ளவரை நீங்கள் அதிலிருந்த பழத்திலிருந்து புசித்திருப்பீர்கள்" என்று கூறினார்கள்.(முஸ்லிம் 1659)
ஜாபிர் (ரலி) அவர்கள் கூறிய தாவது:
ஒரு நாள் நாங்கள் லுஹ்ர் தொழுது கொண்டிருந்தபோது, தொழ வைத்துக் கொண்டிருந்த அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சற்று முன்னால் நகர்ந்தார்கள்; நாங்களும் முன்னால் நகர்ந்தோம். பின்னர் ஏதோ ஒரு பொருளை எடுக்க முயன்றார்கள். பின்னர் சற்றுப் பின்வாங்கினார்கள்.
தொழுகை முடிந்ததும் உபை பின் கஅப் (ரலி) அவர்கள் நபியவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே ! தொழுகையில் என்றுமே செய்யாத ஒன்றை நீங்கள் இன்று செய்ய கண்டோமே" என்று கேட்டார்
அதற்கு நபியவர்கள், "சொர்க்கமும் அதிலுள்ள பொலிவும், வனப்பும் எனக்குக் காட்டப்பட்டன. உங்களுக்குக் கொடுப்பதற்காகத் திராட்சை பழக்குலை ஒன்றைப் பறிக்க முயன்றேன். அதற்குள் எனக்கும் அதற்கும் இடையே திரை விழுந்தது.
அதை நான் உங்களுக்குக் கொண்டுவந்திருந்தால், வானத்திற்கும் பூமிக்கும் இடையிலுள்ள அனைவரும் அதை உண்டாலும், அவர்கள் அதைச் சிறிதளவும் குறைத்துவிட முடியாது" என்று கூறினார்கள். (முஸ்னது அஹமத் )
ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
வேதக்காரர்களில் ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அபுல் காசிமே! சொர்க்கவாசிகள் உண்பார்கள்: பருகுவார்கள் என நீர் கருதுகிறீரா?" என்று கேட்டார்.
நபியவர்கள், "ஆம்! முஹம்மதின் உயிர் யார் கையில் உள்ளதோ அவன் மேல் ஆணையாக! சொர்க்கவாசிகளில் ஒவ்வொருவரும் உண்பது, பருகுவது. தாம்பத்திய உறவு கொள்வது, பாலுணர்வு ஆகியவற்றில் நூறு மனிதர்களுக்குரிய வலிமையைப் பெறுவர்" என்று கூறினார்கள்.
அந்த வேதக்காரர், "உண்பவருக்கும் பருகுபவருக்கும் இயற்கைக் கடனை நிறைவேற்ற வேண்டிய அவசியம் ஏற்படும். ஆனால், சொர்க்கத்தில் அசிங்கம் இல்லையே" என்று கேட் டார்.

நபியவர்கள். "அங்கு இயற்கைக் கடனை நிறைவேற்றுவதென்பது, அவர்களின் மேனியிலிருந்து கஸ்தூரி மணம் கமழும் வியர்வை வெளியேறுவது தான். அது அவர்களது வயிற்றை மெலியச் செய்துவிடும்" என்று கூறினார்கள். (முஸ்னது அஹமத் )
لَّا مَقْطُوْعَةٍ وَّلَا مَمْنُوْعَةٍ
( சுவனத்துச் சோலையில் ) அதன் கனிகள் (புசிக்க) தடுக்கவும் படாது. (பறிப்பதால்) குறைவுமுறாது. (ஒன்றைப் பறித்தால், மற்றொன்று அதே இடத்தில் காணப்படும்) (குர்ஆன் : 56:33)
அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "நீர் சொர்க்கத்தில் ஒரு பறவையை (ஆசையோடு) பார்த்தால், அது பொரிக்கப்பட்ட நிலையில் உமக்கு முன்னே வந்து விழும்" என்று கூறினார்கள்.
அந்தப் பறவையை சாப்பிட்டு முடித்த பின் அது அல்லாஹ்வின் கட்டளைப்படி முன்பு இருந்ததைப் போன்று மீண்டும் உயிர் பெற்று பறவையாக மாறிவிடும். - இதுதான் Anti mattar

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 77
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 41




وَالَّذِيْنَ اٰتَيْنٰهُمُ الْكِتٰبَ يَفْرَحُوْنَ بِمَاۤ اُنْزِلَ اِلَيْكَ وَمِنَ الْاَحْزَابِ مَنْ يُّنْكِرُ بَعْضَهٗ‌ قُلْ اِنَّمَاۤ اُمِرْتُ اَنْ اَعْبُدَ اللّٰهَ وَلَاۤ اُشْرِكَ بِهٖ‌ اِلَيْهِ اَدْعُوْا وَاِلَيْهِ مَاٰبِ
எவர்களுக்கு நாம் (முன்னர்) வேதத்தை அளித்தோமோ, அவர்கள் (நபியே!) உம் மீது இறக்கப்பட்ட (இவ்வேதத்)தைப் பற்றி மகிழ்வார்கள்; எனினும் இதன் சில பகுதிகளை மறுக்கிறவர்களும் (அவர்களுடைய) கூட்டதில் இருக்கிறார்கள்.
(அவர்களை நோக்கி:) "நான் ஏவப்பட்டிருப்பதெல்லாம், அல்லாஹ் - (ஒருவனையே) வணங்க வேண்டும்; அவனுக்கு இணைவைக்கக் கூடாது என்பது தான்; நான் (உங்களை) அவன் பக்கமே அழைக்கின்றேன்; அவன் பாலே (என்) மீட்சியும் இருக்கிறது" என்று (நபியே!) நீர் கூறுவீராக.(குர்ஆன் : 13:36)
இறைவனிடமிருந்து அருளப்பட்ட வேதங்களில் பொதுவான விஷயமாக தன்னிடமிருந்துதான் வேதங்கள் இறக்கியருளப்பட்டிருக்கிறது என்பதற்கு ஆதாரமாக அந்தந்த வேதங்களில் வசனங்களாக குறிப்பிட்டும் இருக்கிறான். உதாரணமாக ,
அறநெறி வேதங்கள் அனைத்தாலும் (அவற்றின் துணை கொண்டு) அறியப்படும் அறிவின் பொருள்கள் நானே. வேதாந்தங்களின் ஆசிரியன் நானே, நான் மட்டுமே வேதங்களை அறிவேன். கீதை 15:15
வேதவாக்கியங்களெல்லாம் தேவஆவியினால் அருளப்பட்டிருக்கிறது; தேவனுடைய மனுஷன் தேறினவனாகவும், எந்த நற்கிரியையுஞ் செய்யத் தகுதியுள்ளவனாகவும் இருக்கும்படி -|| தீமோத்தேயு 3:16
என்னிடமிருந்து உங்களுக்கு நிச்சயமாக நல்வழி(யைக் காட்டும் அறிவுரைகள்) வரும்போது, யார் என்னுடைய (அவ்) வழியைப் பின்பற்றுகிறார்களோ அவர்களுக்கு எத்தகைய பயமும் இல்லை, அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்." - குர்ஆன் 2:38.
வேதம் வழங்கப்பட்ட யூதர்களிலும் கிறிஸ்தவர்களிலும் சிலர் உமக்கு இறக்கியருளப்பட்ட திருக்குர்ஆனைப் பற்றி மகிழ்ச்சி அடைகின்றனர்.
காரணம், வேதத்தின்படி செயல்படக்கூடிய வேதக்காரரர்கள் உமக்கு அருளப்பட்ட குர்ஆனால் மகிழ்ச்சி அடைகின்றனர். குர்ஆன் உண்மை வேதம் என்பதற்கான சான்றுகளும் 'குர்ஆன் அருளப்பெறும்' என்ற நற்செய்தியும் அவர்களின் வேதங்களில் இருப்பதே இதற்கு காரணம்
பெருமானார் (ஸல்) அவர்களுடைய காலத்தில் அப்துல்லாஹ் பின் ஸலாம் எனும் யூத வேதப்பண்டிதரும், அவரைச் சார்ந்தோரும் திருக்குர்ஆனின் போதனைகளைக் கேட்டு மகிழ்ச்சியுற்று இஸ்லாத்தைத் தழுவினர். இவ்வாறே கிறிஸ்தவர்களில் நஜ்ரான் மாநிலத்தைச் சேர்ந்த நாற்பது நபர்கள், அபீஸீனிய நாட்டைச் சேர்ந்த முப்பது நபர்கள் இஸ்லாத்தைத் தழுவினர்.
"எனினும் இதன் சில பகுதிகளை மறுக்கிறவர்களும் (அவர்களுடைய) கூட்டதில் இருக்கிறார்கள் " என்ற வசனம்,
கஅப்னுல் அஷ்ரஃப், மற்றும் அவரை பின்பற்றுபவர்கள்,நஜ்ரானிலுள்ள பெரிய பாதிரிகளான ஆக்கிபு, ஸெய்யிது ஆகியவர்களுக்கும் , அவர்களின் மாணவர்களுமான காஃபிர்களைக் குறிக்கிறது. இவர்கள்

திருக்குர்ஆனில் தங்கள் ஷரீஅத்துக்கு மாற்றமானவற்றை நிராகரித்துக் கொண்டும் முற்காலத்தின் நபிமார்கள் சரித்திரங்கள் போன்றவற்றை மட்டும் ஒப்புக் கொள்ளவும் ஆக இருந்தனர்.
"(நபியே!) "அதனை நீங்கள் நம்புங்கள், அல்லது நம்பாதிருங்கள்; (அதனால் நமக்கு கூடுதல், குறைவு எதுவுமில்லை.) நிச்சயமாக இதற்கு முன்னர் எவர் (வேத) ஞானம் கொடுக்கப்பட்டிருந்தார்களோ, அவர்களிடம் அது (குர்ஆன்) ஓதிக்காண்பிக்கப்பட்டால் அவர்கள் ஸுஜூது செய்தவர்களாக முகங்களின் மீது (பணிந்து) விழுவார்கள்" என்று (நபியே!) நீர் கூறும்.
அன்றியும், "எங்கள் இறைவன் மிகப் பரிசுத்தமானவன்; எங்களுடைய இறைவனின் வாக்குறுதி நிறைவேறி விட்டது" என்றும் அவர்கள் கூறுவார்கள். (குர்ஆன் : 17:107, 108)
(அவர்களை நோக்கி:) "நான் ஏவப்பட்டிருப்பதெல்லாம், அல்லாஹ் - (ஒருவனையே) வணங்க வேண்டும்; அவனுக்கு இணைவைக்கக் கூடாது என்பது தான்; நான் (உங்களை) அவன் பக்கமே அழைக்கின்றேன்; அவன் பாலே (என்) மீட்சியும் இருக்கிறது" என்று (நபியே!) நீர் கூறுவீராக !

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 78
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 42




وَكَذٰلِكَ اَنْزَلْنٰهُ حُكْمًا عَرَبِيًّا‌ وَلَٮِٕنِ اتَّبَعْتَ اَهْوَآءَهُمْ بَعْدَمَا جَآءَكَ مِنَ الْعِلْمِ‌ۙ مَا لَـكَ مِنَ اللّٰهِ مِنْ وَّلِىٍّ وَّلَا وَاقٍ
(நபியே!) இவ்வாறே அரபி (மொழி)யில் சட்ட திட்டங்களைக் கொண்டதாக, இ(வ் வேதத்)தை நாம் இறக்கி வைத்திருக்கின்றோம்;
எனவே உமக்கு ஞானம் வந்த பின்னரும் அவர்களுடைய (வீணான) இச்சைகளை நீர் பின்பற்றினால் அல்லாஹ்விடமிருந்து (உம்மை இரட்சிக்கும் உற்ற) உதவியாளரோ, பாதுகாவலரோ (எவரும்) உமக்குக் கிடைக்க மாட்டார். (குர்ஆன் : 13:37)
இக்குர்ஆனில் மனிதர்கள் நடந்து கொள்ள வேண்டிய நல்ல அம்சங்கள், செய்ய வேண்டியவை, தவிர்க்க வேண்டியவை, அனுமதிக்கப்பட்டவை, ஆகாதவை ஆகிய சட்ட திட்டங்கள் இவற்றிற்கு அனுசரணையான பல்வேறு விளக்கங்கள் முதலான எல்லாவற்றையும் அரபி மொழியில் விவரித்துள்ளோம்.

மேலும் அரபி மொழி எத்தகையதென்றால்....
ஆங்கிலத்தில் classical language என்பதை தான் தமிழில் செம்மொழி என்கிறோம். உலகில் 9 மொழிகள் செம்மொழியாக உள்ளன. கிரேக்கம், லத்தீன், சமஸ்கிருதம், பாரசீகம், சீனம், அரேபியம், எபிரேயம், தமிழ் ,கன்னடம் ஆகிய மொழிகள் செம்மொழி அந்தஸ்தை பெற்றுள்ளன.
ஒரு மொழி செம்மொழி ஆக வேண்டும் என்றால், குறைந்தது 1000 ஆண்டுகளாவது பழமை வாய்ந்ததாக இருக்க வேண்டும். அந்த பழமையைப் பறைச்சாற்ற இலக்கிய படைப்புகளும், கலைகளும் இருக்க வேண்டும். இவை இருந்தால் அம்மொழி செம்மொழி அந்தஸ்தைப் பெறும்.
செம்மொழிக்கு என்ன தகுதிகள் வேண்டும் என்பது தொடர்பாக மொழி அறிஞர்கள் பல்வேறு கருத்துகளைத் தெரிவித்திருந்தாலும், முக்கியமான தகுதிகள் ஐந்து. 1. தொன்மை. 2. இலக்கிய வளம். 3. சொல் வளம். 4. இலக்கண விதிகளும், இலக்கிய விதிகளும் வரையறுக்கப்பட்டிருக்க வேண்டும். 5. மக்கள் வழக்கில் வாழும் மொழியாக இருக்க வேண்டும். இந்த அளவுகோலின் படி செம்மொழிக்கான அனைத்துத் தகுதிகளும் அரபிக்கு உண்டு.
உலக அளவில் அரபி மொழி பேசுவோர் 323 மில்லியன் பேர். அரபி மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் சுமார் 175 அல்லது 185 மில்லியன் பேர் இருப்பதாக சொல்லப்படுகிறது.
இன்று உலக வர்த்தகத்தில் பயன்படும் உலகச் செம்மொழிகளில் சீன மொழிக்கு அடுத்த இடத்தில் உள்ள மொழி என்று பல பெருமைகள் கொண்டது அரபு மொழி.
கி.பி. 650 முதல் தமிழகத்தில் கடல் வழியாகவும் துருக்கி, ஆப்கானிஸ்தான் வழியாகவும் அரேபிய வணிகர்கள் இந்தியாவுக்குள் காலடி எடுத்து வைத்தார்கள். முதலில் வணிகம், பின் ஆட்சி என அவர்களின் வரலாறு தொடர்ந்தது.

இதனால் இந்திய மொழிகள் பலவற்றில் அரபு மொழியின் தாக்கம் அதிகமானது. இன்று நாம் பயன்படுத்தும் நிர்வாக ரீதியான தமிழ் சொற்களில் அதிகமானவை அரபு மொழியிலிருந்து வந்தவை தான்.
உலகத்திலுள்ள மொழிகளிலேயே அரபி மொழி மிகச்சிறந்த மொழி என்பதற்கு எண்ணற்ற உதாரணங்களை கூற முடியும்.
உலகத்தில் அனுப்பப்பட்ட அத்தனை நபிமார்களும் அந்தந்த சமூகத்திலிருந்து, அந்தந்த மொழி பேசுபவர்களாகத் தான் அனுப்பப்பட்டார்கள். அவர்கள் பேசுவதை அந்த சமூகம் அறிய வேண்டும். அந்த சமூகம் பேசுவதை அந்த நபி அறிய வேண்டும். அவர்களுக்குள் பரஸ்பர புரிதல் ஏற்பட வேண்டும் என்பதற்காக அல்லாஹ் அவ்வாறு நபிமார்களை அனுப்பினான்.
“وَمَا أَرْسَلْنَا مِن رَّسُولٍ إِلاَّ بِلِسَانِ قَوْمِهِ لِيُبَيِّنَ لَهُمْ)
ஒவ்வொரு தூதரையும் அவருடைய சமூகத்தாருக்கு அவர் விளக்கிக் கூறுவதற்காக அவர்களுடைய மொழியிலேயே (போதிக்கும் படி) நாம் அனுப்பி வைத்தோம். (குர்ஆன் : 14 ; 4)
وقال النبي – صلى الله عليه وسلم -): لم يبعث الله نبيًّا إلا بلغة قومه
அல்லாஹ் எந்த நபியையும் அவருடைய சமூகத்தின் மொழியைக் கொண்டே தவிர, அனுப்பவில்லை. (அல்ஜாமிவுஸ்ஸகீர் ; 7339)
ஆனால் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் உலகத்தில் இருக்கிற அத்தனை சமூகத்திற்கும் நபி. அத்தனை நாட்டவர்களுக்கும் நபி. அத்தனை மொழி பேசக்கூடியவர்களுக்கும் நபி. அனைவருக்கும் வழிகாட்டும் ஒரு தூதராக நபிகள் நாயகத்தை அல்லாஹுத்தஆலா அனுப்பியிருக்கிறான்.
உலகில் இருக்கிற அத்தனை மொழி பேசக்கூடியவர்களுக்கும் நபியவர்கள் பொதுவாக இருந்தாலும் அவர்களை அரபியாக, அரபி பேசும் நபியாக அனுப்பியதிலிருந்து அரபு மொழியின் மகத்துவத்தை புரிய முடிகிறது.

நபியவர்கள் உலகம் அனைத்திற்கும் பொதுவாக இருந்தும் அவர்களை அரபிகளில் ஒருவராக இறைவன் தேர்ந்தெடுப்பதற்கான காரணம், அரபுகள் மிகத் தெளிவாக பேசுபவர்கள், விரைவாக விளங்கும் ஆற்றல் உள்ளவர்கள், எதையும் எளிதில் புரியும் ஆற்றல் உள்ளவர்கள், அதிகம் புத்தி கூர்மை உடையவர்கள், நேர்வழியை ஏற்றுக் கொள்வதற்காக தங்களை தயார் படுத்துவதில் மிகவும் அழகானவர்கள். (அத்தஹ்ரீர் வத்தன்வீர்)
அரபி மொழி என்பது ஒருவர் இஸ்லாத்தில் அடியெடுத்து வைக்கும் அந்த தருணத்திலிருந்து தொடங்கி அவன் வாழ்க்கை முழுக்க தொடர்ந்து மரணம் வரை நீடிக்கிறது.
இஸ்லாத்தில் நுழையக்கூடிய ஒருவன் ஷஹாதத்தின் அந்த வார்த்தையை அரபி மொழியில் மொழிந்தால் மட்டுமே அவன் ஈமான் கொண்டதாக கருதப்படும். அரபி மொழியில் ஸஹாதத்தின் வார்த்தைகளை மொழியாமல் அதன் பொருளை மட்டும் சொல்வதினால் அவன் ஈமான் கொண்டவனாக ஆக முடியாது.
எனவே அரபி மொழி நம் தீனுல் இஸ்லாத்தோடு ஒன்றடக் கலந்திருக்கிறது. அந்த மொழியின்றி இஸ்லாமிய மார்க்கத்திற்குள் ஒருவர் நுழையவும் முடியாது. அதில் முழுமை பெறவும் முடியாது. இஸ்லாத்தின் அடிப்படையான கலிமாவில் தொடங்கி மார்க்கத்தின் எல்லாக் கடமைகளும் அரபியோடு பிண்ணிப் பினைந்திருக்கிறது. அந்த வகையில் அரபிக்கும் தீனுல் இஸ்லாத்திற்குமான நெருங்கிய பந்தத்தை நம்மால் உணர்ந்து கொள்ள முடியும்.
اِنَّا نَحْنُ نَزَّلْنَا الذِّكْرَ وَاِنَّا لَهٗ لَحٰـفِظُوْنَ
நிச்சயமாக நாம்தான் இவ்வேதத்தை (உங்கள்மீது) இறக்கி வைத்தோம். ஆகவே, (அதில் எத்தகைய மாறுதலும் அழிவும் ஏற்படாதவாறு) நிச்சயமாக நாமே அதனை பாதுகாத்துக் கொள்வோம். (குர்ஆன் : 15:9)

குர்ஆன் இருக்கும் காலமெல்லாம் அரபி மொழி அழியாது என்பது அந்த மொழிக்கு அல்லாஹ் கொடுத்த தனித்துவங்களில் ஒன்று. அரபி மொழி உலகத்தில் தன்னிகரில்லாத மொழி என்பதற்கு இந்த சிறப்பு ஒன்றே போதுமானது.
ஒரு முஸ்லிம் செய்யக்கூடிய பெரும்பாலான வணக்க வழிபாடுகள் அரபி மொழியுடன் தொடர்புடையவை. அந்த மொழி தெரிந்தோ தெரியாமலோ அந்த வார்த்தைகளை உச்சரிக்காமல் எண்ணற்ற வணக்கங்கள் நிறைவேறாது.
உதாரணத்திற்கு தொழுகையை எடுத்துக் கொள்ளலாம். தொழுகையில் கிராஅத் ஓதுவது கடமை. ஒருவனுக்கு அரபி மொழி தெரிகிறதோ தெரியவில்லையோ அவன் அதை ஓதித்தான் ஆக வேண்டும். இல்லையெனில் தொழுகை நிறைவேறாது. அரபி மொழி நம் வணக்க வழிபாடுகளுடன் பின்னிப் பிணைந்திருக்கிறது என்பதை உணர முடிகிறது.
இதல்லாமல் அரபி மொழியின் ஆழத்தை சற்று உற்று நோக்கினால் மற்ற மொழிகளில் இல்லாத ஏராளமான தனித்துவங்கள் அதில் இருப்பதை புரிந்து கொள்ளலாம்.
மொழிவதற்கும் பேசுவதற்கும் மிகவும் இலகுவான மொழி அரபு மொழி எல்லா மொழிகளிலும் மூன்று எழுத்துக்களை கொண்ட வார்த்தைகள், நான்கு எழுத்துக்களைக் கொண்ட வார்த்தைகள், ஐந்து எழுத்துக்களை கொண்ட வார்த்தைகள் இருக்கிறது.
என்றாலும் அரபி மொழியில் மூன்று எழுத்துக்களைக் கொண்ட வார்த்தைகள் தான் மிகுதியாக இருக்கிறது. மிக இலகுவான மொழி என்பதற்கான முதல் விஷயம் இது. இந்த தனித்துவம் வேறு எந்த மொழிகளிலும் காண முடியாது.
மொழிவதற்கு சிரமமாக இருக்கும் இடங்களில் அந்த சிரமத்தை போக்குவதற்காக எழுத்துக்களை மாற்றி இலகுபடுத்தும் தனித்துவம் அரபி மொழிக்கு மட்டுமே சொந்தமானது. موعاد என்பதை மொழிவதற்கு சிரமம் என்பதினால் ميعاد என்று படிப்பதை உதாரணமாக கூறலாம்.

மற்ற மொழிகளில் எண்ணற்ற எழுத்துக்களால் இணைந்த வார்த்தைகள் அரபி மொழியில் மிகக்குறைந்த எழுத்துக்களை கொண்டதாக இருப்பதை நாம் பார்க்கலாம்.
مبنى building
جامعة university
تسلية entertainment
جد Grand-father
உதாரணத்திற்கு ஃபாத்திஹா சூரா வில் ஏறக்குறைய 30 வார்த்தைகள் உண்டு. ஆனால் அதை ஆங்கில மொழியில் மொழி பெயர்த்தால் அதை மொழி பெயர்ப்பதற்கு 70 வார்த்தைகள் தேவைப்படும்.
இதுவெல்லாம் உலகிலுள்ள மற்றெல்லா மொழிகளை விட அரபி மிகவும் இலகுவான மொழி என்பதற்கான உதாரணங்கள்.
நான் அரபியாக இருக்கிறேன், அல்லாஹ்வுடைய வேதமான அல்குர்ஆனும் அரபியாக இருக்கிறது. சொர்க்கவாசிகள் பேசும் மொழியாகவும் அரபி இருக்கிறது. இந்த மூன்று காரணத்தினால் நீங்கள் அரபியை விரும்புங்கள். (தப்ரானி)
இவற்றையெல்லாம் புறக்கணித்து விட்டு உம்மைத் தங்களுடைய நோக்கப்படி தங்களுடைய இணைவைக்கும் கொள்கைக்குத் திருப்பிவிட இணைவைப்போர் முயற்சி செய்கின்றனர்.
உமக்குத் தெளிந்த ஞானம் வந்த பின்னரும் அவர்களுடைய மனோ இச்சைகளுக்கு உட்பட்டு அவர்களை நீர் பின்பற்றுவீராயின், அல்லாஹ்வின் உதவி உமக்குக் கிடைக்காது. அவன் அதற்காக உம்மைத் தண்டிக்கும்பொழுது அவனிடமிருந்து உம்மைப் பாதுகாக்க எந்த உற்ற நேசனும் எந்தப் பாதுகாவலனும் உமக்குக் கிடைக்க மாட்டார்கள் என்பது இவ்வசனத்தின் கருத்தாகும்.
பெருமானார் (ஸல்) அவர்கள் இறைவன் விதித்த எல்லையை மீறி எதிரிகளுடன் இச்சைகளை ஒருபோதும் பின்பற்றியவர்களல்லர். அவர்களைக் காட்டி மற்றவர்களை எச்சரிப்பதே இதன் குறிக்கோளாகும்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 78**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 43**




وَلَقَدْ اَرْسَلْنَا رُسُلًا مِّنْ قَبْلِكَ وَ جَعَلْنَا لَهُمْ اَزْوَاجًا وَّذُرِّيَّةً وَمَا كَانَ لِرَسُوْلٍ اَنْ يَّاْتِىَ بِاٰيَةٍ اِلَّا بِاِذْنِ اللّٰهِ لِكُلِّ اَجَلٍ كِتَابٌ
(நபியே!) நிச்சயமாக உமக்கு முன்னரும், நாம் தூதர்களை அனுப்பி வைத்தோம்; அவர்களுக்கும் மனைவியரையும், சந்ததிகளையும் நாம் ஏற்படுத்தியிருந்தோம்; மேலும், எந்தத் தூதரும் அல்லாஹ்வின் அனுமதியில்லாமல் எந்த அத்தாட்சியையும் கொண்டுவந்ததில்லை; ஒவ்வொரு தவணைக்கும் ஒரு (பதிவு) ஏடு உள்ளது. (குர்ஆன் : 13:38)
" (நபியே!) நிச்சயமாக உமக்கு முன்னரும், நாம் தூதர்களை அனுப்பி வைத்தோம்; அவர்களுக்கும் மனைவியரையும், சந்ததிகளையும் நாம் ஏற்படுத்தியிருந்தோம்" என்ற வசனத்தில் கூறப்பட்டதுள்ளது குறித்து நபி தாவூத் (அலை) அவர்களுக்கு நூறு மனைவியரும். முன்னூறு அடிமைப் பெண்களும் இருந்தனர். அவர்களுடைய புதல்வரான நபி சுலைமான் ( அலை) அவர்களுக்கு முன்னூறு மனைவியரும் எழுநூறு அடிமைப் பெண்களும் இருந்தனர் என்று ரிவாயத்து செய்யப்பட்டிருக்கிறது.
நபி இப்ராஹீம் ( அலை), நபி யஃகூபு ( அலை) முதலில் நபிமார்களுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் ஏக காலத்தில் இருந்தனர், ஆதலின், பலதார மணம் நபித்துவத்துக்கு இடையூறு செய்வதாக இல்லை.
மேற்கண்ட வசனத்தில் பெருமானார் (ஸல்) அவர்கள் பெண்களைத் திருமணம் செய்வது பற்றி யூதர்கள் பழித்துக் கூறினர். "திருமணம் செய்வதைத் தவிர வேறு எந்த நோக்கமும் இவருக்குக் கிடையாது. இவர் நினைப்பது போல இவர் நபியாக இருந்தால் பெண்ணாசை, உலகாசை ஆகியவற்றிலிருந்து பற்றற்று

எப்போதும் தமது நபித்துவத்தை எடுத்துரைப்பதில் அல்லவா ஈடுபட்டிருக்க வேண்டும்?" என்றும் கூறினர். அக்கூற்றிற்கு மறுப்பாகவே இவ்வசனம் இறக்கப்பட்டுள்ளது. (ஆதாரம்: காஜின், ரூஹுல்மஆனி முதலியன)
இறைத்தூதர் முஹம்மது {ஸல்} அவர்கள் பலதாரமணம் ஏன் செய்தார்கள்?
முஹம்மது நபி {ஸல்} அவர்கள் ( நவூதுபில்லாஹ் ) பெண்களின் மீதான மோகத்தாலும், இச்சையாலும் பல திருமணங்களை திருமணம் செய்து கொண்டார் என்கிற குற்றச்சாட்டை விமர்சனம் என்கிற பெயரில் சிலர் சேற்றை வாரி இறைக்கின்றார்கள்.

25 வயதில் 40 வயது நிறைந்த கதீஜா (ரலி) அவர்களை (தங்களை விட 15 வயது மூத்த பெண்ணை) திருமணம் செய்து தங்களின் இல்லற வாழ்க்கையைத் துவங்கிய அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் கதீஜா (ரலி) அவர்கள் இறக்கும் வரை சுமார் 25 ஆண்டுகள் ஒரே பெண்ணாகிய கதீஜா (ரலி) அவர்களுடனே தங்கள் இல்லற வாழ்க்கையை அமைத்துக் கொண்டார்கள்.
அவர்கள் இறப்பெய்திய பின்னர் இரண்டு ஆண்டுகள் அதே நிலையில் அவர்களைப் பற்றிய கவலையிலேயே வாழ்ந்தார்கள்.
தங்களின் 52 –வது வயதில் தங்களை விட வயதில் மிகவும் மூத்த ஸவ்தா பிந்த் ஸம்ஆ (ரலி) அவர்களை திருமணம் செய்தார்கள்.
அதன் பின்னர் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களைத் திருமணம் செய்தார்கள். 52 வயதுக்குப் பிறகு 60 வயதை வரை மாநபி {ஸல்} அவர்கள் 11 திருமணம் செய்தார்கள்.
இதில் எங்கே பெண் மீதான மோகம் உள்ளது என்பதை கூற வேண்டும்? இச்சையும், மோகமும் உள்ளவர்கள் விதவைகளையும், பல குழந்தைகளைப் பெற்றெடுத்த முதியவர்களையுமா மணம் முடிக்க முன்வருவார்கள் என்பதையும் சொல்ல வேண்டும்? 52 வயதுக்கு மேல் திருமணம் செய்து கொண்ட மாநபி {ஸல்} அவர்கள் மீது களங்கம் சுமத்துபவர்கள் கவனிக்க வேண்டும்.
அன்னை ஆயிஷா (ரலி) அவர்களைத் தவிர மற்ற அனைத்துப் பெண்களும் விதவைகளும், பல குழந்தைகளின் தாயுமாவார்கள்.
பெருமானார் {ஸல்} அவர்கள் செய்து கொண்ட பலதாரமணம் குறித்து பேசுகிற, எழுதுகிற வரலாற்று அறிஞர் பெருமக்கள் நூற்றுக்கும் மேற்பட்ட காரணங்களை பட்டியல் போடுகின்றார்கள்.
அவைகளில் மிக முக்கியமான மூன்று காரணங்களை இங்கே குறிப்பிடுவது நன்றாக அமையும் என்று கருதுகின்றேன்.
1.சமூக நலன் சார்ந்த திருமணம்.
2.இறைவனின் நேரடி கட்டளையின் படி அமைந்த திருமணம். 3.அரசியல் நோக்கத்தில் அமைந்த திருமணம்.
1.சமூக நலன் சார்ந்த திருமணம் :-

அன்னை கதீஜா (ரலி), அன்னை ஸவ்தா (ரலி) அன்னை உம்மு ஸலமா (ரலி) அன்னை ஜைனப் பிந்த் குஸைமா (ரலி) அன்னை ஹஃப்ஸா பிந்த் உமர் (ரலி) ஆகியோருடனான திருமணங்களின் பிண்ணனியில் விதவைகளுக்கு மறுவாழ்வு தர முன்வரவேண்டும் என்பது நோக்கமாகக் கொள்ளப்பட்டது.
இதில் அன்னை கதீஜா (ரலி), அன்னை ஸவ்தா (ரலி), அன்னை உம்மு ஸலமா (ரலி) ஆகியோருக்கு முந்தைய கணவரின் மூலம் குழந்தைகளையும் பெற்றிருந்தனர். எனவே, அத்தகைய குழந்தைகளுக்கும் தந்தை அந்தஸ்தில் இருந்து சிறந்தவராக விளங்க வேண்டும் என்ற ஊக்குவிப்பு நோக்கமாக கொள்ளப்பட்டது.
ஜைனப் பிந்த் குஸைமா (ரலி) ஹஃப்ஸா (ரலி) இருவரும் ஷுஹதாக்களின் மனைவியர் ஆவார்கள்.
எதிர்காலத்தில் போரில் வீரமரணம் அடைகிறவர்களின் மனைவியர்களுக்கு மறுமண வாய்ப்பு வழங்க சமூகம் முன்வர வேண்டும் என்பதும் நோக்கமாகக் கொள்ளப்பட்டது.
2.அல்லாஹ்வின் நேரடி கட்டளைப்படி நடந்த திருமணம்:-
அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் திருமணமும், அன்னை ஜைனப் பிந்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்களின் திருமணமும் அல்லாஹ்வின் கட்டளைப்படி நடந்த திருமணம் ஆகும்.
நபியவர்கள் ஆயிஷாவை மணமுடிப்பது குறித்து ஒரு கனவு கண்டார்கள். ஸஹீஹுல் புகாரீ ஹதீஸ் தொகுப்பில் அச்செய்தி பதிவாகியுள்ளது.
ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது:"நான் உன்னைக் கனவில் இரு முறை கண்டேன். உன்னைப் பட்டுத்துணியின் துண்டு ஒன்றில் (முக்காடிட்டபடி) கண்டேன். எவரோ, "இது உங்கள் மனைவிதான்; (முக்காட்டை) நீக்கிப்பாருங்கள்' என்று கூற, (நானும் அவ்வாறே பார்த்தேன்.) அது நீயாகவே இருக்கக் கண்டேன். அப்போது நான், "இது (நீ எனக்கு மனைவியாவது) அல்லாஹ்வின் தரப்பிலிருந்து (விதிக்கப்பட்டு) உள்ளதெனில் அதை அவன் நடத்தி வைப்பான்' என்று சொல்லிக் கொண்டேன்'' என்று நபி (ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள். (புகாரீ 3895)
நபி (ஸல்) அவர்கள் தமது ஐம்பத்தி ஆறாம் வயதில் தமது ஆறாவது மனைவியாக ஜஹ்ஷ் என்பவரின் மகள் ஸைனப் (ரலி) அவர்களை மணந்து கொண்டார்கள்.
உக்கால் எனும் அரபிய சந்தையில் அடிமையாக விற்கப்பட்ட ஹாரிஸாவின் மகன் ஸைத் (ரலி) அவர்களை கதீஜா (ரலி) அவர்கள் விலை கொடுத்து வாங்கினார்கள். சிறுவரான அவர் கதீஜா (ரலி) அவர்களிடம் வளர்ந்து வந்தார்.

கதீஜா (ரலி) அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை மணந்த பின் அந்த அடிமைச் சிறுவரை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு வழங்கி, நீங்கள் விரும்பினால் இச்சிறுவரை அடிமையாகவே வைத்துக் கொள்ளலாம், நீங்கள் விரும்பினால் விடுதலை செய்து விடலாம் என்று கூறி விட்டார்கள்.
அதன் பின் அவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பணியாளராக இருக்கலானார். இந்நிலையில் தன் மகன் மக்காவில் அடிமையாக இருப்பதை அறிந்த ஹாரிஸாவும், அவரது சகோதரர் கஃப் என்பவரும் நபிகள்

நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்தனர். தம் மகனை விடுதலை செய்யுமாறும் அதற்குரிய விலையைத் தந்து விடுவதாகவும் கூறினார்கள்.
அதற்கு நபியவர்கள் உங்களுடன் வருவதற்கு ஸைத் ஒத்துக் கொண்டால் நீங்கள் தாராளமாக அவரை அழைத்துச் செல்லலாம்; எனக்கு நஷ்ட ஈடு எதுவும் நீங்கள் தரவேண்டியது இல்லை. அவர் உங்களுடன் வர விரும்பா விட்டால் அவரை உங்களுடன் அனுப்ப இயலாது என்று கூறி விட்டனர்.
வந்தவர்கள், ஸைத் அவர்களிடம் பேசிப் பார்த்தனர். முஹம்மது என்னை மிகவும் சிறந்த முறையில் நடத்துகிறார். அவரை விட்டு என்னால் வர இயலாது என்று ஸைத் திட்டவட்டமாக மறுத்து விட்டார்.
இந்தச் சந்தர்ப்பத்தில் ஸைத் இனி மேல் என் மகனாவார். அவர் இனி மேல் அடிமையில்லை; நான் அவருக்கு முன் இறந்து விட்டால் என் சொத்துக்களுக்கு அவர் வாரிசாவார், எனக்கு முன் அவர் இறந்து விட்டால் அவருக்கு நான் வாரிசாவேன் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கும் ஸைத்துக்கும் இடையே உள்ள உறவைப் புரிந்து கொண்ட அவரது தந்தை மகிழ்ச்சியுடன் பிரிந்து சென்றார். இந்த நிகழ்ச்சி நடக்கும் போது முஹம்மத் (ஸல்) அவர்கள் நபியாக நியமிக்கப்படவில்லை (அல் இஸாபா)
அன்றிலிருந்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மதீனா வந்து இரண்டு ஆண்டுகள் வரை ஸைத் இப்னு முஹம்மத் (முஹம்மதுவின் மகன் ஸைத்) என்றே ஸைத் குறிப்பிடப்பட்டார்.
அவர்களின் தந்தையர் பெயராலேயே குறிப்பிடுங்கள் (33:5) என்ற வசனம் அருளப்படும் வரை முஹம்மதின் மகன் ஸைத் என்றே அவரைக் குறிப்பிட்டு வந்தோம் என்று இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கும் செய்தி புகாரியில் (4782) காணப்படுகிறது.

சொந்த மகன் போலவே ஸைத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது இருபத்தைந்தாவது வயது முதல் தமது ஐம்பத்தி ஐந்தாம் வயது வரை வளர்த்து வந்தார்கள். ஸைத் அவர்களின் எல்லாக் காரியங்களுக்கும் நபியவர்களே பொறுப்பாளராக இருந்தார்கள்.
அது போல் ஸைத் அவர்கள் தமது எல்லாக் காரியங்களுக்கும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களையே சார்ந்திருந்தார்கள் என்பதைத் தெளிவுபடுத்திடவே இந்த விபரங்கள்.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தம்முடைய தந்தையின் சகோதரியான உமைமா என்பவரின் மகள் ஸைனப் அவர்களை – அதாவது தமது மாமி மகளை – ஸைத்துக்கு ஹிஜ்ரி முதல் ஆண்டில் திருமணம் செய்து வைத்தார்கள். மிகவும் உயர்ந்த குலம் என்று பெருமை பாராட்டிய தமது குலத்துப் பெண்ணாகிய தமது மாமி மகளை ஒரு அடிமைக்குத் திருமணம் செய்து வைப்பதென்பது அன்றைய சமூக அமைப்பில் கற்பனை செய்தும் பார்க்க முடியாத புரட்சியாகும்.

ஜஹ்ஷ் உடைய மகள் ஸைனபுக்கும், ஹாரிஸாவின் மகன் ஸைத்துக்கும் நடந்த இத்திருமணம் என்ன காரணத்தினாலோ ஓராண்டுக்கு மேல் நிலைக்கவில்லை. அடிக்கடி அவர்களிடையே பிணக்குகள் ஏற்படலாயின. குடும்ப அமைதியே குலைந்து போகும் நிலை உருவாயிற்று. கடைசியில் ஸைனபை தலாக் கூறும் நிலைக்கு ஸைத் (ரலி) அவர்கள் ஆளானார்கள். இது பற்றி திருக்குர்ஆனும் குறிப்பிடுகிறது.
யாருக்கு அல்லாஹ் அருள் புரிந்து (முஹம்மதே!) நீரும் அவருக்கு அருள் புரிந்தீரோ, அவரிடம் "உமது மனைவியை உம்மிடமே வைத்துக் கொள்! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்" என்று நீர் கூறியதை எண்ணிப் பார்ப்பீராக! அல்லாஹ் வெளிப்படுத்த இருந்ததை உமது மனதுக்குள் மறைத்துக் கொண்டீர். மனிதருக்கு அஞ்சினீர்! நீர் அஞ்சுவதற்கு அல்லாஹ்வே தகுதியானவன்.
ஸைத் என்பார் அவரிடம் தன் தேவையை முடித்துக் கொண்ட போது (விவாகரத்துச் செய்த போது) உமக்கு அவரை மணமுடித்துத் தந்தோம். வளர்ப்பு மகன்கள் தம் மனைவியரிடம் தமது தேவையை முடித்துக் கொண்டால் (விவாகரத்துச் செய்தால்) அவர்களை (வளர்ப்புத் தந்தையரான) நம்பிக்கை கொண்டோர் மணந்து கொள்வது குற்றமாக ஆகக் கூடாது என்பதற்காக (இவ்வாறு செய்தோம்). அல்லாஹ்வின் கட்டளை செய்து முடிக்கப்பட வேண்டியதாக இருக்கிறது.(குர்ஆன் 33:37 )

நபி {ஸல்} அவர்களுக்கு ஸைனபை அல்லாஹ்வே மணமுடித்துத் தந்ததாக இவ்வசனம் கூறுகிறது.
இதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. வளர்ப்பு மகனை, மகன் எனக் கருதி மகனுக்குரிய எல்லா உரிமைகளும் வளர்ப்பு மகனுக்கு உண்டு என அன்றைய சமுதாயம் நம்பி வந்தது.
வளர்க்கப்பட்டவர், தனது மனைவியை விவாகரத்துச் செய்த பின் வளர்த்தவர் அப்பெண்ணை மணந்து கொள்ளலாம்; அது, மருமகளை விவாகம் செய்ததாக ஆகாது என்ற சட்டத்தை உலகிற்குச் சொல்ல வேண்டும் என்பது இத்திருமணத்திற்குரிய காரணம்.

நபி (ஸல்) அவர்கள் ஸைனப் மீது ஆசைப்பட்டு, ஸைதை விவாகரத்து செய்யச் சொன்னதாக இஸ்லாத்தின் எதிரிகள் சிலர் பிரச்சாரம் செய்து வருகின்றனர்.
ஸைனப் (ரலி) மீது நபிகள் நாயகத்திற்கு ஆசை இருந்தால் அவர்கள் கன்னிப் பருவத்திலேயே ஸைனபைத் திருமணம் செய்திருக்க முடியும். அவர்கள் தான் அப்பெண்ணிற்குப் பொறுப்பாளராகவும் இருந்தார்கள். ஆனால் அவர்கள் ஸைதுக்கே மணமுடித்துத் தருகிறார்கள்.
எனவே இறைவனின் நாட்டப்படியே இத்திருமணம் நடந்தது.
இளமையோடு இருக்கும் போது அவரை மணந்து கொள்ளாமல், பல வருடங்கள் ஸைதுடன் வாழ்க்கை நடத்திய பிறகு அவரை மணந்து கொண்டதற்கு உடல் ரீதியான காரணத்தைக் கூறுவது முற்றிலும் தவறாகும்.

ஸைத் (ரலி) தம் மனைவி ஸைனபை தலாக் கூற விரும்பியதும் அது பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் அவர் ஆலோசனை செய்ததும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தலாக் கூற வேண்டாம் என்று அவருக்குப் போதித்ததும் இந்த வசனத்தில் தெளிவாகக் கூறப்படுகிறது.
இதே வசனத்தில் இறுதிப் பகுதியில் அல்லாஹ் வெளிப்படுத்தக் கூடிய ஒன்றை உம் மனதிற்குள் மறைத்துக் கொண்டீர் மக்களுக்கு அஞ்சினீர் என்று இறைவன் கடிந்துரைக்கிறான்.
காலம் காலமாக மகனுடைய மனைவி என்று நம்பி வந்திருக்கும் போது சொந்த மருமகளாக அவளைக் கருதி வந்திருக்கும் போது அனுமதிக்கப்பட்ட பின்னரும் கூட அவர்களை மணக்கத் தயங்கவே செய்வர்.
மனைவியாகப் பாவித்து உடலுறவு கொள்ள அவர்களின் உள்ளம் எளிதில் இடம் தராது. தங்கள் உள்ளத்தில் அப்படி ஒரு எண்ணத்தை தலைமுறை,தலைமுறையாக வளர்த்துக் கொண்டு விட்டார்கள்.சமுதாயம் பரிகசிக்குமோ என்ற அச்சம் வேறு அவர்களின் தயக்கத்தை அதிகமாக்கும்.

உலகத்தின் விமர்சனத்தைப் பற்றிக் கவலைப் படாமல் பாரம்பரியப் பழக்கத்துக்கு எள்ளளவும் இடம் தராமல் அதைச் செய்து காட்ட நபிகள் நாயகம் (ஸல்) அவர்களே தகுதியானவர்கள் என்று கருதிய இறைவன் இதற்கு அவர்களையே தேர்வு செய்தார்ன்.
இதனால் சமுதாயத்தின் பலத்த எதிர்ப்புக்கு ஆளாக நேரிடும் என்பதையும் அதற்கடுத்த வசனத்தில் இறைவன் மறைமுகமாகச் சொல்கிறான்.
இறைத்தூதர்கள் இறைவனிடம் செய்திகளை எடுத்துச் சொல்ல வேண்டும், அவனுக்கு அஞ்ச வேண்டும், அல்லாஹ்வைத் தவிர வேறு எவருக்கும் அஞ்சக் கூடாது.(33:39)
எவருக்கும் அஞ்சலாகாது என்று இங்கே இறைவன் குறிப்பிடுவதிலிருந்து அஞ்சுவதற்குரிய ஒன்றாக இத்திருமணம் இருந்தது என்று அறியலாம்.
3.அரசியல் நோக்கத்தில் அமைந்த திருமணம் :-
அன்னை ஜுவைரிய்யா (ரலி) அன்னை மைமூனா (ரலி) அன்னை ஸஃபிய்யா (ரலி) அன்னை உம்மு ஹபீபா (ரலி) ஆகியோரின் திருமணங்கள் அரசியல் காரணங்களுக்காக அமைந்தது.
இம்மூவரையும் திருமணம் செய்து கொண்டதன் பின்னர் அவர்களைச் சார்ந்த பலர் இஸ்லாத்தை தாமாக முன்வந்து ஏற்றுக் கொண்டனர்.
நபி(ஸல்) கடைசி மனைவி மைமூனா (ரலி). அவரை திருமணம் செய்து கொண்டது முஸ்லிம்களுக்கு அரசியல் ரீதியாக பல நனமைகளை தந்தது.
பிற்காலத்தில் இஸ்லாத்திற்கு மாபெரிய வெற்றிகளை வாரிக்குவித்த காலித் பின் வலீத் (ரலி) அவர்கள் அத்திருமணத்திற்கு பின்னரே இஸ்லாமை தழுவினார். அவருடன் மற்றொரு பிரபலமான அம்ரு பின் ஆஸ் (ரலி) இஸ்லாமைத் தழுவினர். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) தன்னுடைய தோழர்களிடம் மக்கா தன்னுடைய ஈரல் துண்டுகளை நம்மிடம் வீசி விட்டது என்று கூறினார். இதற்கு ஒருவகையில் காரணமாக இருந்த மைமூனா அம்மையார் காலித் பின் வலீத் (ரலி) அவர்களின் சித்தியாவார்.
எனவே, பெருமானார் {ஸல்} அவர்களின் மீதும், இஸ்லாத்தின் மீதும் பலதார மணம் எனும் பெயரால் அவதூறு மலங்களை அள்ளிவீசும் அறிவற்ற சமூகத்தின் முன்பாக நாம் இறைவனின் வார்த்தை, இறைத்தூதர் {ஸல்} அவர்களின் வாழ்க்கையைக் கொண்டு அழகிய முறையில் தஃவா கொடுப்போம்.
மேற்கண்ட வசனத்தின் நிறைவில் "மேலும், எந்தத் தூதரும் அல்லாஹ்வின் அனுமதியில்லாமல் எந்த அத்தாட்சியையும் கொண்டுவந்ததில்லை; ஒவ்வொரு தவணைக்கும் ஒரு (பதிவு) ஏடு உள்ளது"
தவிர, "அல்லாஹு தஆலாவிடமிருந்து வந்த நபியாக அவர் உண்மையாகவே இருப்பின் அவரிடம் நாம் கோரிய அற்புதங்களில் எதையேனும் நமக்குச் செய்து காண்பிப்பது அவசியமாகும். அவர் தாமதிக்கவும் கூடாது என்று முஷ்ரிக்குகள் கூறினர்.
இதற்காக இறைவன் இந்த ஆயத்தின் இறுதி வசனத்தை அருளி, நபிமார்களில் எவரும் தன் தம் விருப்பத்திற்கு எந்த அற்புதத்தையும் செய்ய அனுமதிக்கப்படவில்லை. அவர்களும் அடிமைகள்தான், வழிபாடுள்ளவர்கள், நம்மால் போஷித்துப் பரிபக்குவப்படுத்தப் படுபவர்கள் என்பதாக இறைவன் கூறியுள்ளான்.
பொது மக்களது செய்கைகள் அல்லாஹுஆலாவுடைய (மஷிய்யத் என்னும்) நாட்டத்தைக் கொண்டு நிகழ்கின்றன. நபிமார்களது செய்கைகள் அவனது உத்தரவையும் அனுமதியையுங் கொண்டு நிகழ்கின்றன என்பது இந்த ஆயத்திலிருந்து தெரியவருகிறது.
"அவர் நபியாக இருப்பின் தவ்ராத். இஞ்ஜீல் வேதங்களில் கூறப்பட்டுள்ள பெரும்பான்மையான கட்டளைகளை மாற்றியிருக்க மாட்டார்" என்பதாக சன்மார்க்க விரோதிகள் கூறினார்கள்.
அதற்கு மறுமொழியாக இறைவன் ''ஒவ்வொரு தவணைக்கும் ஒரு எழுத்திருக்கிறது" என்ற வசனத்தை அருளினான். ஒவ்வொரு நேரத்துக்கும் ஒரு கட்டளை விதிக்கப்பட்டிருக்கிறது என்பது கருத்து. ஒவ்வொரு பொருளுக்கும் எழுதப்பட்டுள்ள ஒரு நேரத்தை அல்லாஹு தஆலா ஏற்படுத்தியுள்ளான். அதில் விதிக்கப்பட்டிருப்பதைப் பார்க்கினும் அதிகப்படுத்தப்படவும் மாட்டாது. குறைக்கப்படவும் மாட்டாது. முந்தவும் மாட்டாது. பிந்தவும் மாட்டாது என்றும் இவ்வசனத்துக்கு கருத்துரைக்கப்பட்டிருக்கிறது.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 79**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 44**

يَمْحُوْا اللّٰهُ مَا يَشَآءُ وَيُثْبِتُ ‌ ۖ وَعِنْدَهٗۤ اُمُّ الْكِتٰبِ
(எனினும்,) தான் நாடியதை (அதிலிருந்து) அல்லாஹ் அழித்து விடுவான். (தான் நாடியதை அதில்) நிலைத்திருக்கவும் செய்வான் - அவனிடத்திலேயே உம்முல் கிதாப் (மூலப் பதிவேடும்) இருக்கிறது. (குர்ஆன் : 13:39)
அல்லாஹ், தான் நாடியதை அழிப்பான் இன்னும் ஸ்திரப்படுத்துவான் என்ற வசனத்துக்கு பல கருத்துகள் கூறப்படுகின்றன. தவ்பாச் செய்பவரின் தீமையை அழித்து. அவற்றிற்குப் பதிலாக நன்மைகளை ஏற்படுத்துவான் என்பது கருத்தெனச் சிலர் கூறியிருக்கிறார்கள்.
ஹளரத் உமர்ஃபாரூக் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் கண்ணீருங் கம்பலையுமாக "நாயனே! (அஹ்லுஸ் ஸஆதத் என்னும்) மறுமையில் பாக்கியம் பெற்றவர்களில் என்னையும் சேர்த்து நீ எழுதி இருந்தால், அதிலேயே என்னை ஸ்திரமாக்கி விடுவாயாக.
(அஹ்லுஷ் ஷகாவத் என்னும்) மறுமையில் நிர்ப்பாக்கியம் உள்ளவர்களில் என்னையும் சேர்த்து நீ எழுதி இருந்தால், அதனை விட்டு என்னை அழித்து, பாவமன்னிப்பு பெற்றவர்களான அஹ்லுஸ் ஸஆதத்துமானவர்களில் என்னைத் தரிபடுத்துவாயாக.
நீ விருப்பப்பட்டதை அழிப்பவன். விருப்பப்பட்டதை ஸ்திரப்படுத்துபவன். உன்னிடத்தில் உம்முல் கித்தாபு இருக்கிறது " என்று பிரார்த்தித்த வண்ணம் திருக்கஃபாவை தவாஃபு செய்வது வழக்கம் என்பதாக ரிவாயத்து செய்யப்பட்டிருக்கிறது.
"மனிதனுக்கு முப்பது வயது மிச்சமாக இருந்து, இறைவனது கிருபை அவனை விட்டுத் துண்டிக்கப்படுமாயின், அவனது அம்முப்பது வயது மூன்று நாட்களாக மாற்றப்பட்டுவிடும்.
ஒருவனுக்கு வயதில் மூன்று நாட்கள் மட்டுமே மீதம் இருந்து, அவனுக்கு அவனது கிருபை சேருமாயின் அம்மூன்று நாள் முப்பது வருடமாக மாற்றப்பட்டுவிடும்" என்பதாக "அதரில்" கூறப்பட்டிருக்கிறது.(தாபியீன்களது சொற்களுக்கு அதர் என்று பெயர்).
மனிதர்களுக்குக் காவலாக நியமிக்கப்பட்ட கிராமன் காத்திபீன் என்ற மலக்குகள் எழுதி வைத்திருக்கும் பட்டோலையில் நன்மையோ தீமையோ இல்லாத செய்கைகளை அவன் அழித்துவிடுவான்.

அதாவது மனிதன் சொல்கிற செய்கிற எல்லாவற்றையும் எழுதி வைக்குமாறு அம்மலக்குகள் ஏவப்பட்டிருக்கிறார்கள். திங்கள் கிழமையிலும் வியாழக் கிழமையிலும் அம்மலக்குகள் தாங்கள் எழுதி வைத்திருப்பதை லௌஹுல் மஹ்ஃபூலுடன் ஒத்துப் பார்ப்பார்கள்.
நன்மைப் பயனோ தீமைப் பயனோ அளிக்கப்படத் தகாத காரியங்களை அழித்து விட்டு, இவ்விருவகைப் பயனில் ஏதேனும் ஒன்றுள்ளதை எழுதப்பட்ட பிரகாரமே இருக்கும்படி விட்டு வைப்பார்கள்."
“அவர்களுடைய பட்டோலையின் ஆரம்பத்திலும் இறுதியிலும் நன்மையான காரியங்கள் எழுதப்பட்டிருந்தால் இவ்விரண்டுக்கும் இடையிலுள்ள தீமைகளை அல்லாஹுதஆலா அழித்து விடுகிறான்.
முதலிலும் கடைசியிலும் நன்மைகள் இல்லாதிருந்தால் அப்பட்டோலையிலுள்ள தீமைகளை அழிக்காமல் அப்படியே ஸ்திரமாக இருக்கும்படி விட்டு விடுகிறான்."
லவ்ஹு என்பது நான்கு வகை.
முதலாவது ஒன்றை அழித்து மற்றொன்றை ஏற்படுத்துவது என்பதற்கு இடமில்லாமல், ஸ்திரமாகவுள்ளது. லவ்ஹுல் களாஇஸ் ஸாபிக்கி இதற்கு லவ்ஹுல் அக்லில் அவ்வலி என்றும் பெயர் கூறப்படுகிறது.
இரண்டாவது லவ்ஹுல் கத்ரி. இது லவ்ஹில் அக்லில் அவ்வலிலுள்ள குல்லியாத் என்னும் பிரதமவாதிகளை விபரிக்கிறதாக இருக்கிறது. இதற்கு லவ்ஹுன் னுஃபூஸின் நாத்திக்கத்தில் குல்லிய்யா என்றும் பெயர் கூறுகின்றனர்.
இன்னும் இவற்றின் காரணங்களைக் கொண்டு சம்பந்தப்பட்டுள்ளதற்கு லவ்ஹுல் மஹ்ஃபூல் என்று பெயர். இந்த உலகிலுள்ள யாவற்றையும் அதன் உருவம், கோலம், அளவு ஆகியவற்றைக் கொண்டு பதிவாகுபவற்றிற்கு லவ்ஹுன் னுஃபூஸில் ஜூஸ்இயத்துஸ் ஸமாவிய்யா என்று பெயர். இதற்கு ஸமாஉத் துன்யா (உலகின் வானம்) என்றும் கூறுகின்றனர்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 80**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 45**

وَاِنْ مَّا نُرِيَنَّكَ بَعْضَ الَّذِىْ نَعِدُهُمْ اَوْ نَـتَوَفَّيَنَّكَ فَاِنَّمَا عَلَيْكَ الْبَلٰغُ وَعَلَيْنَا الْحِسَابُ
(நபியே!) அவர்களுக்கு நாம் வாக்களித்தவற்றில் சிலதை (உம் வாழ் நாளிலேயே உம் கண்ணால்) நீர் காணும்படிச் செய்தாலும், அல்லது (அதற்கு முன்னரே) நாம் உம்மைக் கைப்பற்றிக் கொண்டாலும் (அதைப் பற்றி நீர் விசாரப்பட வேண்டாம்); உம்முடைய கடமையெல்லாம் (நம்முடைய கட்டளையை அவர்களிடம்) சேர்ப்பிப்பது தான்; (அவர்களிடம்) கணக்கு வாங்குதல் நம்மிடம் இருக்கிறது. (குர்ஆன் : 13:40)
அல்லாஹ் தலா தன் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் கடமையை எடுத்துரைக்கின்றான். சமுதாயத்துக்கு எடுத்துச் சொல்வதுதான் நபியின் பொறுப்பாகும்.
திருமக்காவில் உள்ள சன்மார்க்க விரோதிகளுக்கு வேதனை அனுப்புவதாகவும், அதிர்ச்சியை கொடுப்பதாகவும் நாம் வாக்களித்திருப்பதில் கொஞ்சத்தை உமது வாழ்நாளிலேயே உமக்கு நாம் காண்பிக்கலாம்.

அந்தத் தண்டனை நபி இருக்கும்போதே வர வேண்டும் என்ற அவசியமில்லை. பின்னாலும் வரலாம். அதற்காக நபி உண்மையாளர் அல்லர் என்று வாதிட முடியாது.ஏனெனில், தண்டனையை வழங்குவது இறைவனின் பொறுப்பே தவிர, இறைத்தூதரின் பொறுப்பன்று
ஏனெனில், எடுத்துரைப்பதே உமது பொறுப்பாகும். அதாவது உம்மை நாம் அனுப்பியது. இறைத்தூதை மக்களுக்கு எடுத்துரைக்க வேண்டும் என்பதற்காகத்தான் அந்தக் கட்டளையை நீர் சிறப்பாக நிறைவேற்றிவிட்டீர். எனவே, உம்மீது எந்தக் குறையும் இல்லை.
விசாரணை செய்வது நமது பொறுப்பே ஆகும்." அதாவது மக்களை விசாரணை செய்து தண்டனை அளிப்பது நமது பொறுப்பாகும்.
மற்றொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான்.
"நிச்சயமாக அவர்களின் மீட்சி நம்மிடமே உள்ளது. அவர்களை விசாரணை செய்வது நமது பொறுப்பாகும். குர்ஆன் (88-25,26)
மேற்கண்ட வசனத்தில் " நீர் காணும்படிச் செய்தாலும், அல்லது (அதற்கு முன்னரே) நாம் உம்மைக் கைப்பற்றிக் கொண்டாலும்" - என்று வசனத்தில் இறைவன் விதிவசம் பற்றிய கருத்தையும் தெரிவிக்கிறான்.

அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் செய்கின்ற செயல்கள் சுயமாக செய்கிறோமா? அல்லது விதிப்படி நடக்கிறதா? என்று உமர்(ரலி) அவர்கள் கேட்டார்கள்.
கத்தாபின் மகனே! எல்லாமே ஏற்கனவே எழுதப்பட்ட விதிப்படியே நடக்கின்றன. ஒருவர் பாக்கிய சாலியாக இருந்தால் பாக்கியம் பெறுவதற்கே செயல்படுகிறார், துர்பாக்கியசாலியாக இருந்தால் துர்பாக்கியமடையும் வகையில் செயல்படுகிறார் என்று நபி அவர்கள் விடையளித்தார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர்(ரலி) நூல்: திர்மிதி
அப்படியெனில் நாங்கள் எல்லாம் விதிப்படியே நடக்கிறது என்று எண்ணி செயல்படாமல் இருக்கலாம் அல்லவா? என்று சஹாபாக்கள் நபி அவர்களிடத்தில் கேட்டார்கள்.
அதற்கு நபி அவர்கள் இவ்வாறு பதிலளித்தார்கள். "நீங்கள் செயல்படுங்கள்! ஒவ்வொரு வரும் எதற்காக படைக்கப்பட்டுள்ளனரோ அவற்றை செய்ய வேண்டும். நூல்: புகாரி, திர்மிதி
அல்லாஹ் தன் திருமறையில்,
"நிகழும் நிகழ்ச்சியெல்லாம் அல்லாஹ்வின் அனுமதி கொண்டேயல்லாமல் (வேறு) இல்லை. அல்குர்ஆன் 64-11
பூமியிலோ, அல்லது உங்களிலோ சம்பவிக்கிற எந்தச் சம்பவமும் அதனை நாம் உண்டாக்குவதற்கு முன்னரே (லவ்ஹுல் மஹ்ஃபூள்) ஏட்டில் இல்லாமலில்லை, நிச்சயமாக அது அல்லாஹ்வுக்கு மிக எளிதானதேயாகும். அல்குர்ஆன் 57-22. இவ்வாறு திருமறை தெளிவாக கூறுகிறது.
மனிதன் எத்தகைய காரியங்கள் செய்தாலும் அல்லாஹ்வே அவனை செயல்படுத்துகிறான் என்பதை நபி அவர்களின் பொன்மொழிகள் சான்று பகர்கின்றன.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 81
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 46

اَوَلَمْ يَرَوْا اَنَّا نَاْتِى الْاَرْضَ نَـنْقُصُهَا مِنْ اَطْرَافِهَا ‌ؕ وَاللّٰهُ يَحْكُمُ لَا مُعَقِّبَ لِحُكْمِهٖ‌ ؕ وَهُوَ سَرِيْعُ الْحِسَابِ
பூமியை அதன் அருகுகளிலிருந்து நாம் (படிப்படியாகக்) குறைத்து வருகிறோம் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா, மேலும், அல்லாஹ்வே தீர்ப்பளிப்பவன்; அவன் தீர்ப்பை மாற்றுபவன் எவனுமில்லை! மேலும், அவன் கேள்வி கணக்கு கேட்பதில் மிகவும் தீவிரமானவன். (குர்ஆன் : 13:41)
குர்ஆனில் இன்னொரு இடத்தில், எனினும், இவர்களையும் இவர்களுடைய மூதாதையரையும், அவர்களுடைய ஆயுட்காலம் வளர்ந்தோங்கும் வரை சுகங்களை அனுபவிக்கச் செய்தோம்; நாம் (இவர்களிடமுள்ள) பூமியை அதன் அருகுகளிலிருந்து குறைத்து கொண்டு வருகிறோம் என்பதை இவர்கள் காணவில்லையா? இவர்களா மிகைத்து வெற்றிக் கொள்பவர்கள்? அல்குர்ஆன் 21:44
ஓரங்களில் குறையும் பூமியின் நிலப்பரப்பு சிறிது சிறிதாக கடலால் விழுங்கப்பட்டு குறைந்து வருவதை சமீப காலத்தில் விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர்.
காரணம், பூமியின் வெப்பம் நாளுக்கு நாள் அதிகரித்து வருவதால் பனிப்பாறைகள் உருகிக் கடலில் கலக்கின்றன. இதனால் கடலின் நீர்மட்டம் உயர்ந்து நிலப்பரப்பைச் சிறிது சிறிதாக விழுங்கிக் கொண்டிருக்கிறது.
ஓரங்களில் சிறிது சிறிதாக நிலப்பரப்பு குறைக்கப்பட்டு வருகிறது என்ற இந்த அறிவியல் கண்டுபிடிப்பு 14 நூற்றாண்டுகளுக்கு முன் திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ளது.இறைவனின் வார்த்தை என்பது நிரூபணமாகின்றது.
மேற்கண்ட கண்ட இந்த வசனங்களை படித்த பிறகே, தான் இஸ்லாத்தை வாழ்வியல் நெறியாக தழுவியதாக விஞ்ஞானியும் முனைவருமான திரு. சுப்பிரமணியன் (தற்போது முஹம்மத் முக்ஃதார்) அவர்கள் கூறியுள்ளார்கள். தன்னுடைய ஆராய்ச்சி பணிகளில் தான் சந்தித்த இஸ்லாமிய அறிவியல் உண்மைகளை புத்தகமாகவும் வெளியிட்டார்.
படம் : நமக்குத் தெற்கேயுள்ள இந்தியப் பெருங்கடற்பரப்பின் நீரடிப்படம். கடலடியில் என்னென்ன நிலப்பகுதிகள் மூழ்கியிருக்கக்கூடும் என்று கணிக்கலாம்.
சிந்து கங்கை ஆறுகள் மேலும் வகிடெடுத்து வருவது தெரிகிறது. இந்திய நிலப்பரப்பு கடல் விளிம்போரம் நூறு கிமீ வரைக்கும் நீர் மூழ்கலுக்கு உள்ளாகாமல் பரந்து விரிந்திருக்கிறது. வியக்கத்தக்க புவிக்கோளப்படம் ! நன்று உற்றுநோக்கப் பெரிதாக்கிப் பாருங்கள் !

மற்றோர் அறிவிப்பில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "பூமி குறைதல் என்பது சான்றோர்களும் மார்க்க அறிஞர்களும் நல்லோர்களும் மறைவதைக் குறிக்கும்" என்று கூறியுள்ளார்கள்.
முஜாஹித் (ரஹ்) அவர்கள், "அறிஞர்களின் மரணம்" என்று கூறினார்கள்.
கவிஞர் அஹ்மத் பின் ஃகஸார் கூறுகிறார்:
அறிஞன் வாழும்
இடமும் வாழும்
அறிஞன் மாண்டால்
அவ்விடமும் மாளும்
மழைத் துளி வீழும்
மண்ணே வாழும்
மழைவிழ மறுத்தால்
மண்ணது மாளும்.
இவற்றில் முதல் கருத்தே ஏற்றதாகும். அதாவது இணைவைத்தல் கொள்கைக்கு எதிராக ஒவ்வொரு பிரதேசமாக இஸ்லாம் வெற்றிபெறுவது என்ற இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் கருத்தே சிறந்ததாகும். விரிவுரையாளர் இப்னு ஜரீர் (ரஹ்) அவர்கள் இக்கருத்தையே தேர்வு செய்துள்ளார்கள்.
அதாவது இணைவைப்பாளர்களுக்கு வாக்களிக்கப்பட்ட வேதனை என்பதே உண்மையாகும். அவர்கள் வசிக்கும் பகுதிகள் ஒவ்வொன்றாக இறை நம்பிக்கையாளர்களின் கைக்கு மாறிக்கொண்டிருக்கின்றன நபி (ஸல்) அவர்கள் வாழ்ந்த காலத்திலேயே மக்கா வெற்றி கொள்ளப்பட்டது ஓர் உதாரணமாகும். இவ்வாறு அவர்களின் நிலப்பரப்பை அதன் சுற்றுப்புறங்களிலிருந்து நாம் கைப்பற்றி வருகிறோம் என்று அல்லாஹ் இந்த வசனத்தில் தெரிவிக்கின்றான்
இது நபி ஸல்) அவர்களின் காலத்தை அடிப்படையாகக் கொண்டு இந்த வசனத்திற்கு அளிக்கப்படும் விளக்கமாகும் இதன்றி பொதுவாக அறிவியல் ரீதியாக இந்த வசனத்திற்கு வேறொரு விளக்கம் அளிக்கப்படுகிறது.
அதாவது பூமியில் மனிதர்கள் வாழும் நிலப்பரப்பு படிப்படியாகக் குறைந்து வருகிறது. கடல் பூமியின் தரைப்பகுதியைச் சிறிது சிறிதாக ஆக்கிரமித்து வருகிறது. இதற்கு கடல்தளப் பரவல் (Sea Floor Spreading) என்று பெயர்.
கடலடி மலைத்தொடர் பகுதிகளில் கடல் தளம் உண்டாவதே இதன் பொருளாகும் கடல்தள மலைப் பகுதிகளிடையே கடலடிப் பாறை மண்டலம் உண்டாகி கடலடியில் பரவுகிறது.
இதை 1960ல் அமெரிக்க புவி இயற்பியலாளர் ஹாரி ஹெச் ஹெஸ் (1906-1959) என்பார் வெளியிட்டார் (இது மட்டுமன்றி மக்கள் குடியிருப்புப் பகுதிகளும் கடல்தளமாக மாறிவருவதும் கண்டறியப்பட்டுள்ளது) (பிரிட்டானிகா தகவல் களஞ்சியம்)
மற்றொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகிறான்: " உங்களைச் சுற்றி உள்ள பல ஊர்களை நாம் அளித்துள்ளோம். ( குர்ஆன் 46: 27) இந்த வசனம் மேற்கண்டதைப் படித்த பிறகு நம்மை வெகுவாக சிந்திக்க வைக்கிறது .

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 82
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 47

وَقَدْ مَكَرَ الَّذِيْنَ مِنْ قَبْلِهِمْ فَلِلّٰهِ الْمَكْرُ جَمِيْعًا يَعْلَمُ مَا تَكْسِبُ كُلُّ نَفْسٍ وَسَيَعْلَمُ الْكُفّٰرُ لِمَنْ عُقْبَى الدَّار
(நபியே!) இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் (இவ்வாறே பல) சூழ்ச்சிகளைச் செய்துகொண்டிருந்தனர்; எனினும் எல்லா சூழ்ச்சிக(ளின் முடிவுக)ளும் அல்லாஹ்விடமே இருக்கின்றன;
ஒவ்வோர் ஆத்மா சம்பாதிப்பதையும் அவன் நன்கறிவான்; மேலும், (மறுமையில்) எவர்களுக்கு நல்ல வீடு உரியது என்பதை காஃபிர்கள் சீக்கிரத்தில் அறிந்து கொள்வார்கள்.(குர்ஆன் : 13:42)
இந்த வசனம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஆறுதலளிப்பதாகும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கொலை செய்துவிட வேண்டும், அல்லது சன்மார்க்கம் தலையெடுக்கா வண்ணம் அதனை ஒழிப்பதற்கான இறுதிக் காரியத்தைச் செய்துவிட வேண்டும் என்று மக்கத்துக் குறைஷியர் தாருன் நத்வாவில் கூடிப் பேசினர்.
" (நபியே!) உம்மைச் சிறைப்படுத்தவோ, அல்லது உம்மைக் கொலை செய்யவோ அல்லது உம்மை (ஊரைவிட்டு) வெளியேற்றிவிடவோ நிராகரிப்போர் சூழ்ச்சிசெய்ததை நினைவு கூறுவீராக; அவர்களும் சூழ்ச்சி செய்து கொண்டிருந்தனர்; அல்லாஹ்வும் (அவர்களுக்கு எதிராகச்) சூழ்ச்சி செய்து கொண்டிருந்தான். சூழ்ச்சி செய்வோரில் எல்லாம் அல்லாஹ் மிகவும் மேன்மையுடையவன்.(குர்ஆன் : 8:30)
அவர்களும் விதவிதமாகத்தான் சூழ்ச்சி பண்ணிப் பார்த்தார்கள். அவர்களுடைய சூழ்ச்சி, மலைகளையே பெயர்த்துவிடக் கூடியவையாக இருந்தாலும் அவர்களுடைய ஒவ்வொரு சூழ்ச்சியையும் முறியடிக்கும் சூழ்ச்சி இறைவனிடம் இருந்தது. (இருக்கிறது). (குர்ஆன் 14:46)
இறைவன் அவர்கள் செய்த சூழ்ச்சியை அடியோடு பெயர்த்தெடுத்து அவர்களின் தலை மீதே விழ வைத்ததையும், அவர்கள் சுதாரிக்கும் முன் நினைத்துக் கூடப் பார்க்காத திசையிலிருந்து அவர்களுக்கு தண்டனை வந்ததையும் எடுத்துச் சொல்லுங்கள். (குர்ஆன்16:26)
இதுபோன்றே முற்காலத்து நபிமார்களது உம்மத்துகள் தங்கள் நபிமார்களைக் கொல்ல சதி செய்தனர் என்பதாக " இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் இப்படித்தான் சூழ்ச்சி பண்ணிக் கொண்டிருந்தார்கள். (குர்ஆன் 13:42)

ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை ஒழிப்பதற்காக நம்ரூத் சதி செய்தான். ஹளரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை ஒழிக்க ஃபிர்அவ்ன் சதி செய்தான். ஹளரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை ஒழிக்க யூதர்கள் சதி செய்தனர். ஆகவே, சன்மார்க்க விரோதிகளை ஒழிக்க இறைவனும் சதி செய்வான் என்ற விபரம் இந்த வசனத்தில் கூறப்பட்டிருக்கிறது.
(இவ்வாறு) அவர்கள் சூழ்ச்சி செய்தார்கள்; ஆனால் அவர்கள் அறியாதவாறு நாமும் சூழ்ச்சி செய்தோம். ஆகவே, அவர்களுடைய சூழ்ச்சியின் முடிவு என்ன ஆயிற்று என்பதை (நபியே!) நீர் கவனிப்பீராக! (முடிவு) அவர்களையும், அவர்களுடைய சமூகத்தார் எல்லோரையும் நாம் அழித்தோம்.(குர்ஆன் : 27:50,51)
அவர்களுடைய ஒழிப்புக்கு இறைவன் செய்யும் ஏற்பாட்டை அவர்கள் அறியவும் மாட்டார்கள், அதனை விட்டுத் தப்பித்துக் கொள்ளவும் அவர்களால் முடியாது என்ற விவரம் இந்த வசனத்தின் இறுதியில் முன்னறிக்கை செய்யப்பட்டிருக்கிறது
அடுத்த தொடர், "ஒவ்வோர் ஆன்மாவும் தேடிக்கொண்டதை அவன் அறிகின்றான்" என்று கூறுகின்றது. அதாவது உயர்ந்தோன் அல்லாஹ் அனைத்து இரகசியங்களையும் அந்தரங்கங்களையும் அறிகின்றான். ஒவ்வொருவருக்கும் அவர்களது செயலுக்கேற்ற பிரதிபலனை அவன் வழங்குவான்.
அடுத்த தொடரில், “மறுமையின் முடிவு யாருக்குச் சாதகமானது
என்பதை இறைமறுப்பாளர்கள் வெகு விரைவில் அறிந்துகொள்வர்" என்று அல்லாஹ் குறிப்பிடுகின்றான். அதாவது இறுதி முடிவும் கால சக்கரமும் இறை மறுப்பாளருக்கு சாதகமாக இருக்குமா அல்லது இறை தூதர்களைப் பின்பற்றியவருக்கு சாதகமாக இருக்குமா என்பதை அவர்கள் அறிந்து கொள்வர்.
உண்மை என்ன தெரியுமா ? இம்மையிலும் மறுமையிலும் இறைத் தூதர்களை பின்பற்றியவருக்கு முடிவு சாதகமாக இருக்கும். புகழும் அருட்கொடையும் அல்லாஹ்வுக்கு உரியவையாகும்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 83
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து ரஃது - இடி – 48

وَيَقُوْلُ الَّذِيْنَ كَفَرُوْا لَسْتَ مُرْسَلًا قُلْ كَفٰى بِاللّٰهِ شَهِيْدًا بَيْنِىْ وَبَيْنَكُمْ وَمَنْ عِنْدَهٗ عِلْمُ الْكِتٰبِ
(நபியே!) நீர் (இறைவனால் அனுப்பப்பட்ட) தூதர் அல்லர் என்று காஃபிர்கள் சொல்கிறார்கள்; எனக்கும், உங்களுக்குமிடையே சாட்சியாக இருக்க அல்லாஹ்வும், வேதஞானம் யாரிடமிருக்கிறதோ அவர்களும் போதுமானவர்கள்” என்று நீர் கூறிவிடுவீராக!
(குர்ஆன் : 13:43)
நபியே, நீர் ஆதாரங்களையும், அற்புதங்களையும் எடுத்துக் காட்டியும் அவர்கள் உம்மை ஏற்காமல் உம்மை நம்முடைய தூதரே அல்ல என்று கூறுகின்றனர்.
இவ்வாறு அவர்கள் கூறுவது பற்றி நீர் கவலையுற வேண்டாம். அல்லாஹ்வும், வேதம் வழங்கப்பட்டவர்களும் நீர் உண்மையான இறைத் தூதர் என்பதற்கு சாட்சியாளர்களாக இருக்கின்றனர்.
ஆகையால், அவர்களை நோக்கி, எனக்கும் உங்களுக்குமிடையில் ஏற்பட்டிருக்கும் இப்பிரச்சினையில் நான் உண்மையாகவே இறைவனின் தூதரா, அல்லவா? என்பதற்கு அல்லாஹ்வும் வேதம் வழங்கப்பட்ட யூதர்களும், கிறிஸ்தவர்களும் சாட்சிகளாக இருக்கின்றனர். அவர்களே போதும் எனக்கூறிவிடும்.
வேதம் வழங்கப்பட்ட யூத கிறிஸ்தவர்கள் தங்களுடைய வேதங்களில் எத்தனை மாறுதல்களைச் செய்த போதிலும் அவர்களுடைய மனச் சாட்சிப்படி அவர்கள் கூறுவதென்றால் எம்பெருமானார் (ஸல்) அவர்கள்தான் இறுதி நபி; இறைவனின் தூதர் என்பதை அவர்கள் மறைக்கவே முடியாது. அதனால்தான் உண்மையான வேத அறிவு உடையவர்களும் சாட்சி என இங்கு கூறப்படுகிறது.
"ஸைத் பின் அம்ரு பின் நுஃபைல் என்பவர்'ஆமிரிப்னு ரபீஆ'விடம் ஒருமுறை இப்படி சொன்னாராம்:
நான் ஒரு நபியை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன். அவர்
இஸ்மாய்லின் சந்ததியில் தோன்றும் நபி அவர் ஆக நெட்டையுமில்லை
ஆக குட்டையுமில்லை. முடி மிக அதிகமானவருமில்லை முடி மிக குறைந்தவருமில்லை. அவரது இரண்டு புஜங்களுக்கு இடையில் 'நபித்துவ முத்திரை இருக்கும்.
அவர் வரும் வரை நான் இருப்பேனா என்று தெரியவில்லை.அவரை நீ சந்திக்கும் பாக்கியம் கிடைத்தால் என் சலாம் கூறு நான் அவரை நபியாக ஏற்றுக் கொண்டதை எத்தி வைத்துவிடு."

நபி பிறப்பதற்கு பல ஆண்டுகளுக்கு முன்பே அப்துல் முத்தலிபின் உடல் அமைப்பைக் கண்டு எமன் நாட்டு யூதப் பண்டிதர் ஒருவர் உம் ஒரு கையில் ஆட்சியையும் மறு கையில் நபித்துவத்தையும் காண்கிறேன் என்று முன்னறிவிப்பு செய்த நிகழ்ச்சி:
நான் ஏமனில் தங்கிருந்போது ஒரு வேதப் பண்டிதர் என் உடல் அமைப்பை ஆராய்ந்துவிட்டு, “அப்துல் முத்தலிபே! உமது ஒரு கையில் அரசாட்சியையும் மறுகையில் நபித்துவத்தையும் நான் காண்கிறேன். அது பனூ ஸஹ்ரா குடும்பத்திலிருந்து ஏற்படலாம் என்று கருதுகிறேன்” என்றார்.
“அது எப்படி?” என்று நான் கேட்டேன்.
“எப்படி என்று தெரியாது. ஆனால் இது நடக்கும். உமக்குத் திருமணம் ஆகிவிட்டதா?
“தற்போது இல்லை.”
“அப்படியானால் நீர் ஊர் திரும்பியதும் அந்தக் குடுபத்தில் ஒரு பெண்ணை மணமுடித்துக் கொள்ளும்.”
அப்துல் முத்தலிப் மக்கா திரும்பி ஹாலா பின்த் வஹ்ப் என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார்கள். அப்துல்லாஹ் அவர்கள் திருமணம் செய்த ஆமினா பின்த் வஹ்ப் அவர்கள் பனூ ஸஹ்ரா குடும்பத்தில் உள்ளவர்கள்தான்.
பிறந்த அன்று...

மக்காவில் வாழ்ந்த ஒரு யூதன் , நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பிறந்த அன்றிரவு குறைஷிகளின் கூட்டத்தில் வந்து இன்றிரவு உங்களில் யாருக்காவது ஒரு குழந்தை பிறந்துள்ளதா? என்று கேட்க,
அல்லாஹ்வின் மீது ஆணையாக அப்படி ஒன்றும் நாங்கள் அறியவில்லையே என்றார்கள் குறைஷிகள்.

அவன் கூறினான்: "நான் கூறுவதை நன்றாகக் கவனியுங்கள். இன்றிரவு உங்களில் ஒரு நபி பிறந்துள்ளார். அவரின் இரு புஜங்களுக்கிடையில் ஒரு அடையாளம் இருக்கும். அதில் சில ரோமங்கள் இருக்கும்"
இதைக்கேட்டு அவர்கள் ஆச்சரியத்துடன் கலைந்து சென்றனர். தங்கள் இல்லம் சென்று மனைவிமார்களிடம் இதுபற்றி விசாரித்தபோது அப்துல்லாஹ்விற்கு ஒரு ஆண்குழந்தை பிறந்திருப்பதாகவும் "முஹம்மது" என்று பெயர் வைக்கப்பட்டிருப்பதாகவும் தெரிவித்தனர்.
அந்த யூதனிடம் தெரிவிக்கப்பட்ட போது அவன் வந்து பார்த்தான். அந்த குழந்தையின் முதுகில் நபித்துவ முத்திரையின் அடையாளம் இருப்பதைக் கண்டு மயக்கம் போட்டு விழுந்தான்.
மயக்கம் தெளிந்து எழுந்து கூறினான் : "அல்லாஹ்வின்மீது ஆணையாக! நபித்துவம் பனூ இஸ்ரவேலர்களிடமிருந்து எடுபட்டு விட்டது. குறைஷிகளே! உங்களுக்கு ஒரு மகத்தான ஆட்சி அதிகாரம் கிடைக்கப் போகிறது; அந்த செய்தி கிழக்கிலிருந்து மேற்குவரை பரவப் போகிறது.(دلايل النبوة للبيهقي) நபியின் நட்சத்திரம் உதயமானதைக் கூட நன்கு அறிந்திருந்த யூத அறிஞர்கள்

ஹஸ்ஸான் இப்னு தாபித் (ரலி)கூறுகிறார்கள்:நான் ஏழு எட்டு வயது சிறுவனாக-சொல்வதைப் புரிந்துகொள்ளக்கூடிய பருவத்தில் இருக்கும்போது
ஒருநாள் ஒரு யூதன் யத்ரிபின் (மதீனாவின்) வீதியில் நின்று அலறினான்: ''ஓ யூதர்களே! என்ன ஆயிற்று உனக்கு? (ஏன் இப்படி கத்துகிறாய்?) என்று மற்ற யூதர்கள் ஒன்று கூடி வினவினர்.
'' இந்த இரவில் பிறக்கும் 'அந்த குழந்தைக்கான'வின்மீண் வானில் தோன்றிவிட்டது''என்றான்.
ஆமினாவின் பிரசவத்தை நேரில் கண்ட ஒரு பெண்மணியின் வாக்குமூலம்:
"அன்று இரவில் இல்லத்திலிருந்த அனைத்தும் ஒளிர்ந்தன; வின்மீன்கள் எங்கே அவை என்மீது விழுந்து விடுமோ என்று நான் எண்ணுகிற அளவுக்குமிகநெருக்கமாகவந்தன:
முன் வேதங்களில் முன்னறிவிப்பு செய்யப்பட முத்தான நபி:
ஏதஸ்ஸ மின்னந்தரே மிலேச்ச ஆச்சார்யண ஸமன்வித மஹாமத் இதுக்கியாத சிஷ்ய சாகா ச மன்வித .ஓர் அன்னிய நாட்டில் ஓர் சீர்த்திருத்தவாதி தன் சீடர்களுடன் வருவார். அவர் பெயர் மஹாமத். அவர் பாலைவனத்தைச் சார்ந்தவராக இருப்பார். (பவிஷ்ய புராணம்: பாகம் 3, சூத்திரம் 3, சுலோகம் 5-8)
அந்த சீர்திருத்தவாதி மற்றும் அவரைப் பின்பற்றுவோரின் தன்மை குறித்து இவ்வாறு உள்ளது:
லிங்க சேதி சிகா ஹீன சமச்சுருதாரி சதா ஷக உச்சலாபி ஸாவ பட்ஷீ பவிஷ்யதி ஜனோமம...
அவர்கள் லிங்க சேதம் சுன்னத் செய்திருப்பார்கள்;தலையில் குடுமி இருக்காது; தாடி வைத்திருப்பார்கள்; சப்தம் போட்டு (பாங்கு சொல்லி) அழைப்பார்கள். முஸ்லிம் என்று அறியப்படுவார்கள். (பவிஷ்ய புராணம்: பாகம் 3, சூத்திரம் 3, சுலோகம் 25)
பைபிளில் பெருமானார்:

ஏசுனாதர் தன் சீடர்களுக்கு சொன்னதாக பைபிளில் (யோவான் அதிகாரம் 16 வசனம் 7-13 வரை) வந்துள்ளது:
''நான் உங்களுக்கு சொல்வது உண்மை. நான் போவதே உங்களுக்கு நல்லது. போகாவிடில் தேற்றரவாளர் உங்களிடம் வரமாட்டார். நான் போனால்தான் அவரை உங்களிடம் அனுப்புவேன்..''.
''நான் உங்களுக்கு சொல்லவேண்டியவை இன்னும் பல உண்டு.ஆனால் அவற்றை உங்களால் தாங்க முடியாது. உண்மையின் ஆவியானவர் வந்தபின் உண்மையை நோக்கி உங்களை வழி நடத்துவார். அவர் பேசுவதை தாமாக பேசுவதில்லை; கேட்பதையே பேசுவார். வரப்போகிறவற்றை உங்களுக்கு அறிவிப்பார்.''
மூஸா (அலை) கூறியதாக ஒரு வசனம் பைபிளில் உண்டு. (உபாகமம் 18 அதிகாரம் 18 வசனம் 15):
''உன் தேவனாகிய கர்த்தர் உன் மக்களில் நின்றும் என்னைப்போல் ஒரு தீர்க்கதரிசியை உனக்காக ஏற்படுத்துவார். அவருக்கு செவிமடுப்பாயாக''
இவ்வாறு தங்களின் வேதங்களில் முன்னறிவிப்பு செய்யப்பட்டிருப்பதை வேதக்காரர்கள் நன்கு அறிவார்கள்
الذين آتينهم الكتاب يعرفونه كما يعرفون ابنائهم
''ஒரு தந்தை தன் பிள்ளையை நன்கு அறிவதைப் போல வேதக்காரர்கள் நபியை நன்கு அறிவார்கள்.''
இது எவ்வளவு பெரிய உண்மை என்பதை வரலாற்றைப் வாசிக்கிற எல்லோரும் அறிவார்கள்.
அப்துல்லாஹ் இப்னு சலாமின் வாக்குமூலம்:
அப்துல்லாஹ் இப்னு சலாம். யூதப் பண்டிதர். வேத ஞானங்களைக் கரைத்துக் குடித்தவர். நபி மதினாவுக்கு வந்தபோது உடனே இஸ்லாத்தை தழுவினார். அதன் பிறகு சுவனத்தைக் கொண்டு சுபச் செய்தியும் சொல்லப்பட்டார்.
உமர்(ரலி) அவர்கள் ஒருமுறை கேட்டார்கள். வேதக்காரர்களாகிய நீங்கள் உங்கள் மகனை அறிவதைப் போல இந்த நபியை நன்கு அறிவீர்களா? என்று கேட்டதற்கு அவர் சொன்ன பதில்: '' ம்ம்.. அதை விட அதிகமாகவே அறிவோம்.
சிரியா துறவியின் வாக்குமூலம்:
சிரியாவில் ஒரு துறவியை சந்தித்து சில அரபுகள் பேசிக் கொண்டிருந்தபோது ''உங்கள் குலத்திலிருந்துதான் இறுதி நபி வருவார்; அவர் பெயர் முஹம்மது. அவரைப்பின்பற்றினால் வெற்றி பெறுவீர்கள்'' என்று அவர் சொன்னதைக் கேட்டு நாடு திரும்பிய அவர்கள் தங்களுக்குப் பிறந்த ஆண் குழந்தைகளுக்கெல்லாம் ''முஹம்மது'' என்று பெயர் வைத்தனர். [ 17/111 ج -273/ح المعجم الكبير للإمام الطبراني
அக்தம் இப்னு சைஃபி

நபியவர்களின் வருகை குறித்து கேள்விப்பட்ட அக்தம் இப்னு சைஃபி தமீமி என்பவர் அதுபற்றி விசாரித்து வர தன் மகனை அனுப்பினார். திரும்பி வந்து மகன் கூறினார்: அவர் நற்குணங்களை ஏவுகிறார்; தீமைகளை தடுக்கிறார்'' என்று.
உடனே அக்தம் தன் மக்களை ஒன்று கூட்டி மக்களே! இவர்தான் நாம் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிற இறுதி நபி. இவர் மீதுள்ள அன்பினால் தான் சுஃப்யான் பின் மஜாஷிஃ தன் மகனுக்கு முஹம்மது என்று பெயரிட்டார். أسقف نجرانஎன்பவர் இந்த நபியின் வருகை குறித்துத்தான் அடிக்கடி பேசுவார். எனவே இவரை பின்பற்றுவதில் நீங்கள் முதன்மையாளரகளாக இருங்கள். பிந்திவிடாதீர்கள்.
அல்லாஹ் நன்கு அறிந்தவன்.
குறிப்பு :- அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் ( விஞ்ஞானத் தப்ஸீர் ) ஸூரத்து ரஃது - இடி - இத்துடன் நிறைவு பெறுகிறது.

